தேகாதிகளைத் தமக்குவேறென்றறிந்து நீக்கித் தம்மையுந் தரிசித்துத் திருமேனிகொண் டெழுந்தருளிவந் துணர்த்தின தம்பிரானார் தம்மிடத்திலேநின்று பிரகாசிக்கிற முறைமையுந் தாமறியப்பட்டு—தம்மினிலப்படுவரோ ரிருவர்=தம்மிடத்திலே யநாதியே தோன்றாமல்நின்று நடத்திப் பாசமாக்கி யந்தப் பக்குவத்திலே யிப்படித் தரிசிப்பித்த விஞ்ஞானநேயங்களாகிய சத்திசிவமான விரண்டுமுதலுந் தோன்றுகிறதும,—நீக்கிநிலையாகத்தலைப்படுவா தாமத்தலை=இப்படித் தரிசிக்கிறேமென்கிறதன்னுடையசுட்டானபோதத்தைவிட்டு அஞ்ஞானத்திலே பொருந்திநிற்கிலப்பொழுதே யந்தரூபசொரூபமாகிய சிவமுங்கூடி யந்தச் சிவமாகியே பிரகாசியாநிற்பர். (உ)

இந்தவவதாரத்தை யடியேனுக்குக் கடாக்ஷித்தருளவேணுமென்ற மாணவகனைநோக்கி யருளிச்செய்கிறார்.

என்னறிவு சென்றளவில் யானின் றறிந்தபடி
யென்னறிவி லாரறிக வென்றொருவன்-சொன்னபடி
சொல்லக்கேளென்றொருவன் சொன்னானென் னக்கதனைச்
சொல்லக்கே ளுன்னகத்துச் சொல.

இ-ள், என்னறிவு—சொல்=ஆசாரியனனுக்கிரகத்தாலே யென்னுடைய பசுஞானம்போனவளவில் நானந்தவவதாரத்திலே நின்றனுபவிக்கிறபடி யெப்படியெனில்? பசுஞானம்போய்ச்சிவஞானத்திலே யபேக்ஷையுண்டானவர்க ளறியுங்களென்று ஒரு பரமாசாரியனருளிச்செய்தபடியே சொல்லக்கேளென் றெனக்கொரு பரமாசாரியனென்னுடைய பக்குவத்துக்கீடாகப் பாரம்பரியம்போலவோருபாயமாக வருளிச்செய்தான், அந்த வவதாரத்தை யந்தமுறைமையிலே நான்சொல்லமாணவகனே நீ புத்திபண்ணிக்கேட்பாயாக. (௩)

ப்சுஞானமபோய்ச சிவஞானத்திலேநின் றநுபவித்தபடியேகேளென்றாசாரிய னருளிசசெய்கையா லாசாரியனுமானமாக்கனி லொருவனேயென்ற யாணவகனைநோககி யருளிசசெய கிறார்.

அகளமய மாயநின்ற வம்பலத்தெங் கூத்தன்
சகளமயம போலுலகிற றங்கி - நிகளமா
மாணவ மூல மலமகல வாணடனனகாண்
மாணவக வெனனுடைய வநது.

இ-ள் அகளமயமா நினற வமபலத்தெங்கூத்தன சகளமயமபோலுலகிறறங்கி = திருவமபலத்தே ஞானமயமாயாநந்த நிருத்தஞ்செயதருளுகிற வெமமுடைய சுவாமி தனனுடைய காருணணியத்தின மிகுதியாலே யெனனுடைய பிறவித்துனபத்தைபபோககும பொருட்டாகவெனககுஞானககணணிலலாமையினாலே யூனககணணுககுத்தோனற விலஙகு சாதிகளை யபாயமாகபபாரவையிட்டுப பாரவை பிடிபபாரைபபோலச சாவமுநதனககுத்த திருமேனியாணடியா லெனனைபபோலச சகளீகரித்தாறபோல விசுவத்தி லொருதேகிபோலத்தோனறி - நிகளமா மாணவமூலமலமகலவாணடனனகாண மாணவகவெனனுடைய வநது = மாணவகனே, ஆனமாயையும மாயாதேகத்தையுங கூட்டிய பிணிககுககாரணமான விலஙகாகியகனமமுணடாமபடி நிறகிற வாணவமலமாகிய மூலமலம விட்டுபபோமபடி யாகியேயெனனைவிட்டு நீஙகாமலநினறு மிபபொழுது பககுவபபட்ட வெதாத்திலே யிபபடித திருமேனிகொணடெழுந்தருளிவநது எனனுடைய பிறவிநோயகெடோக வுபாயமாகவே அவனே சஙகாரஙகளிறுலே பேதித்தடிமைகொளளும பொருட்டாகவிபபடி யருளிகசெயதொழிந்து வாக்குமனாதீதகோசரமாயுள்ளசிவ ஞன்மாவாரவரேனே, (ச)

இப்படிப்பட்டவிவன் திருமேனிகொண்டிரக்ஷிக்கவேண்டுமோ தானே யிரக்ஷிக்கமாட்டானோவென்ற மாணவகனைநோக்கி யருளிச்செய்கிறார்.

ஆகமங்க ளெங்கே யறுசமயந் தானெங்கே
யோகங்க ளெங்கே யுணர்வெங்கே - பாகத்
தருள்வடிவுந் தானுமா யாண்டிலனே லந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு

இ-ள். ஆகமங்களெங்கே - பேசு = எனக்கநாதியே தொடங்கி விடியாமலிருக்கின்ற பேரந்தகாரமான வாணவமலம் பக்குவப்பட்டபடியறிந்து பரமேசுரன் தன்னுடையவருளாலே திருமேனிகொண் டெழுந்தருளிவந்து என்னுடைய மலமாயாதி கன்மங்களையும் விடுவித்து என்னையு மென்னுடைய சுதந்தரவீனத்தையு மறிவித்துத் தன்னுடைய வடிமைகொண்டு ரூபசொரூபங்களையு மெனக்கேறக்கத் தெளிவித்துத் தன்னுடைய பரமானந்தபோகத்திலே யென்னைத் திருத்தியடைவித்து அடிமைகொண்டிலனாகில் அவனுடைய எல்லைப்படாத சொரூபத்தை யறியவல்லாரார், அதனை யநாதியே சொல்லப்பட்ட வாகமங்களு மதிலே வகுப்புண்டவாறு சமயங்களு மந்தச்சமயங்களில் முடிந்தபொருளின யோகங்களு மிவற்றை யறியுந்தக்க விவேகஞானங்களு மென்செய்யவற்று, இதனை விசாரித்துச்சொல்லாய் ()

ஆனால் சாத்திரத்தால் பிரயோசன மொன்றுமில்லையோவென்ற மாணவகனைநோக்கி யருளிச்செய்கிறார்.

சாத்திரத்தை யோதினர்க்குச் சற்குருவின் றன்வசன
மாத்திரத்தே வாய்த்தவளம் வந்துறுமே - யார்த்தகடற்
றண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் தணிந்திடுமோ
தெண்ணீரமை யாயிதனைச் செப்பு.

இ-ள். சாத்திரத்தை யோகினாகச் சற்குருவின்றன் வசனமாத்திரத்தே வாய்த்தவுளம் வந்துறுமே = உபதேசமின்றியே சாத்திர மாத்திரமே யோகினால் திருமேனிகொண்டெழுந்தருளி வந்த ஞானசாரியன் கருணையாலே யுபதேசிக்கத்தக்க சத்தான வாரத்தையிலே பெரிய பிரயோசனமுண்டாகமாட்டாது. அதெனபோலவெனில், - ஆர்த்தகடற்றண்ணீர் குடித்தவர்க்குத்தாகந்தணிந்திடுமோ தெண்ணீர்மையாயினைச் செப்பு = ஆரவாரத்தையுடைய கடலிலநீர் பெரிதென்றினை மிகவுங்குடித்தாலுமொருசற்றுந் தாகந்தணியாது, அந்தக்கடலினீர் மேகத்தின் கைப்பட்டுவந்தபொழுதே குறைந்தசலத்திலே மிகுந்ததாகந் தணியாநிற்கும் அதுபோலச் சாத்திரமுங் குருமுகத்தாலே பெற்றுலொழிந்து பிரயோசனமாகாது, தெளிந்த நீர்மையினையுடையா யிதற்குச் சந்தேகமுண்டாயிற்சொல். (௬)

ஆசாரியனுமெமைப்போல வோருடம்பிலே நின்றதற்குத்தக்க கிருத்தியங்களைச்செய்து நிற்கச்செய்தேயும் ஆன்மாக்களுடைய மலங்களைப்போக்கிச் சுத்தஞானத்தைப் பிரகாசிக்கவல்ல சாமாத்தியத்தை யுடையனேவென்று மையுற்பட்ட மாணவகனை நோக்கி யிதனை யினனமும் விளங்கவருளிச்செய்கிறார்.

இன்று பசுவின மலமனறே யிவ்வுலகி
னின்ற மலமனைத்து நீக்குவதிங் - கென்று
முருவுடையா னன்றே யுருவழியப்பாயு
முருவருள வல்லா னுரை

இ-ள். இன்று பசுவின் மலமென்றே யிவ்வுலகின்ற மலமனைத்து நீக்குவதிங்கு = இந்தலோகத்தி லெல்லாமலங்களையுமிப்பொழுது பசுவின் மலத்தாலல்லவோ போக்கப்பட்டது,—

என்றாலுரு வுடையானன்றே யுருவழியப்பாயுமுரு வருள வல்லா னுளா = ஆனால் அநாதியே கூடிப்போதுகிற தேகாதிகளா னது பக்குவப்பட்ட வான்மாக்களுக்கில்லை யாயவிம்மெப்படி பொ ருந்தப்பட்ட சுத்தரூபமான ஞானத்தைப் பிரகாசிக்கவல்ல சாமார்த்தியந் திருமேனிகொண் டெழுந்தருளிவந்த வாசாரியனுக் கொழிந்து வேறொருவர்க் குண்டாகிறசொல். (எ)

இப்படிக்கொத்த ஞானாசாரியன் பிரசாதத்தைப்பெற்றவர் களபெருமை யருளிச்செய்கிறார்.

கண்டத்தைக் கொண்டு கரும முடித்தவரே
யண்டத்தி னப்புறத்த தென்றுதே - யண்டத்தி
னப்புறமு மிப்புறமு மாறிவுஞ் சென்றறியு
மெப்புறமுங் கண்டவர்க ளின்று.

இ-ள், கண்டத்தைக் கொண்டு கரும முடித்தவரே = அநாதியே பூரணனாயத் தோன்றாமல்நின்ற சிவன் காருண்ணி யத்தினாலே நம்மைப்போலே யெழுந்தருளிவந்த வாசாரியமூர்த் தியையு மவனாலே யிதுகாணவல்லவா யிருந்ததென்றுகண்ட தன்னு டைய வுடம்பையு மிந்தவுடம்பை வேறென்றறிவிக்க வறிந்த தன்னையுமாகப் பதி - பசு - பாசமென்று சொல்லப்பட்ட விந்த மூன்றுபொருளையுங்கண்டு வுட்கொண் டதனாலே கன்மத்தை முடித்தவர்களே (இதனாற் கன்மத்தை முடித்தபடி யென்னெ ன்னில் கன்மமானது சஞ்சிதமென்றும் பிராரத்தமென்று மாகா மியமென்று மூன்றுவகைப்பட் டிருக்கையாலிதனை யாசாரிய னாலே தீக்கையிலே யத்துவாசோதனை பண்ணுகையினாலே சஞ் சிதமான கன்மத்தையும் தேகமுள்ளளவும் பிராரத்தமுண்டா கையாலிந்த தேகத்துடனே கூடப்பிராரத்த மானகன்மத்தை யும் அவனருளிச்செய்த வுபாயத்திலே தானின்று மாகாமிய கன்மமேறாமலும் போகவினைத்தவஞானிகள்) அண்டத்தினப்

புறத்தின்றே = அந்த ஞானசொரூபத்தை யண்டத்துக் குள்ளேயென்றும் புறம்பேயென்றுங் கொள்ளாமல் - அண்டத்தினப்புறமுமிப்புறமுமா ரறிவரென்றறியும் = அந்த ஞானத்தத்துவாதீதமாயிருக்கிற முறைமையு மாத்தத்தத்துவங்களுக்குத் தத்துவமாய் நிற்குமுறைமையு மான்மாக்களுக்குக் காணமாவா நிற்கு முறைமையுமுணர்ந்து தாமு மிந்தப்பரிபூரணமான ஞானமே யாய்நிற்கவே யவர்களுக்கிந்த ஞானத்தினைக்கியத்தாலே யிப்படியானேமென்கிற கருத்துமழியாமனிற்கும், அப்பொழுதேயவர்கள் சிவமாயே நிற்பார்கள்,—எப்புறமுங் கண்டவர்களின்று = அவர்களே இப்பொழு தெல்லாப்பொருள்களையு முணர்ந்து பரிபூரணமாய்நிற்கிற கலியாணர்கள். (அ)

அந்தச் சிவசொரூபந்தா னெப்படியிருக்குமென்ற மாணவகனை நோக்கி யருளிச்செய்கிறார்.

அன்றுமுத லாரேனு மாளா யுடன்றுகிச்
சென்றவர்க் கின்னதெனச் சென்றதில்லை-யின்றிதனை
யெவ்வா றிருந்ததென றெவ்வணமே சொல்லுகே
னவ்வா றிருந்தது.

இ-ள் அன்றுமுதலாரேனு மாளாயுடன்றுகிச் சென்றவர்க்கு மின்னதெனச் சென்றதில்லை = அநாதியே தொடங்கி யீஸ்வரனுடைய ஏவலினாலே சிருஷ்டி திதிகளுக்குக் கர்த்தாவுமாய்ப் பின்பு சங்காரகாலத்திலே யீஸ்வரனிடத்திலே கூடத்தக்க பிரம விஷ்ணுக்களு மவனுடைய வுண்மையான சுரூபமிப்படியே யிருக்குமென்று மின்னளவுந் தெரிந்ததில்லை,—இன்றிதனை யெவ்வாறிருந்ததென றெவ்வண்ணஞ்சொல்லுகே னவ்வாறிருந்தது = அவர்களாலு மறிதற்கரிய விந்தப்பொருளை யிப்பொழுதெப்படி யிருக்குமென்று மெந்தரூபத்தையுவமித்துச்சொல்லுவே னந்தப்

பொருளை யாவர் சிலர்கூடி யநுபவித்தவர்களுக் கெப்படியிருந்ததோ வப்படியே யிருக்கும். (௯)

இன்னமு மிதனைவிளக்க வருளிச்செய்கிறார்.

ஒன்றுங் குறியே குறியாத லாலதனுக்
கொன்றுங் குறியொன்றி லாமையினா - லொன்றோ
டுவமிக்க லாவதுவுந் தானில்லை யொவ்வாத
தவமிக்கா ரேயிதற்குச் சான்று.

இ-ள். ஒன்று—சான்று = இந்தப்பொருளுக்காகியே தொடங்கித் தனிப்பிரித்துணில்லாம லதுவதுவாய் நிற்கிறதே யடையாளமாதலா லிதுவொழிந்த மற்றப்பொருளுக்கு வேறோ ரடையாளமுமில்லையாகையாலே யொருபொருளுடனுவமித்துச் சொல்லுதற் கிதற்கொப்பான தொருபொருளுமில்லை, ஆதலா லிப்பொருளாகியே யிரண்டறநிற்கு முறைமைபோல விடை படாதே யிரண்டறநிற்குஞ் சிவாநுபவத்தையுடைய சிவயோகிகளே யிதற்குச்சாக்ஷி. (௰)

இப்படிப்பட்ட ஞாதாக்களுக்குப் பிராரத்தத்தாலே தேக முள்ளளவு மிந்திரியாதிகள் சேஷியாதோ? இவர்களிடைவிடா மற் சிவனை யநுபவிக்கிறபடி யெப்படியென்ற மாணவகனை நோக்கி யருளிச்செய்கிறார்.

ஆற்றா லலைகடற்கே பாய்ந்தநீ ரந்நீர்மை
மாற்றியவ் வாற்றான் மறித்தாற்போற் - றேற்றிப்
புலன்களைப் போதம் புறம்பொழியு நந்த
மலங்களற மாற்றுவிக்கும் வந்து.

இ-ள். ஆற்றாலலைகடற்கே பாய்ந்தநீரந்நீர்மை மாற்றியவ் வாற்றான்மறித்தாற்போல் = ஆற்றாலேசென் றலையையுடைய)

கடலிலே கூடியநன்னீர் கடல்நீருடனே யொன்றாய்த்தன் தன்மைகெட்டு மீண்டுமந்தவாற்றாலே நெடுந்தூரமெதிர்த்தாலு முன்புபோல நன்னீராகாமல் நந்தவுப்புநீரேயானாற்போல,— தோற்றிய புலன்களெனப் போதம் புறம்பொழியும் = ஞானத்தாலே சிவனைக்கூடிச் சிவமாயிருக்கிற சிவயோகிகளுக்குப் பிராரத்தத்தாலே யனுபூதியிருந்தாலுங் கண்டவர்களுக்கு மிந்திரியங்கள் சீவிப்பதுபோலத்தோன்றி யவர்களுக்குச் சுசுரூபத்திலைக்கியத்தாலே பசுகரணங்கூடாமல் சிவகரணமே பிரகாசியாநிற்கும் — கந்தமலங்களற மாற்றுவிக்கும் வந்து = இவ்வளவேயன்றியுந் தரிசனமாத்திரத்திலே யவர்கள் கருணையானது நம்முடையமலங்கள் நில்லாதபடியும்போக்கி நம்மையுமிரக்ஷியாநிற்கும் (௧௧]

இதற்குப் பிரமாணமுண்டோவெனில், சிவகரணம் பிரகாசித்த சிவஞானிகளிடத்திலே விளைந்த விசேஷங்களை யொரு செய்யுளிலே பல பிரமாணங்களையு மருளிச்செய்கிறார்.

பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதுங்
காலனை யன்றேவிக் கராங்கொண்ட - பாலனை
மரணந் தவிர்த்ததுவு மற்றவர்க்கு நந்தங்
கரணம்போ லல்லாமை காண்

இ - ள் பாலை—காண் = சிவனுடைய வருளாலேசிவனைப் பெற்ற நாயனமார் பாலைநிலம் நெய்தல் நிலமாகப்பாடியதும், பாம்புகடித்துமரித்தவன் பிராணனைப்பெற்றெழுந்திருக்கும்படி பாடியதும், பக்குவத்திலே காலனையேவி முதலைப்பிடித்து மரித்த புதல்வனைக் காலநரைப்போக்கி யழைப்பித்ததுவும் மாணவகனே? யவர்களுக்கு நம்மைப்போலப் பசுகரணமாக வேசிஷியாமல் சிவகரணமாகவே யிருத்தலால்காண். (௧௨]

இந்தவுத்தமம் பெற்றவர்களெல்லார்க்கு மிப்படி விசேஷஞ் செய்யுமோவென்ற மாணவகனை நோக்கி யிருந்த சத்திநிபாத முடையவர்க்கே யிவையுண்டாமென் றருளிச்செய்கிறார்.

தூங்கினரைத் தூய சயனத்தே விட்டகற்றின்
றூங்களே சட்ட வுறங்குவர்க - ளாங்கதுபோ
லைய னருட்கடைக்க ணுண்டதற்பி னப்பொருளாய்ப்
பைய விளையுமென்பர் பார்.

இ - ள். தூங்கி—பார் = சுத்தக்கவேதனைகளிலே மிகவு மொத்துண்டாரொருத்தனுக்கு கறிகருவிகள் நீங்கி மயக்கம்வந்தபி த்தகாலத்திலவனளவி லன்புடையவர்கள் நன்றாக்கப்படுத்த சயனத் திலே யவர்கள் கூடியபின் தன்னையும் பிரபஞ்சத்தையுமறக்கத் தக்க பேருறக்க மவர்கள் கூட்டவேண்டுவதன்றியே தன்னிட த்திலே யதுதானே யுண்டாகாநிற்கும். அந்த முறைமைபோ லச, சரிதைகிரியாயோகங்களின் முற்றுதலாலே மிருந்த சத்திநி பாதமுண்டாயவர்களந்த மூன்றுபாதத்தையு நிகழ்த்திப் பிரபஞ் சத்தையும் விட்டு ஞானத்திலே யபேக்ஷை யுடையாரென்னை யிரக்ஷிக்கைக்கு ஞாநாசாரியனை யெங்கே பெறுவேனென்று மிக்கத் தேட்டத்துடனே சென்றடைய அவன்மீது ஆசாரியனு மிருந்தவனை வைத்து ஞானதீக்ஷாக்கிரமங்களிலே மலமாயா கன்மங்களைப்போக்கி யான்மா விறுண்மையையுணர்த்தி யிவ னுடைய சுதந்தரவீனத்தையுங்காட்டி ஞானத்தையுந் தரிசிப்பி த்து இதிலே யொருத்தமையாகியபின்னந்தஞானத்தி னேகதேயத் தாலே தன்னைம் பிரபஞ்சத்தையு மறப்பிப்பதான வந்தசிவ சொரூபந்தானே பிரகாசித்தொரு நீர்மையாகவே யெல்லாவிசே ஷங்களும் விளையாநிற்கும், நீயுமிப்படி யிந்தத்திருவடியிலே நிற் பாயாக. (கரு)

இனியிந்த உத்தரத்திலே யின்னிலைநிற்கும் படியையின்னமும் விளங்க வருளிச்செய்கிறார்,

உள்ள முதலனைத்து மொன்ற வுருக்கவரி
லுள்ள முருக்கவந் தன்னுடனாந் - தெள்ளி
யுணருமவர் தாங்க ளுளராக வென்றும்
புணரவர வில்லாய பொருள்

இ-ள். உள்ள முதலனைத்து மொன்ற வுருக்கவரி லுள்ளமுருக்காந் தன்னுடனும் = மாணவகனே? ஆன்மாவுக்குப் பிரபஞ்சபேதமாயுள்ள தத்துவங்களு மலங்களுமாயுள்ளவை கடாக்ஷத்தாலே யிவை யொருவழிப்பட வில்லைபாய விடும்படி ஞானம் பிரகாசிக்கிலந்தஞானத்தி னைக்கியத்தாலே யிப்படிப் பெறலாமென்கிற வுன்னுடைய கருத்தானதழியும்படி யப்பொழுதே சிவம் பிரகாசித்து னனையொரு நீர்மையாக்கிக் கொள்ளா நிற்கும் தெள்ளி யுணருமவர் தாங்க ளுளராக வென்றும் புணரவர வில்லாய பொருள் = இப்படி யொழிந்து சிவனை யாராய்ந்தறிய விசாரிக்குமவர்கள் தங்கள்பாவனை குலையாது நிரக்ஷச சித்தே யறிந்துகூட விசாரிக்கி லவர்களுக்கெப்பொழுதும் பொருந்துகைக்கு முன்னில்லாத் தந்தப்பொருள். (கசு)

இந்தப் பதினாலுவெண்பா உபதேசத்தின் முறைமையாகையால, இதற்குப் பிரமாணமாகத் திவ்வியாகமங்களைத் தம்பிரானாருளிச்செய்த வடைவே யான்மாக்களுக்கு அநாதியாயவருகிற சநநமரணங்களுந் சீகதாக்கங்களும ஞானந்தா னல்லது போகாதாகையா லிந்தஞான முண்டாகும்பொருட்டுப் பக்குவங்களுக்கீடாக வாசாரியா கடாக்ஷத்தாலே சரிதைகிரியா யோகங்களைச்செய்து, இதின முற்றுதலாலே ஞானாசாரியனை வழிபட்டு ஞானோபதேசத்தைப் பெற்று, ஞானத்தி னைக்கியத்தாலே சிவனைப்பெற்று முத்தராம்படியும், இந்த ஞானங்கூடாமல் முற்பட்டவளவுகளிலே நின்றவர்கள் பதமுத்திப் பெறும்படியும்,

இவற்றைச் சுருக்கிக்கொண்டு சரியையுங் கிரியையுமொன்றாக்கிச் சிவதன்மமென்றும், யோகத்தைச் சிவயோகமென்றும், ஞானத்தைச் சிவஞானமென்றும் நாலுபாதத்தை யொன்றாக்கி யிவற்றிலே சாதிக்கு முபாயங்களையும் பேறுகளையு மருளிச்செய்கிறார்.

நல்லசிவ தன்மத்தா னல்லசிவ யோகத்தா
னல்லசிவ ஞானத்தா னானழிய - வல்லதனு
லாரேனு மன்புசெயி னங்கே தலைப்படுங்கா
ணாரேனுங் காணா வரன்.

இ-ள். நல்ல—வரன் = சிவனைக் கர்த்தாவாகக் கொள்ளாத சமயங்களுடனே நின்று சாதித்துக்கெடாத குற்றமற்ற சிவனை நோக்கின சைவசித்தாந்தத்திற் சிவதன்மத்தாலேயாதல், சிவயோகத்தாலேயாதல், சிவஞானத்தாலேயாதல், சிவனைக் கூடும்படி சாதிக்குமவர்கள் தங்களாலே செய்யப்பட்டதாகக் கருதாதே கர்த்தாவினாலேயென்றே யறிந்து தம்முடைய சுதந்தரத்தைவிட்டு அவனைப்பட்டு வரவல்லார் யாவர் சிலரவர்களந்தக் கர்த்தாவின்மேலே மிக்கவன்பை வைக்கி லவ்வவரிடங்களிலே சென்று தலைப்படாநிற்பன் மாணவகனே? பிரம விஷ்ணுக்களின்றளவுங் காணப்படாத சிவன். (௰௫)

இந்தவெண்பா மூன்றுவகைக்குங் காட்டும் இந்த மூன்று வகையிலு முட்பட்ட சிவதன்மத்தையறிந்து வழிபடுவார் வழிபடும்படியேன்ற மாணவகனை நோக்கிச் சிவதன்மத்தை மெல்வினையென்றும் வல்வினையென்று மிரண்டாக்கி யிந்தமுறைமையிலே யருளிச்செய்கிறார்.

மெல்வினையே யென்ன வியனுலகி லாற்றரிய
வல்வினையே யென்ன வருமிரண்டுஞ் - சொல்விற்
சிவதன்ம மாமவற்றிற் சென்றதிலே செல்வாய்
பவங்கணம நீங்கும் படி.

இ-ள், மெல்வினை—நீங்கும்படி = மெல்வினையென்று மூலகத்தாரால் செய்தற்கரிய வல்வினையென்றுஞ் சிவனை வழிபடத்தக்க விந்த விரண்டுவகையுஞ் சொல்லுமிடத்துச் சிவதன்மமென்றே சொல்லப்படுமாதலால் இவை யிரண்டினு முன்னுடைய கருத்துக்குப் பொருந்தினதொன்றை வேறொரு பலன்களையுங் கருதாதே செய்வாயாக, மாணவகனே! யுன்னுடையபிறப்பாகியவினை விட்டு நீங்கும்படி இதனற்சொல்லிய பலன்களைக் கருதிப் பதங்களையடையாமல் சாயுச்சியமே பெறுகைப் பொருட்டாக வுண்மையான சிவஞானத்தைப் பெறவேணுமென்று கருத்து. (௰௪)

இந்த விரண்டு வகையில் முற்பட்ட மெல்வினையின் முறைமை யருளிச்செய்கிறார்.

ஆதியை யர்ச்சித்தற் கங்கா ங்கங்கே
தீதி றிறம்பலவுஞ் செய்வனவும் வேதியனே
நல்வினையா மென்றே நமக்குமெளி தானவற்றை
மெல்வினையே யென்றதுநாம் வேறு

இ-ள். ஆதியை—வேறு = வேதியனே யாகமங்களி லருளிச்செய்தபடியே சிவனை யுள்ளபடி யர்ச்சித்து வழிபடத்தக்க கிரியாவிதிக்குப் பக்குவமும்படி இவனுடைய வவயவங்களினாலே யந்தந்த வவதாரங்களிலே செய்யத்தக்க திருவலகு, திருமெழுக்கு, திருவிளக்கு, திருநந்தனவனம், திருப்பள்ளித்தாமம், திருமஞ்சனம், திருமாலை, கூத்து, பாட்டு, முதலாயுள்ள தொழில்களுந் திருவேடத்தாரை வழிபடுகையும், சிவபத்தருக்கு வேண்டுவன செய்கையும், திருமந்திரம் சமிக்கையுமாக விப்படியே செய்யப்பட்ட குற்றமற்ற வழிபாடான சரிதையும், இந்தச்சரிதையின் முதிர்ச்சியாலே திருவுள்ளத் தடைத்துச் சிவனையர்ச்சித்து வழிபடுகிற கிரியாவிதியும், நல்ல செய்பாடென்று நமக்கெளி தாகச

செயயலாகையாலே யிவை யிரணடையு மெல்வினையென்று தி
வ்வியாகமஙகளிலே சொல்லபபட்ட படியாலே நாமு மிதனை
யுனககுசசொன்னோம, வேதியனே யெனறது இநதச சரிதைகி
ரியையிலேநினறு வழிபடுகிற வளவில கொலை, களவு, கள, காம
ம, பொயயெனகிற வைநதையும விட்டு நிறகையாலும, வாககு
மனங காயஙகளால நினைபபன சொலவன, செயவன, வெலலாந
தெயவ கிருததியததிலேயாகையாலும, சுததததிலே நினறும
நீஙகிசசுததனுப நிறகையாலும சாவான மாககளையுந தன்னைப்
போலேகாணகையாலும, வேதாகமஙகளின முறைமைகளிலே
வழுவாமல நிறகையாலும இவனை வேதியனே யென்று நசாரி
யனாலே யழைககபபடடது.

இநதச சரிதையுங கிரியையும மெலவினையாகி இநதநிலை
களின முதிராசசியாலே பின்புணடான சாநததிலே சிவனவழி
லே மிகுநத சிநேகமாயிவனுககு விளைநத வலவினை யிருககுமப
டியே யருளிசசெயகிறார.

வாங்கள் தருஞ்செய்ய வயிரவாக்குத தஙகள
காயஙகளினு லனறுகறி யாக்க - விரஙகாதே
கொலவினையே செயயுங் கொடுவினையே யானவற்றை
வலவினையே யெனறதுநா மறறு.

பாதக மென்றும பழியெனறும பாராதே
தாதையை வேதியனைத தாளிரண்டினு - சேதிபபங்
கண்டசா தாமாம் பரிசளிததார் கணடாயே
தண்டசர் தனசெயலாற் றுன்.

செய்பி லுகுதத திருப்படி மாறறதனை
யைய விதுவமுது செய்கெனறு - பையவிருக்
தூடடி யறுததவாக்கே யூடடி யறுததவனை
காட்டியுரை செய்வனெனனோ காம.

ஆக விந்தமூன்றுதிரு வெண்பாவிலுள்ள முறைமைகள் சாத்திரங்களிற் சொன்னவழியன்றியே யளவற்றவனின் பெருமையாலே புலகத்திலியற்கைவிட்டு யாவராலுஞ் செய்யவொண்ணாத செயல்களைச் செய்ததாகையா லிதனை யொருபிரமாணங்களால் சொல்ல வரிதாகையாலே வல்வினையென்று சொல்லப்பட்டது. (௨௰)

இப்படிக் கொடிதான வல்வினைகளைச் செய்யுமவர்களு முத்தியைப்பெறுவார்களோவென் றையப்பட்ட மாணவகனை நோக்கியருளிச்செய்கிறார்,

செய்யுஞ் செயலே செயலாகச் சென்றுதந்தைப்
பையக் கொடுத்தார் பரங்கெட்டார் - ரையா
வுழவுந் தனிசு மொருமுகமே யானு
விழவுண்டோ சொல்லாயிது.

இ - ள் செய்யுஞ்செயலே செயலாகச்சென்று தந்தைப் பையக்கொடுத்தார் பரங்கெட்டார் = இப்படித்தான கொடிதான வல்வினைகளைச் செய்யச்செய்தே யிந்தக் கொடியசெய்திகளா லகிதமவாராமற் சிவனை நோக்கியேயின்று சிவனளவில் வைத்தவனின் பெருமையாலே யிந்தச்செயல்களையு முறைந்மையான செயலென்றேகொண்டு தமையயு மென்னச் சிவன் கையிலே கொடுத்துப் பரங்கெட்டு விடுகையாலே யவர்கள் கர்த்தாவின் கைப்பட்டு முத்தியைப்பெறு நிற்பார்கள்,—ஐயா வுழவுந்தனிசுமொரு முகமேயானு விழவுண்டோ சொல்லாயிது = ஐயனே? யொருவனுக்கு குழவோரிடத்திலுந் தனிசோரிடத்திலுமானு லொன்றுக்கொன் றுதவிகூடாது, அவை யிரண்டுமோரிடத்திலேயானு லிவன் சுத்தனுயவிடுகைக் சந்தேகமில்லை, அது போலச் செய்கிறசெயல்களி லகிதம வாராமற் சிவனை நோக்கியே செய்தும் இந்தச் செயல்களுஞ் சிவன் செயலென்றேகொண்

டு தம்மையு மவன்கையிலேகொடுத்துப் பரமகெட்டு விடுகை யாலே யிவன் பெறுகிறமுத்திக்கு மிழவுண்டாருமோ விதனை விசாரித்துச்சொல்லாய (உக)

இனிச் சரிதைகிரியைகளிலே நின்று சாதித்தவர்க்கும் பிறபட்ட சத்தி விபபடிமுதிராத வலவினைகூடாமலயோகத்துக் கதிகாரியானவனுக்கு யோகம் இருவிதமாகையினாலே விதனைச் சுருக்கக்கொண்டு ஆதாரயோகமென்றும் நிராதாரயோகமென்றும் உத்தமமான யோகங்களை யெடுத்தருளிச்செய்கிறார்.

ஆதார யோக நிராதார யோகமென
மீதானத் தெய்தும் விதியிரண்டே - யாதாரத்
தாக்கும் பொருளாலே யாக்கும் பொருளாமொன்
றாக்காப் பொருளேயொன் றும்.

இ - ள். ஆதாரயோக நிராதாரயோகமென மீதானத் தெய்தும் விதியிரண்டே = ஆதாரயோகமென்று நிராதாரயோகமென்று மெல்லாவற்றிற்கு மேலானவிடமாகிய திருவடியிலே பக்குவப்பட்ட ஆன்மாக்கள் பொருந்தும்படி சாதித்துக்கூட்டுகைக்கு வேதாகமங்களிலே விதிக்கப்பட்ட இரண்டு பிரகாரமாயிருக்கும்.— ஆதாரத்தாக்கும் பொருளாலேயாக்கும் பொருளாமொன்று = ஆதாரங்களிலே யொவ்வொரு திவ்வியரூபங்களை யாசாரியனிடத்திலேபெற்று அந்தத்தானங்களிலே தியானித்திருக்கத்தக்க வாதாரயோகமொன்று —ஆக்காப்பொருளே யொன்றும் = இந்த வாதாரயோகங் கைவந்தவாறே யாதாரங்களில் பார்த்திருக்கும்படி கற்பித்துக்கொண்டு நிற்கிற சைதன்னிய சொரூபத்தைப்பாராதே பார்த்துநிற்கிறது நிராதாரயோகம். ()

இந்தத் திருவெண்பா வாதாரயோகத்துக்கு நிராதாரயோ கத்துக்குங் காட்டாகையி லிதில முன்னே சொல்லப்பட்ட வா தாரயோகத்தை மேல்விளங்க வருளிச்செய்கிறார்.

ஆக்கி யொருபொருளை யாதாரத் தப்பொருளை
நோக்கி யணுவி லணுநெகிழப் - பார்க்கி
லனைத்தைத் தானொழிந்திட் டேகமா மேகத்
தனைத்தை யாதார மாம்.

இ - ள் ஆக்கியொருபொருளை யாதாரத்து = தேகத்திலே கற்பிக்கப்பட்ட வாறாதாரங்களிலே யாசாரியனருளிச்செய்த தொருதிவ்வியரூபத்தை யிதற்குப்பொருந்தின தோராதாரத்தி லே தன்னுடையமனமானது விஷயங்களிற் பற்றும் விதியே பற்றும்படி கற்பித்துக்கொண்டு,— அப்பொருளைநோக்கி = அப் படி கற்பித்துக்கொண்ட ரூபங் கைவரும்படி நெடுங்காலந் தியானித்து,— அணுவிலணு நெகிழப்பார்க்கி லனைத்தைத் தானொழிந் திட்டேகமாம் = அந்தத்தியானங் கைவந்தவாறே யந்தவாதார ங்களைவிட்டுத் தன்னிலே யந்தப்பொருளைத் தியானிக்கி லந்தத் தியானத்தின் முறுகுதலாலே தியானிக்கின்றேனென்கிற நினைவு கெட்டு அந்தப்பொருளொன்றுமேயாம்,— ஏகத்தனைத்தையாதார மாம் = இப்படித் தியானிப்பானுந் தியானிக்கப்படும் பொரு ளுமன்றியே தன்னைமறந்து தந்தத் திவ்வியரூபந் தானாகிநிற்றது தானே யாதாரயோகம். (உக)

இனி யிந்த வாதாரயோகந் தன்னைச் சூக்குமமாக நுண்ணி தாகச்சாதிக்கு முறைமை யருளிச்செய்கிறார்.

கொண்ட தொருபொருளைக் கோடிபடக் கூறுசெய்து
கொண்டவனு மப்பரிசே கூறுபட - கொண்ட
விருபொருளு மன்றியே யின்னதுவென் றொன்று
மொருபொருளே யாயிருக்கு முறது.

இ - ள்' கொண்டதொருபொருளைக் கோடிபடக் கூறுசெய்யிற் கொண்டனு மப்பரிசேகூறுபடுமே = யாதொன்று தானகை வரத்தியானித்தபொருளை நுண்ணிதாக நுணிக்கிப் பரமாணுவி லும் நுண்ணியதாகத் தியானிக்கி னிப்படி நத்தியானிக்கிறவனுந் தியானித்தபொருளைப்போலப் பரமாணுவினு நுண்ணியதாக நிற்ப ன்.—கொண்டவிருபொருளுமன்றியே யினைத்தென்றொ ருபொருளேயாயிருக்குமுற்று = இப்படி நிற்கவே தியானிப்பா னுந் தியானிக்கப்படு பொருளுமன்றியே யொருகற்பனையற வப்பொழுதேயந்த வொப்பிலலாதபொருள் தானேயா யிருக் கும். (உ௪)

இனி யிந்த நுண்ணியதான தியானமுங்காய வாதார யோகத்துக்கு முடிந்தயோகமுமா யுபாயயோகமுமா யிருக்கிற மந்திரயோகத்தை யருளிச்செய்கிறார்

அஞ்செழுத்து மேயம்மை யப்பா தனமைக் காட்டுதலா
லஞ்செழுத்தை யாருக்கப் பெற்றறிந்த - தஞ்செழுத்தை
யோதப்புக் குள்ள மதியுஞ் செழி லுமைகோன்
கேதமற வந்தளிக்கும் கேள்

இ - ள் அஞ்செழுத்துமே யம்மையப்பா தமைக்காட்டுத லால் = அகார-உகார-மகார-விந்து-நாதமென்கிற பஞ்சாக்கர மான பிரணவத்துக்குப் பிரமா - விஷ்ணு - உருத்திர - மஹேஸ் வர - சதாசிவா இவர்களை வருமதி தேவதைகளுமாய மந்திரமூர்த் திமாய் - ஓங்காரமாயே நின்று நடத்துகையா லிந்தவஞ் செழுத்தே சத்தியையுடைய சிவன திருமேனிகொண்டு நடத்துகி ற முறைமை காட்டுதலால்,—அஞ்செழுத்தை யாருக்கப்பெற் றறிந்து = இந்தவஞ்செழுத்து மூலாதாரத்திலே அகாரமும் பிரமாவும் - நாபிக்கமலத்திலே உகாரமும் விஷ்ணுவும்-இருதய கமலத்திலே மகாரமும் உருத்திரனும் - கண்டத்திலே விந்து

வும் மகேஸ்வரனும் - புருவமத்தியிலே நாதமும் சதாசிவமும் இப்படிச் சுழிமுனைவழியாகநிற்கிற முறைமையைக் குருவுபதேசத்தாலேபெற்று இந்தவைந்தெழுத்தையு மூலாதாரத்திலே பிரமரந்திரத்திலே செல்லவுச்சரித்தா லிந்தப் பிரணவ சொரூபமுங்களைந்து விக்கிரகங்களு மொருசீர்மையா யுனக்கு நாதரூபமாய நாதாந்தத்திலே யருளைப்பெறுவையென்று ஆசாரியனருளிச்செய்யவறிந்து,—அஞ்செழுத்தை யோதப்புக்குள்ள மதியுங்கெடில = இந்த ஓங்காரமான வைந்தெழுத்து முச்சாரணபேதத்திலே நாற்பத்தொன்பதா மெழுத்தும் பதினாலாமெழுத்துமாறுமெழுத்து மிவை கூடினவிடத்திலே விந்துநாதமுமாகவிந்த முறைமையிலே யைந்தெழுத்தாமென்றும் வேதாகமங்களிலே விதிக்கையா லிந்தவைந்தெழுத்தையு முணர்த்துவமாக வுச்சரிப்புக்கு விந்துநாதமுடிந்தவிடத்திலே கிஞ்சிஞ்ஞமான ஆன்மபோதமுங்கெடில,—உமைகோன் கேதமறவந்தளிக்குங்கேள் = அப்பொழுதே சத்திக்குக் கர்த்தாவாகிய சிவன் குற்றமறத்தோன்றியுண்மையான சொரூபத்திலேகூடி யிரக்ஷியாநிற்பன். இந்தவாதாரயோகத்தைத் தூலசூக்குமமாக மூன்றுபடியாகக் கணைத்த வித்து பின்பு நிராதாரயோகத்துக்குப் பிராப்தனும்படி யென்றறிக ( )

இந்த வாதாரயோகம் கைவரச் சாதித்தவர்களுக்குமேல் நிராதாரயோக மிருக்கும்படி யருளிச்செய்கிறார்.

ஆக்கப் படாத பொருளா யனைத்தினிலும்
தாக்கித்தா னொன்றோடுந் தாக்காதே - நீக்கியுட
னிற்கும் பொருளுடனே நிற்கும் பொருளுடனாய்
நிற்கை நிராதார மாம்

இ - ள். ஆக்கப்படாதபொருளாய் = ஆன்மபோதத்தாற் கற்பிக்கக்கூடாத வாத்தமாய்,—அனைத்தினிலும் தாக்கித் தானொன்றோடுந்தாக்காதே = எல்லாப்பொருள்களிலும் தான்கூடி

நிற்கச்செய்தே யவையொன்ருேடுந்தானே தோயாமல்,— நீக்கி யுடனிற்கும் பொருளுடனே = ஆன்மாவுக்கு முத்திக்கு விரோதமாய நீக்கத்தக்க பொருள்களையுந் தானேயறிந்து நீக்கியொழியே யிப்படி நீக்கப்படாத வந்தஞானசொரூபத்துடனே,— நிற்கும் பொருளுடனுயநிற்கை நிராதாரமாம் = தன்னுடையபோதத்தை யொழிந்து இதனைக்கூடித்தானு மந்தஞானசொரூபமா யொரு பற்றற்நிற்கி லது நிராதாரயோகமாம் (உசா)

இந்த ஞானத்திலே யிப்படி இரண்டறநிற்கில சிவனை யுள்ளபடியே காணலாமென் றருளிச்செய்கிருர்.

காணகின்ற தோரபொருளைக காணகினற யோகிகளே
காண்கின்ருா காடசியறக கணணுதலைக-காணகினறா
காண்பானுங காணட பமெபொருளு மனறியே
காணகையினறு கணடனரே காண.

இ - ள, காணகினற தோரபொருளைககாணகின்றயோகிகளேகாணகினறா காடசியறக் கணணுதலை = எல்லாவற்றையுமறிந்தறிவித்துநிற்கிற ஞானத்தைத் தானாகக்காணகினற சிவயோகிகளே சிவனை யிரண்டறககாணகினற கவியாணாகள்,— காணகினறா காணபானுங காணபபடும பொருளுமனறியே காண்கையினறு கணடனரேகாண = மாணவகனே, இபபடிக் காண்கினறவாகள தன்ஞலே காணபபடாதாகவும காணபபட்டபொருள் தனக்கு வேருகவுங்காணுமல்லாந்த ஞானமாகவே நினறு காணகையாலே யிநதஞான சொருபமாகவுடைய சிவனை யப்பொழுதே பெறறு வேறறிருப்பாாகள. (உஎ)

இனி யிந்த நிராதாரயோகம நிலைபெறும்படி யிதற்குபாயமான மௌனயோகத்தை யருளிச்செயகிருர்.

பேசாமை பெறறதனிற பேசாமை கண்டனைப்
பேசாமை செய்யும பெரும்பெருமான் - பேசாதே
யெண்ணொனறும வண்ண மிருக்கின்ற யோகிகள்பா
லண்ணிளாறும் போகா னவன்.

இ - ள், பேசாமைபெற்றதனிற் பேசாமைகண்டவரைப் பேசாமைசெய்யும்பெருமபெருமான = வாக்கு மனக்காயங்கள் மூன்றினுமட்டுப்படாதது வாக்காலையாலும் மாற்றமுணடேல் வஞ்சமுணடென்கையாலும் பேசாமையாகிற பரமோபாயத்தை யாசாரியன பக்கலிலேபெற்று அத்தப்பேசாமை தனனுடவா தனையிறபோகாமல வாக்கு மனங் கிட்டப்படாத சிவனைத் தங்களிடத்திலே ஞானதிருஷடியாலேகணடு கூடிச்செயலற்றிருக்கிற சிவயோகிகளைப் பினபொரு சரீரங்கூடி வாக்குணடாகாதபடி சாநதத்தை வேரறுத்து விடாநிறபன சிவன,—பேசாதே யென்ஞென்றும் வணணமிருக்கின்ற யோகிகளபாலுணணின்றும் போகானுளன = இபபடி யுரையிறந்து சிவனுடனே யிரணடறறிருக்கிற சிவயோகிகளிடத்துப் பரமேஸவர னெவவிடத்தினுமவியாத்தமாயினு மவவிடங்களிலே மறைநதேநின்று இவாகளிடத்தே பிரகாசித்து இவாககேயுடனுயிருப்பன் — பேசாமையாகிற பரமோபாயத்தை யாசாரியன பக்கலிலே பெறறபடி யெனனெனில தேகமுதலாயுள்ளவை யுனக்கு வேறென்று மிவற்றுடன் கூடினால பிறப்புக்குக் காரணமான கனமமுணடாமென்று முனக்கு ஞானமே வடிவென்றும் நீகையிலே நாமிசைவிக்க நீயுமிசைநதாயென்றும அலல் தூஉம சரீரம அதநூம பிராணனிவை தத்தம பணணிறையேயென்றும நமக்குத் தத்தம பண்ணின பொருளை நீ விருமபககடவையலலையேயென்று மாசாரியனருளிச்செய்ய விவனும நமக்கிலலாதபொருளகளை விருமபககடவோ மலலவென்று அறுதியிட்டான. (உஅ)

நிராதாரயோகத்துக்குத் தூலருக்கும் பரமாகமூன்று இருவெண்பா வருளிச்செய்து மேலிந்த பரமாகிய சிவனை யாண்மபோதம் மிறந்தாலொழிந்து கூடவொண்ணாதென்னு முறைமையைப் பல செய்யுட்களாலும் விளங்க வருளிச்செய்கிறார்.

ஒட்டற்று நின்ற வுணர்வு பதிமுட்டித்
தெட்டற்று நின்ற விடஞ்சிவமாம் - நாட்டற்று
நாடும் பொருளனைத்து நாலு விதமாகத்
தேடு மிடமன்று சிவம்.

இ-ள். ஒட்டற்றுநின்ற வுணர்வுபதிமுட்டித் தேட்டற்று நின்றவிடஞ் சிவமாம் = ஒருவகையின்றியே நின்ற பரமஞானத்தை யதுகண்ணாகக் கண்டுகூடின ஆன்மா வந்தஞானமேயாய்த் தானுமசைவின்றியேநிற்கி லந்தஞானத்தில் நிலையாலே தன்னுடைய வான்மபோதமொழிந்து அந்த ஞானமாயே நின்ற விடந்தன்னிலே சிவமே பிரகாசித் தவனென்பு மொரு நீர்மையாக்கிக் கொள்ளாநிற்கும் — நாட்டற்றுநாடும் பொருளனைத்து நாலுவிதமாகத் தேடுமிடமன்று சிவம் = இப்படியொழிந்து சுட்டியறியப்படுத்தக்க வான்மபோதத்தாலே வெகுவிதமாக வாராய்ந்தறியத்தக்கவிடம் பிரபஞ்ச வியாபாரமாகையாலவ்விடஞ் சிவரூபமாகாது, (உகூ)

இன்னமு மிதனை விளங்கவறியு முபாயமருளிச்செய்கிறார்.

பற்றினுட் பற்றைத் தொடைப்பதொரு பற்றறிந்து
பற்றிப் பரிந்திருந்து பார்க்கின்ற - பற்றதனைப்
பற்றுவிடி லந்நிலையே தானே பரமாகு
மற்றுமிது சொன்னேனு மறி

இ-ள். பற்றி—மறி = ஆன்மாவுக்குச் சன்மபலத்தை விளைவிக்கிறதேகங்களாகிய தனுகரண புவனபோகங்களினுள்ளே பற்றிக்கொண்டு நிற்கிற விசாஞானக்கிரியைகளை யொழிப்பதான சிவபோதத்தை விளக்கத்தக்க சிவஞானத்தை யதுகண்ணாகக் கண்டதனைக் கூடினோமென்று பிரியப்பட்டிருந்தறிகிற கருத்துடையுமதனைவிடி லந்நிலைதன்னிலே யந்த ஞானத்துக்கு மேலான சிவந்தானே பிரகாசியாநிற்கும் அறுதியாகச் சொன்னேனிதனை புத்தியுணர்ந்துகொள்வாய். (௩௰)

இன்னமு மிந்தநிலைக்குக் குற்றமவாராதபடி வேறுமொ ருபாய மருளிச்செய்கிறார்.

உணராதே யாது முறங்காதே யுண்ணிப்
புணராதே நீபொதுவே நிற்கி - லுணர்வரிய
காலங்கள் சொல்லாத காலத் துடனிருந்திக்
காலங்கண் மூன்றினையுங் காண்

இ-ள் உணராதேயாது முறங்காதே யுண்ணிப்புண ராதே நீ பொதுவே நிற்கில = நீ பொருளல்லவென்றறிந்து நீங்கின தேகாதிபிரபஞ்சங்களிலே வாதனைமிகுதியினாலே கூடிநின்று விகற்பியாதே யிந்த விகற்பங்கள் நீங்கின வவத்தாங் களிலுண்டான மயக்கங்களி லழுந்தாதே சுகசொரூபத்தை யுன்போதத்தாலறிந்து கூடவிசாரியாதே யிந்தக்குற்றங்கள் நீங்கும்படி யுனக்குக் கண்ணுமா யுனக்கு நடுவேநிற்கிற ஞானத் திறகூடி அந்த ஞானந்தானாகவே நிற்கில,—உணர்வரிய காலங் கள்சொல்லாத காலத்துடனிருந்திக் காலங்கண் மூன்றினையுங் கண்டு = யாவராலும் பிரித்தற்கரிய செல்காலம் வருகாலம் நிகழ்காலமென்று சொல்லப்பட்ட மூன்றுகாலங்களினும்படாம லிந்தக்காலங்களாலே விசுவத்தை நடத்திக் காலசொரூபமா யிருக்கிற சிவத்துடனே நீயு மந்தக் காலங்கள் மூன்றையும் வேறாகக்கண்டுகூடி யந்தச்சிவமேயா யழிவின்றியேயிருப்பை

இந்த வத்தத்திலுண்மையு மிந்தவத்தத்தைப் பெறத்தக்க வாகளுண்மையும் விளங்க வருளிச்செய்கிறார்.

அறிவறிவாய் நிற்கி லறிவுபல வாமென
றறிவி னறிவழித்துக் கொண்டவ - ரறிவினராய்
வாழ்ந்திருப்பா ரீத்தவர்கண் மானுடரின் மாணவர்க
டாழ்ந்தமணி காவேபோற் றான.

இ-ள் அறி—தான = மாணவகனே ! ஆன்மா தன்னுடையபோதத்தையே பொருளாகக்கொண்டு நிற்கில் விகற்பிக்கிறதே சுபாவமாய போதமும் பலவாய்ச்சிந்தித்து விடுமென்றும் இதனை யாசாரிய னநுக்கிரகத்தாலேயறிந்து தனக்காதியே பிராணனுபகரிக்கிற ஞானத்தைக்கூட்டித் தன்னுடைய ஆன்மசுபாவத்தையுமொழிந்து அந்தஞானமேயா யந்தஞானத்தி னைக்கியத்தாலே தனக்கின்றளவுங் கிடையாத பெருவாழ்வாகிய பரமானந்தசொரூபமாகிய சிவனைப்பெற்றுத் தானு மந்தப் பரமானந்தமேயா யிராநிற்பன். இந்த வாழ்வைப் பெறவுரியாரியாரென்னில் ? மானுடப்பிறப்பி லுள்ளாரில் தேகாதிப் பிரபஞ்சங்களிலுள்ள ஆரவாரங்களைக் கைவிட்டு நிலத்திலேவைத்த மணியினது நாவேபோலச் சலிப்பற்றிருக்கிற மோனிகள், (௬௨)

இந்த நிராதாரயோகத்திலே நிகழ்வதொரு குறியுண்டென்று மிது நிகழ்ந்தாற்செய்யு முபாயமு மருளிச்செய்கிறார்.

ஓசையெலா மற்றொலிக்குந் திருச்சிலம்பி
னோசை வழியேசென் றொத்தொடுங்கி - லோசையினி
லந்தத்தா னந்தா னரிவையுட னம்பலத்தே
வந்தொத்தா னத்தான் மகிழ்ந்து.

இ-ள் ஓசை—மகிழ்ந்து = இந்த நிராதாரயோகத்தைச் செய்கிற சிவயோகிகள் சிவனைப் பெறுகைப்பொருட்டாகத் தேகேந்திரியாதி யந்தக்கரணங்களாயுள்ள ஆரவாரங்களொடுங் கும்படி ஞானத்தினாலே தன்னுடைய விச்சாஞானக்கிரியைகளை யொழித்தவவதரத்திலே யானந்தநிருத்தம் பண்ணியருளாநின்ற தம்பிரானார் ஸ்ரீ பாதத்தில் பாவிக்கவென்கிற திருச்சிலம்பிற் பாகார்ந்தமென்கிற வோசைதோன்றாநிற்கும், அந்த வோசை வழியே நாடிச்சென்று கூடி யந்தவோசை முடிந்தவிடத்தே தன்னுடையபோதமு மொக்கமுடியில்தானே யப்பொழுதே

வந்தவோசை* முடிந்தவிடமே யிடமாகவுடைய தம்பிரானார் காருண்ணியசத்தியுடனே யம்பலமாகிய ஞானப்பிரகாசத்திலே வந்திவனைப் பிரியத்துடனே கூடுவான். (கங)

இனித்தாமருளிச்செய்த நிராதாரயோகத்தினுண்மையைத் தம்மையொழியப் பிறருமவிளங்க வருளிச்செய்தபடி விளங்க வருளிச்செய்கிறார்.

சார்புணர்ந்து சார்பு கெடவொழுகி னென்றமையாற்
சார்புணர்த லன்றே தியானமுமாம் - சார்பு
கெடவொழுகி னல்ல சமாதியுமாங் கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று

இ-ள். சார்பு—பற்று = தெய்வப்புலமைத் திருவள்ளுவதேவரும் "சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின" என்றமையால் தனக்காதியே தாரகமாயிருக்கிற திருவடிஞானத்தை யதுக்கணுக்கவறிந்து அதனுடனே யிரண்டறக்கூடியிருக்கில் மீண்டுமொரு சநநமுண்டாகைக்குக் கன்மமுண்டாகாதென்றருளிச்செய்த பிரமாணப்படியே தனக்குத் தரிசனமான ஞானத்தைக்கூடி யசைவறநிற்கி லதுவே சிவத்தியானமாம். அந்த நிலையில் தியானிக்கிறேனென்கிற பாவனைகுலையி லப்பொழுதே சுகசொரூபமான சிவனைக்கூடி னன்றான சமாதியுமாகாநிற்பன. இப்படிக்கூடின சிவயோகிகளுக்குப் பின்பு சநநத்தையுண்டாக்குகிற வாகாமிய கன்மமுண்டாகாது. (கச)

ஞானத்திலே சிவனைக் கூடவேணுமென்று சிரத்தை பண்ணுவாரை யந்தச்சிவமானது மறந்திடாமல்வந்து கூடு முறைமை யருளிச்செய்கிறார்.

அனறிவரு மைம்புலனு நீயு மசையாதே
நின்றபடி யேநிறக முன்னிற்குஞ் - சென்று
கருதுவதன் முன்னங் கருத்தழியப் பாயு
மொருமகடன் கேள்வ னுனக்கு.

இ-ள். அன்றி—உனக்கு = அநாதியே யுன்னை மாறுபட்டு வருகிற விஷயங்களுள் கூடிநின்று சலியாதே யவற்றை வேறாக்கக்கண்டு நீங்கின வுனக்குப் பிரகாசிக்கிற ஞானமான தன்னுடனே யிரண்டற்றிருக்கு முறைமைபோல நீயு மதனைத் தரிசித்து அந்தஞானமாகவே இரண்டற்றிருந்தால், அப்பொழுதே யிந்தஞானத்துக்கு முதலாகிய ஞேயசொரூபமாகிய சிவம் தோன்றுகிறதும் இப்படித் தரிசனமான சிவனைக் கூடவென்று சிரத்தை பண்ணுமாகி லதற்குமுன்னே நம்முடைய கருத்தையு மழித்துத் தன்னுடனே யொரு நீர்மையாக்கிக் கொள்ளாநிற்பன், ஒப்பில்லாதசத்திக்கு நாயகனான சிவன்.

ஆனா லான்மாவாலே சிவனைநினைத்துக் கூடலாமோ வென்னில்? சிவனை யான்மாவாலறியப்பட்ட பொருளல்ல வென றருளிச்செய்கிறார்.

உண்டெனி லுண்டாகு மில்லாமை யில்லையெனி
லுண்டாகு மானவை யோரிரண்டா - முண்டில்லை
யென்னு மிவைதவிர்ந்த வின்பத்தை யெய்துமவகை
புன்னிலவ னுன்னுடனே யாம்

இ-ள். உண்டெனிலுண்டாகு மில்லாமையில்லையெனி லுண்டாகும் = உண்டென்னி லுண்டாவதில்லை யென்றுமாம் இல்லையெனி லுண்டாவதில்லையென்றுமாம். எங்ஙனேயென னில்? சிவனை யான்மபோதத்தாலறிந்து கூடலாமென்னில ஆன்மபோதத்தாலறிந்து கூடத்தக்கபொருளாவது இந்திர ஞாலம்போன்ற பிரபஞ்சமாகையாலும் சிவன் அதற்குமறைந் தலையாலு மிப்படிச்சொல்லு மவனிடத்திலுண்டாம் பொருளாவது சிவனைத் தெரியாதொன்றுமே. சிவனான்மாவா லறியப்படாத பொருளென்னில்? அவனிடத்திலு முண்டானது சிவனைத் தெரியாதொன்றுமே,—ஆன்மையிலோரிரண்டாம =

ஆனபடியினாலே யிப்படிச் சிவனைத் தெரியாதிருப்ப தொரு முறைமை யிரண்டுபிரகாரமாயிருக்கும்,—உண்டியல்லவென்று மிவைதவிர்த்த வினைப்பத்தையெய்தும வகைவுணர்வி லகனுண ஞடனேயாம = இந்த பாவ அபாவமென்கிற விரண்டுவழியா லும் சிவனைக் கூடிவொண்ணாதென றறிந்து இவற்றை விட்டுத் தானாகவேநிற்கிற ஞானமாயேநின்று அளவிலாத பேரின் பத்தைப் பெறும்படி. சிவனிடத்திலே யனைப்பையைக்கி லப் பொழுதேபொருளாலும பாவிக்கப்படாத சிவன் தன்னுடைய காருணியத்தினாலே யுன்னை யிரண்டறக்கூடிநிற்பன். நிரா தாரயோகமுற்றும் (கூசா)

இந்த நிராதாரயோகத்திலே மிகவும் வாதனையுண்டவர் களுக்கு ஒருபக்குவங்களிலேல் கூடாமைகூடினு லெனசெய்வோ மென்ற மாணாக்கனை நோக்கிச் சிவஞானமாகிய தத்துவ ஞான மிருக்கும்படியை யருளிச்செய்கிறார்.

தூல வுடம்பாய முப்பத்தோரா ரத்துவமு
மூல உடம்பா முதனுக்கு - மேலைச்
சிவமாம பரிசினையுந் தோந்துணாந்தார் சேர்ந்த
பவமாம பரிசறுப்பார் பார்

இ - ள் தூலவுடம்பாய முப்பத்தோரா தத்துவமும் = ஆன்மா கனமபலத்தைப் புசிக்கும்பொருட்டாக அன்னமயத் தால பரிணமித்த சரீரத்திலேகின் றிதுபரிணமமாமபடி யிந்தச் சரீரத்துக் காரணமுமாம், ஆன்மாவிறந்த தனுகரண புவன போகங்களுமாயநிற்கிற வானமதத்துவ மிருபத்தாலும புரி ஷைக்குக் காலநியதிகளுமாய், இச்சாஞானக்கிரியைகளை விளைப் பிக்கைக்குக் கலைவித்தியாராகங்களுமாய, போகங்களிலேயழு த்துகைக்குப் பிரகிருதியுமாய, மயக்குகைக்கு மாயையுமாய் நிற்கிற வித்தியாதத்துவமேழுமாகத் தூலவுடம்பிலேபொருந்தி

நிற்கிற தத்துவ முப்பத்தொன்றும்,—மூலவுடம்பர் முதலொன்றும்
=இந்த மாயா தத்துவங்களைப் பிரேரிக்கவுங் கன்மங்களுக்கீடா
க ஞானக்கிரியைகளை நானாவிதமாய்ப் பிறப்பிக்கவும் வாக்குகளையெழு
ப்பவுங் காரணத்துக்குத் திருமேனியாகவும் பதப்பிராரத்தத்தற்குப்
பதங்களாகவுந்தோன்றியுள்ள மூலவுடம்பாயிநின்று நடத்துகிற
விந்துசத்திமுதலான தத்துவம் நாலும்,—மேலைச் சிவமாம் பரி
சினையும்=இந்தத் தத்துவங்களுக்குக் காரணமுமா யான்மாவுக்
குப் பிராணனுமாய் நிற்கிற சிவதத்துவ மொன்றின்முறைமை
யும்,—தேர்ந்துணர்ந்தார் சேர்ந்தபவமாம் பரிசறுப்பார் பார்=ஆ
கவிந்தத் தத்துவ முப்பத்தாறும் ஆன்மா புசிக்கைக்குத் துணைக்
காரணமாகத் தனக்குக்கும்பரமாய் நிற்கையில் இந்தமுறைமையா
சாரியனருளாலே ரூபகதரிசன சுருதியுடனேபார்த்து நீங்கித்தன்
னையும் ஞானத்தையுஞ் சிவனையுமுணர்ந்த சிவஞானிகளே யநா
தியே பொருந்திப்போதுகிற சனனமரணங்களாகிற முறைமையை
ப் போக்கா நிற்கிறவர்களாதலா லுனக்குத் திருசியமாதி விரோ
தமாகப் பிராரத்தத்தாலே பிரபஞ்சந் தோன்றினதாயினும் மிப்ப
டிப்பார்த்துக் கூடுவாயாக. (௧௭)

இப்படிப்பார்க்க வரிதானவர்களுக்கு வேறேயுமோருபாய
மருளிச்செய்கிறார்.

எத்தனையோ தத்துவங்க ளெவ்வெவர்கோட் பாடுடையா
வத்தனையுஞ் சென்றங் களவாதே - சித்தமெனுந்
தூதுவனைப் போக்கிப்போய்த் தூக்கற்ற சோதிதனிற்
பாதிதனைக் கும்பிடலாம் பார்.

இ-ள், எத்தனையோ தத்துவங்க ளெவ்வெவர் கோட்பா
டுடைய வத்தனையுஞ் சென்றங்களவாதே = அநேகவிதமான த
த்துவங்களையும் பலசமயிகள் கொண்டிருக்கத் தக்க கோட்பாடு
களையுஞ் சென்றறியப்புகுந்து அவற்றிலே மொத்துண்டழி
யாதே,—சித்தமெனுந் தூதுவனைப் போக்கிப் போய்த் தூக்கற்ற

சோதிதனிற் பாதிதனைக் கும்பிடலாம்பார் = உன்னைச் சநந மரணங்களிலே தள்ளுகைக்கு அநாதியே தானாகி விசுவத்திலே வாதனைப் படுத்திப்போதுகிற சித்தவிகாரத்தை ஞானத்தாலே யொழித்துச்சென்று ஒப்பில்லாத வந்த ஞானத்தைக்கூடி யிந்த ஞானசத்தியை யொருபாதியாகவுடைய சிவனை வாக்குமனக் காடிங்கள் கூடாதபடி யவன்திருவடியிலே யழுந்திநிற்கலாம், இதனை விசாரித்துப்பார். (௬௮)

இந்த வுண்மையிலே கூடுமளவில உயிர்ச்சார்பு பொருட்சார்பிற் பற்றுவிடவேணுமென் றருளிச்செய்கிறார்

சாம்பொழுது மேதுஞ் சலமில்லை செத்தாற்போ
லாம்பொழுதி லேயடைய வாசையற- சோம்புதற்குச்
சொல்லுந் துணையாகுஞ் சொல்லாத தூயநெறிக்கட்
செல்லுந் துணையாகுஞ் சென்று.

இ-ள். சாம்பொழுது மேதுஞ் சலமில்லை செத்தாற்போலாம் பொழுதிலேயடைய வாசையறில = இப்படிக்கொத்த சிவஞானிகளுக்குச் சரீரம்விடுவதாகிய சாக்காடு வந்தடுத்த காலத்து அந்தச் சிவரூபமாயே விடுவதொழிந்து சற்றுந் தத்துவங்களாலுள்ள வசைவுகூடாது. இதற்குக்காரண மேதெனனில்? தேகநிற்கிறபொழுதே தேகமில்லாதவர்களைப்போ லநாதியே வாதனைப்பட்டுப்போதுகிற வுயிர்ச்சார்பு பொருட்சார்புகளிற் பற்றடங்கலும் விடுகையால்.—சோம்புதற்குச் சொல்லுந் துணையாகுஞ் சொல்லாத தூயநெறிக்கட் செல்லுந் துணையாகுஞ் சென்று = இப்படிச் சரீரநிற்கச்செய்தே யுயிர்ச்சார்பு பொருட்சார்பில் பற்றடங்கலும் விடுமாகில் தானே பணியறுத்த லென்கிற நிலைக்குச் சொல்லப்பட்ட தொருதுணையாக நிற்கும், இதுவொழிந்து வாக்காலுரைக்கப்படாத சுத்தநெறியாகிய வீட்டின்பத்திலே பொருந்துகிற வவதாரத்துக்குந் துணையாகாநிற்கும்.

இந்தவாவறுத்தலு மவனருளாலே வேண்டுமென்றருளிச் செய்கிறார்.

**வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை யென்றமையால்**
**வேண்டினஃ தொன்றுமே வேண்டுவது - வேண்டினது**
**வேண்டாமைவேண்டவரு மென்றமையால்வேண்டிடுக**
**வேண்டாமை வேண்டுமவன் பால்**

இ-ள். வேண்டுங்கால் வேண்டும்பிறவாமை யென்றமையால் வேண்டினஃதொன்றுமே வேண்டுவது = தெய்வப்புலமைத் திருவள்ளுவரும் "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை" என்றருளிச் செய்கையாலே தேகமுள்ளளவு மிவன் விரும்பாதொழினும் பிராரத்தத்தாலே யுள்ளது கூடுமாகையால் ஒன்றைவிரும்ப வேண்டிற்றப் பிறவாமை யொன்றுமே விரும்ப வேண்டுவது,—வேண்டினது வேண்டாமை வேண்டவருமென்றமையால் வேண்டிடுக வேண்டாமை வேண்டுமவன் பால் = அந்தப் பிறவாமையானது தான் வேண்டாமை வேண்டவருமென்று பிரமாணமுண்டாகையாலே நாம் விரும்பத்தக்க கர்த்தாவின் பக்கலிலே பிறவாமைக் குறைபடுதலான அவாவறுத்த லொன்றுமே வேண்டிக்கொள்ள வேண்டியது இந்த அவாவறுத்தலுண்டாகவே யந்தப் பிறவாமைதானே யுண்டாம்.

இப்படி யுயிர்ச்சார்பு பொருட்சார்பிற் பற்றற்றே சமாதி பண்ணுகவும் நிற்கச்செய்தே சமாதியிலேகூட விசாரித்தாளுக்குச் சமாதிகூடாமல் நினைவுகூடி யிதனாலே சங்கங்கள் கூடுமுறைமையை யருளிச்செய்கிறார்.

**ஆரா வுணர்வுதனி லவ்வுணர்வை யாறறிவு**
**காணுமுங் காணுங் கைகூடும் - பூரணமது**
**கூடாமை யுங்கூடுங் கூடுதலுங் கூடிலுங்கு**
**வாடாமை யுங்கூடும் வந்து.**

இ—ள். அரணவுணர்வுதனி லவ்வுணர்வைமாற்றிற் காண முங்காலுங்கைக்கூடும் = இந்திரிய வேட்டைசென் றீடுகொள்ளப் படாத புகலிடமான திருவடிஞானத்திலே தன்னுடைய போதத்தை யொழிக்க விசாரிப்பானாகில் அந்தவகைதாத்திலே முன்பு தானபற்றிய போகத வுயிர்ச்சார்பு பொருட்சார்பின் வாதனையா லே சொரூபமானது கைகூடாமல் மனுதிகளும் பிராணவாயுவுங்கூடி மீண்டு விடயாதிகளிலே சலிப்பினாலே சலிக்கும்.—பூரண மது கூடாமையுங்கூடும் = இது கூடாமற் புரிந்து மயக்கமவந்து கூடினுங்கூடும்,—கூடுதலுங் கூடினுக்கு வாடாமையுங்கூடும் வந்து = இப்படிப்பயக்க விகற்பங்கூடிப்போதமே யெடுத்த தேகம்போனாலு மிந்தப்பற்றுக்களாலே மீண்டுமொரு தேகமவந்து கூடாநிற்குமாதலா லிது கூடாதபடி வுயிர்ச்சார்பு பொருட்சார்புகளில் பற்றுக்களையற்றே சுரூபத்திலே பொருந்தி நிற்பக டாக. (௪௧)

சமாதிபாரனைக்கனுக்கும் பற்றுக்களாலே சமாதி கூடாமல் சந்நங்கள் கூடுமாகில் சி ழ்கைஷுபம தரிசனமில்லாத வானமாக் களை மரியாதையோ விவனுக்குப் பெற்றுள்ளதென்று கேட்டமா ணக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்,

இன்றிங்கசேதனமா மிவ்வினைக ளோரிரண்டுஞ்
சென்று தொடருமவன் சென்றிடத்தே-யென்றுந்தான்
நீத்துழுவ ஞற்ற சிவபதிதான் கைவிடுமோ
மாதொருகூ றல்லனோ மற்று

இ-ள். இன்றிங்கசேதனமா மிவ்வினைக ளோரிரண்டுஞ் சென்றுதொடருமவன்சென்றிடத்தே = இப்பொழு திந்த தேகத்திலே நிற்கச்செய்தே கூடின அசேதனமான புண்ணியபாவங் களிரண்டு மிவன் பின்னொருதேகத்தை யெடுத்தபொழுதே யொக்கச்சென்று கூடாநிற்கும்,—என்றுந்தான் நீத்துழுவ ஞற்

சிவபதிதான் கைவிடுமோ மாதொரு கூறல்லனோ மற்று = ஒருவன் சிவதீக்ஷையும் சிவஞானமும் பெற்றுத் தெளிந்திருக்கச்செய்தேயும் முன்புபோல வுயிர்ச்சார்பு பொருட்சார்பிற் பற்றுவிடாமற் சாக்கூடிற்றாயினுங் கர்த்தாவாகிய சிவனு மிவனைக் கைவிடாமல் முன்புண்டான மனம் பற்றுகைக்குத் தக்கவற்றைக் கூட்டித் தொலைப்பித்து முற்சாக்கிரத்திலே சாதித்த குறையிலே வந்தெடுத்துக்கொண்டு திடையிலே கூட்டிச் சாயுச்சியத்தைக் கொடாநிற்பன். இவன் காருண்ணிய சத்தியினை யெப்பொழுதுந் தன்னிடத்திலே யுடையனாதலால்.

இன்னமும் ஆன்மாக்களுடைய பெத்தமுத்தி யிரண்டினுமிவர்களைப் பாதுகாத்து ஈடேற்றுகை யநாதியே கர்த்தாவுக்குக் காரணமான முறைமை தோன்ற வருளிச் செய்கிறார்.

அநாதி சிவனுடைமை யாலெவையு மாங்கே
யநாதியெனப் பெற்ற வனுவை - யநாதியே
யார்த்த துயரகல வம்பிகையோ டெவ்விடத்துங்
காத்த லவன்கடனே காண்.

இ-ள். அநாதி சிவனுடைமையா லெவையுமாங்கே = அநாதியான சிவனுக்கு எண்ணிறந்த ஆன்மாக்களு மடிமையாகையாலே யிந்த ஆன்மாக்களு மப்படியே,—அநாதியெனப் பெற்றனுவை யநாதியே யார்த்த துயரகல = இப்படி யநாதியான வான்மாக்களை யநாதியே பேதித்துக்கொண்டு நிற்கிற பாசமானது விட்டு நீங்கும்படி,—அம்பிகையோ டெவ்விடத்துங் காத்தலவன் கடனேகாண் = விட்டு நீங்காத சத்தியுடனே பெத்தத்திலே கூடிநின்று தொலைப்பித்து முத்தியினுமீண்டு மொருடம்பு கூடாதபடி திருவடியிலே கூட்டிக்கொள்ளுகிற விது மவனைவ கனே? யவனுக்கு மநாதியே முறைமைகாண்.

தேகாதிப்பாசமனாதியாகில முத்தியிலும்போகாதே யென்று சந்தேகித்தமாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

தம்மிற் சிவலிங்கங் கண்டதனைத் தாம்வணங்கித்
தம்மன்பா மஞ்சனநீ ராட்டித் - தம்மையொரு
பூவாகப் பூவழியா மற்கொடுத்துப் பூசித்தா
லோவாமை யன்றே யுடல்.

இ-ள். தம்மிற் சிவலிங்கங்கண்டு = ஆசாரியனாலே தனுகரணபுவனபோகங்களை விட்டுநீங்கித் தன்னைத்தரிசித்துத் தன்னிடத்திலே தனக்குப்பிராணனுமாய்ச் சிவனுக்கடையாளமுமாய் நிற்கிற ஞானமாகிய சிவலிங்கத்தைத் தரிசித்து,—அதனைத்தாம் வணங்கி = அந்தச்சிவலிங்கத்தைத் தம்முடைய போதம் விட்டுப்போம்படிச் சாந்தமாகிய வணக்கஞ்செய்து,—தம்மன்பான் மஞ்சனநீராட்டி = இப்படிப்பெறுதற்கரிய பேற்றைப்பெற்றோமென்கிற சிரத்தையாகிய சலத்தாலே திருமஞ்சனம் பண்ணி,—தம்மை யொருபூவாகப் பூவழியாமற்கொடுத்து = இப்படிச்செய்கிற வான்மசொரூபத்தை யொப்பில்லாத் திருப்பள்ளித்தாமமாக மயங்காமற்சாத்தி,—பூசித்தால் = இப்படிஞானத்திற் சரிதை கிரியா யோகங்களினாலே உள்ளே சிவனைக்கண்டைக்கியஞ்செய்கிறவிது,—ஓவாமையன்றேயுடல = செம்புருகின பதத்திலேகூடின குளிகையினது ஐக்கியத்தாலே யநாதியான காளிதமுழுஞ் செம்பொன்னனுருவமுநீங்க மாற்றுப்பிரகாசித்துப் பின்பிலையென்றுங் கூடாதவாறுபோல வொருவன் தன்னுடைய சத்திநிபாதத்திலுண்டானவன்பின்மிகுதியாலே தேககேதிரியாதிகளை நீங்கின தன்னுடைய வுண்மையான சொரூபத்தைத் தனக்கேற்பப்பெறுத் தன்னிடத்திலே சிவனைக் கண்டைக்கியஞ்செய்து வாதனைவிட்டால பிராரத்தநாசம்பிறந்து தேகம் விட்டபொழுதே திருவடியிலே யிரண்டற்றுவிடுமதொழிந்து மீண்டு தேகமெடுக்கவல்லவே. (௪௪)

அஞ்ஞானபாசம்விட்டு நீங்குமாகில் லனாதியென்று ஆன்மாவுக்கு வழியுண்டாமோவென்ற மாணாக்கனை நோக்கிப் பாசத்திலேயிருந்த போதத்தைவிட்டுத் தன்னைத் தனக்கறுதியாகப் பெறுகிறதொழிந்து இவனுக்கழிவில்லையென்றும் பாசத்தை நீங்கினபெ ருந்தேயினும் வியாத்தனென்னு முறைமையுமருளிச் செய்கிறார்.

தன்னைப் பெறுவதின்மேற் பேறில்லைத் தானென்றுந்
தன்னைத்தான் பெற்றவனாரு ஞானினிற்-றன்னாலே
யெல்லாந் தனுட்கொண்டு கொண்டதனைக் கொள்ளாதே
யெல்லாமாய் நிற்கு மிவன்.

இ-ள் தன்னைப்பெறுதன்மேற் பேறில்லை = ஒருவன் பெறத்தக்க பேறுகளிற் றானழிந்துபோகாம லருளாலே தன்னையுமிதியாகப்பெறுகிற பேற்றின்மேல் வேறொன்றில்லை,—தானென்றுந் தன்னைத்தானபெற்ற வனென்றுமொன்னில = தானென்றுந் தன்னைத்தானே பெற்றவனென்று மிரண்டாக விரவிட்டுத்திறச் சொன்ன தானோயெனனில,—தன்றாலேயெல்லாந் தனுட்கொண்டு கொண்டதனைக் கொள்ளாதே யெல்லாமாய்நிற்குமிவன் = ஆன்மா தன்னையறியாமல மூன்றுபாசமேயாய்நின்ற முறைமை யொழிய வருளாலே பரத்தையுமறிந்து பாசத்தையுமறிந்து இந்தப்பாசத்தையொழிந்ததுபோல இதையுமொழியவிட்டுத் தன்னுடையபோதஞ் சலியாமற் பூரணனாய்நிற்கவே யெல்லாவடிவுகளுந் தன்னுடைய வடிவாய்த்தானே யிருக்கவண்டாண்ட பகிரண்டத்துக்கெல்லாங் கர்த்தாவாய்நிற்ப னிவ்வான்மா (௭௫)

இந்தவானமபோதத்தானே பொருளாயில ஞானயோகஞ் சிவயோகமென்று சொல்லவேண்டுமோ வென்ற மாணாக்கனை

யிந்துவானமயோகந்தானே ஞானயோகமாமபடி யருளிச்செய்து இந்த ஞானயோகந்தானே சிவயோகமாமபடி யருளிச்செய்கிறா

துனபமா மெலலாம பரவசனுயத தானறுவளி
லினபமாந தனவசனுயத தானிருககி - லெனபதனு
னினவசனு யேயிருககி னினனுடனு னேரிழையா
டனவசனு யேயிருபபன ருண.

இ - ள துனபமாமெலலாம பரவசனுயத தானறுவளில= ஆன்மா தானே காததனு மெயலலாவறறையு மறிகிறுனுக நினறு விகறபிககி லிமமை மறுமை யிரணடுககும பிரயோசனமாகவுள ளது கிலேசமொழியவேறிலலே,—இனபமாந தனவசனுயததானி ருககில = ஆனமா திரிவுகாககியான பிரபஞசநதியை விட்டுநீங் கித தனககு உணமையான சைதனனிய சொருபமா யிதிலே நிருவிகாரமாயிருககி விநதுவானமயோகந்தானே ஞானயோகமு மா யிநதவழியிலே சுகரூபம வநது பிரகாசியாநிறகும,—எனபது லை = என்று வேதாகமஙகளுககுங கருததாகையால்,—நின வசனுயேயிருகக நினனுடனுனேரிழையா டனவசனுயே யிருப பனருன = மாணவகனே ? இநதிரிய வசனுகாமல் நீயு முன னையொழிநத பொருளக ளெலலாவறறையு முனககு வேறெனறறிநதுவிடடு நீஙகி நிருவிகாரமான ஞானமே சுகரூபமாயிருக கி லபபொழுதே யநத ஞானசததியின வசமாயிருககிறனேய சொருபனுனசிவ னுனனைககூடி வேறற நிறபன. (௬௬)

இநதச் சிவயோகததிலே யிடைவிடாம லநுபவிததலாவது இநதக கருவி கரணஙக ளொருகாலமும கூடாதபடி யருளிலே நிறக வலலவாகளுககேயெனறுந தோனறவருளிசசெய்கிறுர்.

சேததாரே கெட்டார கரணங்கள சோக்ததனு
டொததாரே யோகபர ராணவாக - ளெத்தாலு
மாராத வக்கரணத் தாரபுண்டிங கலலாதார்
போரமற செலவரதனபின்.

இ-ள். செத்தாரே கெட்டார் கரணங்கள் = அந்தக்கரண ங்கள் கெராக வகையறியாதபடி ஞானத்திலேகூடி மறித்த வான மக்களே சக்கமரணங் கெட்டவர்கள், — சேர்ந்தஞ்ஞெட்டுந் தாரே யோகபரர் ஆனவர்கள் = இந்த ஞானத்தி னெழுந்தத்தி னாலே பிரகாசித்த சொரூபத்திலே பொருந்தி யதுவாய் நின்றவ ர்களே சிவயோகத்தில் தாப்பரமானவர்கள் — எத்தாலு மாரா த வக்கரணத் தாப்பண்டிங் கல்லாதார்போரா மற்செல்வர்தன பின் = இப்படிச் சிவயோகத்தில் பொருந்தப்பெற்ற பாக்கிய வீன ரெத்தனாலுந் திருந்தியடையப்பெற்ற கருவி கரணங்களா லே கட்டுண்டு இவற்றினை பினமே தப்பாமலே வருஞ்செய்து சக்க மரணங்களிலே செற்றழலாநிற்பர். (௪௭)

இத்தக்கருவி கரணங்க ளொருகாலமும் பொருந்தாதபடி நிற்கிற சிவயோகிகள் பெருமையிருக்கும்படி யருளிச்செய்கிறார்.

கண்ணுங் கருத்துங் கடந்ததொரு பேறேயுங்
கண்ணுங் கருத்துங் களிகூர - நண்ணி
வடமடக்கி நிற்கும் வடவித்தே போல
வுடனடக்கி நிற்பர்கள் ஞூற்று.

இ-ள். கண்ணுங் கருத்துங் கடந்ததொரு பேறேயுங் கண்ணுங் கருத்துங் களிகூர நண்ணி = யாதாகவுங் கண்ணுக் கும் கருத்துக்கு மளவுபடாத தொரு பேறுயினுள் சிவஞானிகள் சிவனுடனே யிரண்டறக்கூடி பரமானந்தமே சொரூபமாயிரு க்கையாலு மவர்கள் கண்ணில் விகாரமில்லை யாகையாலு மொடு ங்கினும் விழிப்பினும் பொருளேயாயவர்கள் கண்ணுக்குங் கரு த்துக்குங் களிகூரப்பொருந்தி, — வடமடக்கி நிற்கும் வடவித்தே போல வுடனடக்கி நிற்பர்கள் ஞூற்று = அநேக தூரம்படாக த்தோ ராலின் பரிணாமமெல்லா மொருசிறுகையொத்த விதையிலே யடங்கின தன்மைபோல அளவிடப்படாத வஸ்துவாயினும் தம்

கரும்போ யட்கசித்த தங்களான்ம சுபாவத்தைவிட்டு இத்தச் சிய மாகியே நிலவாநிற்பார்கள். (௪௮)

அவ்விடப்படாத பொருளை யொருடம்பிலே நிற்பானொருவ னடக்கிக் கொண்டிருந்தபடி யெப்படி யென்ற மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

வானகமு மண்ணகமு மாய்நிறைந்த வான்பொருளை
யூனகத்தே யுன்னுமவ ரென்றனையே - யேனைத்து
வாதனையை மாற்றும் வகையதுவே மண்முதலா
மாதனமே யன்றோ வதற்கு

இ - ள், வானகமு மண்ணகமு மாய்நிறைந்த வான்பொருளை யூனகத்தே யுன்னுமவ ரென்றனையேல் = ஆகாசமுதல் பிருதிவி யீறாகவுள்ள பஞ்சபூத பரிணாமமான பிண்டப் பிரமாண்டங்களு மிவற்றிற்குக் காரணமான தத்துவங்களு மித்தனைப்பட்ட வானம்கோடிகளுந் தானேயாய்ப் பூரணமாய் நிற்கிற சொரூபத்தை யொருசரீரியானவன் தனக்குள்ளேயடக்க நினைத்தபடி யெப்படியென்னில்,—ஏனைத்து வாதனையை மாற்றும் வகையதுவே மண்முதலா மாதனமேயன்றோ வதற்கு = மாணவகனே ? பிருதிவி முதலாக முன் சொல்லப்பட்டவை யெல்லா மந்தப் பொருளுக்கு சாதனமாத்திர மல்லவோ வாகையாலும் அப்பொருளை யாசாரியனாலே கூடப்பெற்றவர்களிடத்தி லந்தப்பொருளின் வியாத்தமெல்லாநின்று பிரகாசிக்கையாலும் ஞானதிருஷ்டி யில்லாதவர்களுக்குச் சரீரிகள்போலத் தோற்றினுமவனந்த வண்ணமையேயாய் நிற்பாருளதையாலு மென்போல்வாரிடத்து மநாதியே கூடிப் போந்த வாதனையைப் போக்குகைக்கு இந்நிலையே காரண முறைமையாகவுள்ளது. (௪௯)

இந்தப்பொருளை யுள்ளேகண்டு வாதனை நீக்கிநிற்பவர் போல் புறப்புறக்கண்டு வாதனை போக்கலாமோ வென்ற மாணாக் கனை நோக்கியருளிச்செய்கிறார்.

யாலே யருளாக்கி யொருநிலையான ஞானமேயா யுனனினை வொழியநிறகி லபபொழுதே யுனனிடததிலே பரமசிவனானவர் தனனுடைய காருணணிய சததி யுடனே கைமமாறு கருதாமல் வநது தோனறி யுனனை ஒருதனமையாககிககொணடு தானேபிர காசியாநிறபன—தெளளியநிக தொழிவாய=இதனைச் சிவயோ கததின கணணே நினறுராயந தநுபவிககினறு மெனகிற தன மையுங கைவிடடு நினறுயாதல,—அனறியே யனபுடையையா யிற செறிநதொழிவாய = இநத முறைமையலலவாகிற சிவனு டைய வுணமையைக கேடகுதல நினைககுதல காணகுதல செய் துபொழுதே யனனுடைய கருததை யுருககுவதான தொரு பேர னபு கூடிமாயி னதனறலே யுனனுடைய கருததானது நேராக வழிநது சிவனுடனேயொரு நீமையாய விட்டோயாதலால,— ஏதேனு நசெய=இநத ஞானயோகததிலும பததியோகததிலு மி வையிரணடிலுங கூடின தெ னறைச செயயாயாக (௫௧)

இனியிநதப பததியோகநதா னெபபடியெனற மாணாக் கனை நோககிப பததியிலேநினறு பெறறவாகள பெருமை இப் படியென றருளிசசெயகிறார

கணணபப னொபபதோ ரன்பினமை யென்றமையாற்
கணணபப னொபபதோ ரனபதனைக - கண்ணபபா
தாமறிதல காளததி யாரறிதல லலலதுமற
றாரறியி மனபான றது.

அவிழநத துணியி லவிழ்நத வவிழை
யவிழநத மனததா லவிழககு - வவிழநதடை
வேந்தனாக கினமுத மாயிறறே மெய்யனபிற்
சேநதனா செய்த செயல.

சாத்த திருமூலைக்கே துய்யசிவ ஞானஞ்
சாத்துண்டார் பிள்ளையெனச் சொல்லச் - சாத்த
தனமுடையா டென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனமுடையா ளன்பிருக்க வாறு

அன்பேயெ னன்பேயென் றன்பா லழுதரற்றி
யன்பேயன் பாக வறிவழியு - மன்பன்றித்
தீர்த்தர்க்கி யானை சிவார்ச்சனைகள் செய்யுமவை
சாற்றும் பழமன்றே தான்.

இ - ள். இப்படிப்பட்ட பத்தியோகத்திலே விட்டகுறைக ளாலே சிவனுடைய வுண்மையை நினைத்தல் கேட்டல் காணுதல் செய்தபொழுதே கரையழிந்த வன்பினாலே யொருபலத்தை யுங் கருதாம லாத்த வன்புதானே தங்களுக்குச் சொரூபமாகநின்று தங்களை மறந்து பேறுபெற்ற கண்ணப்பநாயனார் முதலாயுள்ள நாயன்மா ரன்பையொழிந்து தீர்த்தங்களுந் தியானங்களு மர்ச்சனைகளு மிப்படி யன்றிக்கொடாமல் பேறுகூட்டமாட்டா தாகையா லன்புமிகுந்த வுத்தமமான பத்தி கூட்டுதற்கு வித்தாக இதனைச்செய். (௮௨)

இனியாவர்க்கும் பத்திகூடுதற் கரியதொரு முறைமையிலே கூட்டத்தக்க ஞானயோகமே யானந்தத்தைத் தந்து முத்தியைத் தருவதென்று முன்னே பலபிரகாரங்களாகச் சொல்லப்பட்ட வுபாயங்களுக் தாற்பரிய மிதுவேயென்று மற்றுள்ள சமயிகள் தாற்பரியங்க ளிந்த வுண்மையைக் கூடமாட்டாதென்றும் மெல்லாவற்றையுந் தொகுத்து ஆனந்தத்தைத் தருகைக்கு ஞானயோகமே பொருளென்று துணிய வருளிச்செய்கிறார்.

எல்லா வறிவுகளின் றாற்பரிய மென்னறிவு
செல்லு மிடத்தளவுஞ் சென்றறிந்தே னெ - வல்லபடி
வாதனையை மாற்றுமவ் வகையிதுவே யுற்றவற்று
வேதமறக் கண்ட விதம்.

இ - ள். எல்லா - விதமும்=மாணவகனே? இந்த நூலிற் சொல்லப்பட்ட வுபாயமொழிந்து வேறு மறியவேண்டுவ தொன்றோவென்று நீ சந்தேகிக்க வேண்டுவதில்லை, எல்லாச்சமயங்களினு மெல்லாச் சாத்திரங்களினு முண்டான தாற்பரியார்த்தங்களொன்று லாராய்ந்தக்கவளவு மாராய்ந்தறிந்தேன், அவையெல்லாவற்றினும் யாதொன்றைப் போசமி முத்தியைக் கூட்டுதற்கு முறைமையாகக் கண்டது சைவசித்தாந்தத்திற் சொல்லப்பட்ட விந்த ஞானயோக மொன்றுமேயாதலா லிந்த வநுபூதியெல்லாக் குற்றங்களுந் தருகைக்குக் கண்டவாத்தமாதலின் நீயுமிந்த முறைமையிலே சாதிப்பாயாக, (௫௬)

இனியிந்த வத்தத்தைப் பெறுதற்கரிய முறைமையும் பெற்றுல நிறைவரிதான முறைமையு மருளிச்செய்கிறார்.

வித்துமத னங்குரமும் போன்றிருக்கு மெஞ்ஞானம்
வித்துமத னங்குரமு மெய்யுணரில் - வித்ததனிற்
காணுமை யாலதனைக் கைவிடுவர் கண்டவர்கள்
பேணுமை யாலறுரா பேறு.

இ - ள் வித்துமத னங்குரமும் போன்றிருக்கு மெய்ஞ்ஞானமு = நெல்லுமுதலான பலவித்துக்களு மங்குரிக்கும்பொழுது அங்குரத்துட னிரண்டுபட நில்லாமலந்த வங்குரமுள்ளளவும் வியாத்தமாய் நின்று பரிணமித்து இந்தப் பரிணமத்தைப் பிரயோசனங் காரணமாக வங்குரித்த நாணமுத லாசரித்துக்கொண்டிருந்த ஆனமாக்களுக்குப் பரிணும முதிர்ந்த அந்தக் காலங்களிலே வித்தானது வெகுவிதமாகப் பலித்தவர்கள் தாங்களைக்ஷமிப்பித்துச் சந்துஷ்டிப் பிறப்பிக்க வினபத்தையே கொடாநிற்கும் அதுபோல வித்தான சிவமும் ஆனமாக்களுக்குக் கன்மவொப்புமலபாகமு முண்டான வஸரத்திலே காருண்ணியமே திருமேனியாக வெழுந்தருளிவந்து பக்குவப்பட்ட வான்மாக்களை

த்தமுடைய னளவிலே யினைகிரமபடியுந் திருவுள்ளத் தடை
த்து இவர்களிடத்திலே யநாதியே யெழுந்தருளிநின்ற வுண்மை
யையும் பிரகாசிப்பித்து இந்த வுண்மையான ஞான சுசுரூபத்
திலே யானமாக்களையுங் கூட்டிநிறுத்தி யிந்த நிலையின் முதாசரி
யாலே தன்னுடைய சுசுரூபமான பேரின்பத்திலே யிவர்களநு
பவித்துச் சம்பூரணத்தை யடையும்படி செருபலமாகக் கொடா
நிற்கும்,—வித்துமுத்த னங்குரமு மெய்யுணரில= இந்த வித்தாகிய
சிவனுண்மையு மங்குரமாகிய ஞானத்தினுண்மையு முணராவா
குணருமிடத்து —வித்தக்குறக் கூற்றமையா லதனைக் கைவிடுவா=
நெலலு முதலான வங்குரங்களை யிந்த வித்தின பரிணாமமென்று
மிந்தப் பரிணாமங்களிலே யந்தவித்துக் கலந்து நிற்குமென்று மங்
குரத்தின பரிணாம முதிர்ந்தபொழுதே யந்தவித்தே செருபல
மாகப் பலிக்குமென்று மிதனை யாசரித்துக்கொண்டிருந்து பலிப்
பிக்கிற காலங்களிலே பலங்கொள்ளவறியாம லங்குரம் பரிண
மிக்கிற காலத்திலே வித்துத்தோன்றாதுகொண்டு இந்தப் பரிணா
மத்திலே வித்துங் கண்டிலோமென் றந்தப் பரிணாமத்தையுங்
கைவிட்டு அதினுடைய பிரயோசனமு மிழந்துபோகிறாந்தனை
ப்போலத் தரிசித்து ஞானத்திலேநின்று சாதித்து இந்த ஞான
ஞேயமாய இந்த ஞானத்துக்கு முதலாகிய சிவனைக் கூடிப் பே
ரின்பத்தையே பெறமாட்டாம லந்த ஞானத்தைத் தரிசித்தவுள
விலே யிவ்வளவே பிரயோசனமென்று சிவரூபத்தி னுண்மை
யை யறியாம லந்தஞானத்தையுங் கைவிட்டுப்போன பாக்கிய
மீனா சிவயோகத்தை யிழந்துபோகாநிற்பார்கள்,—கண்டவா
ன் பேறுமையாலறுவாபேறு= அந்த நெல்லுமுதலான வங்கு
ரங்களிலே வித்துக்கலந்து நிற்குமென் றறிந்தவர்களும் பயன்படு
மளவு மந்தப் பரிணாமத்தை யாசரித்துக்கொண்டிருந்து பிரயோ
சனப்படுங்காலங்களிலே பிரயோசனங் கொள்ளமாட்டாமல் பரா
முகத்தாலே யதினா பிரயோசனத்தை பிறாகொள்ள தாமிழந்து
போகிற பாக்கிய மீனரைப்போலச் சிவனைத்தாரமாகவொழிந்து

ஞானம்பிரகாசியாதென றறிந்தவர்களுமந்தஞானத்தைக் கைவி
டாமனின்று விசுவத்தைக் கைவிட்டு மந்தஞானமாகவே சாதி
த்துஇந்த ஞானத்தி னேகசியத்தாலே சிவனைப்பெற்றுப் பேரின்
பமே யநுபவித்துத் திருப்தியடையமாட்டாமல் வாதனையின்
மிகுதியாலே பராமுகமாயத் தாமபெற்ற ஞானத்தினைப் பின்பு
நுபவிக்கலாமே யென்றும நித்தத்தத்துவமபெற்று மிருப்பாரைப்
போல நெகிழ்ந்திருந்தவர்கள் தமக்குப்பேருன சிவயோகத்தை
யிழந்துபோகாநிற்பார்கள் ஆதலாலநீயுமிந்தத்தவத்தைப்பெற்றோ
மென்று காவியாபபோகாதே யிடைவிடாமல் ஞானமாய்நின
றே சாதித்துப பின்பிந்த ஞானத்தி லுறுதலாலே ஞானமான
துந தலைமறையப பலிக்கத்தக்க சிவபோகத்திலேயழுந்தி யநு
பவிப்பாயாக. இதற்குப்பிரமாணம திருமந்திரம்— "வித்தினில
னறி முளையிலலையமுளை, வித்தினிலன்றி வெளிப்படுமாறில்
லை, வித்துமுளையு முடனலலவேறலல, வத்தனமைத்தாகு மற
நெறிதானே" (௫௭)

இந்தச் சிவரூபந்தனனை யெப்படி யறிவேனென்ற மா
ணாக்கனைநோக்கி யருளிச்செய்கிறார்.

ஒன்றன் றிரண்டன் றுளதன் றிலதன்று
நன்றன்று தீதன்று நானன்று - நின்ற
நிலையன்று நீயன்று நினைவறிவு மன்று
தலையன் றடியன்று தான்.

இ - ள். ஒன்றன்று = எல்லாப் பொருள்களுங் கலந்த
விடத்திலே யுதிப்பதொன்றாகையாலே யெல்லாப்பொருளுந்
தானே யொன்றாயிருப்பதுமன்று,—இரண்டன்று = தன்னிடத்
திலே சட்டறவிளங்கிற வத்தமாகையினாலே யிரண்டாயிருப்ப
துமன்று,—உளதன்று = வாக்குமனதீதமா யிருப்பதொன்றாகை

யாலே பிரத்தியக்ஷமா யிருப்பதுமன்று,—இலதன்று = ஞானவான்களுக்கு ஞானயோகத்தின் முதிர்ச்சியிலே பரமானந்தத்தையளித்து நிற்கையாலே யில்லாத பொருளுமன்று,—என்றறிந்தன்று=ஆன்மபோத மிறந்தால் கூடும்பொருளாகையாலே ஆன்மாக்களால் என்று நிறைந்தனறு சுட்டப்படுவதுமன்று,—நானன்று=நானே பிரமமென் றலங்கரிக்கிற பசுஞானமன்று,—நின்றநிலையன்று=அநாதியேதொடங்கி யின்றளவும் நிலையான பாசஞானமன்று,—நீயன்று = பசுஞானத்தையும் பாசஞானத்தையுமுடைய ஆன்மாவுமன்று,—நினைவுமன்று=உனக் கறிவாய் நிற்கிற ஞானமுமன்று,—தலையன் றடியன்றுதான் = ஆதியந்தமில்லை யந்தச் சிவசொரூபத்துக்கு. (௫அ)

இப்படி நிச்சயாத்தமா யிருப்பதொன்று கூடும்படி யெப்படியென்ற மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

செய்யாச் செயலிலவன் செய்யாமை கண்டதனைச்
செய்யாச் செயலிற் செலுத்தினால் - எய்யாதே
மாணவகவப்பொழுதே வாஞ்சைக் கொடிவளர்க்கு
மாணவமு மித்தா லறி.

இ - ள்: செய்யாச்செயலிலவன் செய்யாமைகண்டதனைச் செய்யாச்செயலிற் செலுத்தினால்= ஆன்மாவினிடத்திற் பக்குவத்திலேவிளைந்த பரமானந்தத்தை யான்மாவறிந் துண்டாக்கிக் கொண்டதுமல்ல சிவன் விகாரியாய்நின்று கொடுத்ததுமல்ல ஞானமான கண்ணாந்தவிடத்திலே பிரகாசிக்கிற படியையறிந்து இந்தப் பரமானந்தம் பிரகாசிக்கிறபொழுதே விதுவுந்தோன்றுமல்லவே சுகரூபமாய் நிற்கும்படி யந்த நினைவானதவிழ்ந் தானுமந்த நிராலம்பமேயானால்,—எய்யாதே மாணவகவப்பொழுதே வாஞ்சைக் கொடிவளர்க்கு மாணவமு மித்தாலறி=மாணவகனே ? சனனத்துக்குக் காரணமாகவுங் குறிக்கப்ப

-ரநின்ற வாசனையாகிற கொடிகளை வளர்க்கப்பட்டாநின்ற மூல மலமாகிய ஆணவமல மப்பொழுதே வேறற்று விடாநிற்கும் நீ யொன்றுக்கு மஞ்சாதே இப்படி யறிவாயாக. (௫௧)

இந்தப்பொருளை சாதிப்பா னொருவனுக்கொரு செயலுங் கூடவொண்ணாதபடியாலே யவனுக்கொரு நியமம் வேண்டா மென் றருளிச்செய்கிறார்.

ஏதேனுங் காலமுமா மேதேனுந் தேசமுமா
மேதேனுந் திக்கா சனமுமா - மேதேனுஞ்
செய்வா ரொருவனுமாஞ் செய்யாச் செயல்தனைச்
செய்யாமை செய்யும் பொழுது.

இ - ள். ஏதேனும் - பொழுது=ஆன்மபோதமுள்ளளவு மிதற்கறிதாகிய வத்தநிராலம்பமான வுண்மை ஒருவன்றன்செயலன்றியே கூடியிட்டது மென்னக் காலமென்னு மெல்லாக் காலமுமா யெல்லாத் தேசமுமா யெல்லாத் திக்குகளுமா யெல்லா வாதனங்களுமா யெல்லாத் தொழில்களினு நிற்பா னொருவனுமாம்.

இனியிந்தச் சிவயோகத்தை வெளிதாகச் செய்வதாயிருக் கச்செய்தே செய்யாதிருக்கிறபடியு மிந்தச் சிவயோகத்தின் பெருமையு மருளிச்செய்கிறார்,

செய்தற் கரிய செயல்பலவுஞ் செய்துசில
செய்தற் கரியதனை யெய்தினார்க - ளோயோகர்தஞ்
செய்யாமை செய்துஞ் செயலறுக்க லாயிருக்கச்
செய்யாமை செய்யாத வாறு.

இ - ள். செய்தற்கரிய செயல்பலவுஞ் செய்துசில செய்தற்கரியதனை யெய்தினார்கள்=சிலர் கர்த்தாவைநோக்கித் தீங்கள் சரீரத்தையு மனத்தையும் வருத்தி யாவராலுஞ் செய்தற்கரிய

தேகங்களைப் போற்றிநின்று இதாவிதங்களைப் புசித்து அஞ்ஞான மெய்ஞ்ஞானமாய்ப் போதுகிறவிது என்ன காரணத்தால் இதனை நீ சொல்லவாயாக. ஞானத்துக்குப் பக்குவரல்லாத வாசனமாக்களை நோக்கி சொன்னதருளிச் செய்தாராக வருளிச்செய்த விதுவும் சாவானமாக்களுக்கு கிட்டாதபொருளென்னுடைய பாக்கியத்தினாலே கிட்டின விதனைக் கைவிட்டு வாதனையைக் கைவிடாமல் நின்று இந்திரிய வேட்கை கழிமையாய்ப் பெரிழுந்து போகாதே இந்தவுண்மையிலே யிடைவிடாமல் நின்று சாதிக்கைப்பொருட்டாக வெந்திய வுபதேசமாக வருளிச்செய்ததெனக்கொள்க (௯௨)

இனிச் சீடனைப்பார்த்து சொன்றருளிச்செய்கிறார்.

வீட்டிலே சென்று வினையொழிந்து நின்றிடிலென்
காட்டிலே நல்வினைகள் செய்திடிலென் கூட்டிலவாட்
சாத்தியே நின்றிலையேற் றக்கணோ வேள்விசெய்த
மாத்திர மேயாங்கண்டாய வந்து.

இ-ள். வீட்டிலே சென்று வினையொழிந்து நின்றிடிலென் = முன்பு மருவிப்போந்த தொழில்களையும், புத்திரமித்திர களத்திராதிகளையும் கைவிட்டுத் துறவறத்திலேபோய் நின்றாலும் பிரயோசனமென் — காட்டிலே நல்வினைகள் செய்திடிலென் = இல்லறத்திலேயிருந்து நற்றுனவைகளியாதி கன்மங்களைச் செய்தாலும் பிரயோசனமென் — கூட்டிலவாட் சாத்தியே நின்றிலையேல் = பொருந்தினதொரு நிலையிலே நின்றுயாவினுக்குப்பிராணனான சிவனைக்கூடி யவன்செயலாகவே யுனனுடைய செயலற நின்றுயில்லையாகில், — தக்கணோ வேள்வி செய்தமாத்திரமேயாங் கண்டாயவந்து = தக்ஷப்பிரஜாபதி தன்னுடைய அகங்காரத்தின் மிகுதியாலே கர்த்தாவை யொழிந்து தன்னாலே செய்யப்பட்டதாகவே நின்று யக்ஞத்தைச் செய்தே

ருபிரயோசனமுங் கைகூடாமல் நீங்காத துன்பமே பெற்றாற்போல நீயுங் கர்த்தாவைக் கைவிட்டுன்னுடைய செயலென்றே நின்று பெறுதற்கரிய பேற்றை யிழந்து போவையாகையா லிப்படிச் செய்யாமலந்த வுண்மையிலே நிற்பாயாக. இது திட்டாந்த பூர்வமாக வறிவித்தது. (௩௩)

இன்னமுமிவன் செயலறிந்து சாதிக்குமுபாயத்தை யுறுதிப்பிறக்கும் வண்ணமருளிச்செய்கிறார்.

சிவன்முதலே யன்றி முதலில்லை யென்றுஞ்
சிவனுடைய தென்னறிவ தென்றுஞ் - சிவனவன்
தென்செயல தாகின்ற தென்று மிவையிறந்த
தன்செயலாகக் கொள்ளாமை தான்.

இ - ள். சிவன்முதலேயன்றி முதலில்லையென்றும் = நித்தனாய்ச் சுத்தனு மெய்ப்பொருட்குந் தாரகமாய்க் கிருத்தியகாரணனுமாய்க் கைவல்லிய ஞானியுமா யசைவின்றியே நிற்கிற சிவனாகிற கர்த்தாவை யொழிய வேறு நானென்ன வொருமுதலில்லையென்றும், — சிவனுடையதென்னறிவதென்றும் = ஆன்மாக்கள் யானே யறிந்தேனென்கிற வறிவெல்லா மவனொழிந்தறியப்படாதாகையால் நீயுமிதனை யவனறிவேயென்றும், — சிவனவனென்செயலதாகின்றதென்றும் = எக்காலமு மான்மாக்கள் யானே செய்தேனென்று செய்யத்தக்க செயல்களெல்லா மந்தக் கர்த்தாவின் செயலாகையால் நீயுமிதனை யந்தக் கர்த்தாவின் செயலேயென்றும், — இவையிறந்த தன்செயலாக் கொள்ளாமைதான் = இப்படி நினைப்பன சொல்வன செய்வனவான விவற்றை யெப்பொழுதுந் தன்னுடைய செயலாகக் கொள்ளாமல் சகலமுங் கர்த்தாவின் செயலேயென்று யாவர் சிலர் தானறிந்தார்கள் அவர்க ளந்தப்பொருளை தானாய் விடுவார்கள். (௩௪)

இனியிந்த வத்தமசைவ சித்தாந்தத்தி லொழிந்து வேறொருசமயங்களினு மில்லையென்றருளிச்செய்கிறார்.

இன்றிச் சமயத்தி னல்லதுமற் றேழையுட
னென்றுசொலி மன்றத்து நின்றவரா - ரின்றிங்கே
யங்கமுயிர் பெறவே பாடு மடியவரா
ரெங்குமிலைக் கண்டா யிது.

இ-ள் இன்றிச்சமயத்தி னல்லதுமற் றேழையுடனென்று சொலி மன்றத்து நின்றவரார் = இப்பொழுதிந்தச் சைவசித்தாந்தத்திலொழிந்து இப்படிக்கொத்த பரமஞானத்தையு மருளிச்செய்த ஞானசத்தியுடனே கத்தர் திருவம்பலத்திலே யெழுந்தருளிநின்று ஆனந்த நிருத்தஞ்செய்தருளித் தன்னுடைய மெய்யடியார்க்கு எடுத்தருளிய ஸ்ரீபாதமே யிரக்ஷையென்று காட்டிய கையுடனே மோனத்தாலேமொழிந்து திருக்கண்சாத்தியருளி யெல்லாருங் காணவேநின்றார் வேறொரு சமயங்களிலுண்டோ; —இன்றிங்கே யங்கமுயிர்பெறவே பாடுமடியவரார் = இன்றிந்த லோகத்திலே ஞானமுதமாகிய திருமுலைப்பாலை யமுதுசெய்த இந்தப்பெருமையாலே நெடுநாளாக வஸ்தியாகக்கிடந்து முன்பு போலே பிராணனைப்பெற்றுப் பிள்ளையுமாயுள் வயதுஞ்சென்று எழுந்திருக்கும்படி திருவாய்மலர்ந்தருளி இதனைப் பரசமயிகள் தங்கள்ஞானத்தாலே சித்துக்காட்டின றென்றுமல் (சித்தர் சித்துக்காட்டுமது மீண்டு மப்பொழுதே போய்விடுமாகையால் இப்படியன்றியே) யிந்தப்பெண்பிள்ளை நெடுங்காலமிருந்து முன்னே பிதாவானவன் நாயனாருக்கு வாழ்க்கைப்படுத்தவென்றபடியாலும் அவரிதற்குப் பொருந்தாதபடியாலும் இவர்களும் வேறொன்றுக்கும் பொருந்தாமல் தவத்திலேநின்று பின்பெல்லாருங்காணவே திருப்பெருமணத்திலே கூடப்புகுந்திட்டு இப்படியிருந்தின விந்தச்சமயத்தில சம்பந்தப்பெருமா னையன்றொழி

க்து வேறுமொரு சமயஙகளிலுண்டோ,— எங்குமிலக் கண்டா யிது = இந்தமுறைமைகளிந்தச் சமயத்திலொழிந்து மாணவக னே? வேறொரு சமயஙகளினு மிலலைகாண்,

இனியிந்தச் சைவசித்தாநததி லுறுதிப்பாட்டிலே நினற சிவஞானிகள் பெருமையை யருளிசசெயகிறா.

விரிந்தன குவிந்தும விழுஙகுவாகள் மீண்டுந்
தெரிந்தந தெரியாது நிறபா - தெரிந்துந்
தெரியாது நிறகினற சேயிழைபா லெனறும
பிரியாது நினறவனைப பெறறு.

இ-ள், விரிந்தன குவிந்தும விழுஙகுவர்கள் = இந்தச் சிவ ரூபந் தனனிடததி னிறகிறபபோல வெவ்விடதது நிறகிற மு றைமையைககணடு பேரினபததை யெய்தியு மிதிலுறுதலாலே தனனையும் பிரபஞசததையு மநதபபொருள தனனையுமறநது சுபாவததிலேயழுநதி யநுபவிததுஞசெயயாநிறபாகள,—மீணடுந தெரிந்துந தெரியாதுநிறபா = இந்த முறைமைகளிலே யநுபவி யாநிறகசசெயதேயும பிராரததததாலே பிரபஞசந தோனறினு மநத சொருபததி லைககியததாலே பிரபஞசநீஙகியறியாமலத்த வுண மையைககணடு நிலலாநிறபாகள,—தெரிந்தும தெரியாது நிறகி னற சேயிழைபாலெனறும பிரியாதுநினறவனைபபெறறு=அந நிலையே சாவததையுமறிந்து மறிவிககு நடததாநிறகச செயதேயுந தானொரு விகாரஙகளினும படாமல நிறகிற ஞானசததியுடனே யெககாலமுமவிட்டு நீஙகாத சிவனைத தஙகளிடததிலறுதியா கப்பெற்ற சிவஞானிகள. இதுசிவஞானிகளுக கொடுக்கததிலும் விரிவிலுங் கிருவிலு மிநதவுணமையே யொழியப பிரபஞசவாத னை கூடாதெனறறிவிததது (௩௩)

இனனமுமொரு திருவெண்பாவாலே யிதனை விளங்கவரு ளிச்செயகிறா

ஆதனமு மாதனியு மாய்நிறைந்து நின்றவனைச்
சேதனைக கொணடே தெளிவுறுச்-சேதனைச்
சேதனனி லேசெலுத்திச சிற்பரதத ராயிருபப
ரேதமறக கணடவாக ளினறு.

இ - ள். ஆதன—இனறு = ஆனமாககளுக கிருப்பிடமான தததுவஙகளையு மிவையிடமாக நிறகிற ஆனமாககளையு மகாதியே பொருந்தி யவையவரா யலலவுமாயநிறகிற சைதனனிய சொரூபனுன சிவனை யவன காருணணியததினலே ஞானமேதிரு மேனியாகக் கொணடெழுநதருளி வநத வாசாரியனைக்கொண்டே தெளிநது தானுமநதச சைதனனிய சொரூபனுய நிறகிற தனனையு மநதச சைதனனியமானது கரையுமபடியநதச சிவன் கையிலேகொடுதது ஞானததுககு மேலாகிய வநதசசிவமாகியே யிராநிறபாகள திரோதாயிநீஙகத தரிசிதத கவியாணாகள். ()

இப்படி நிறகததகக சிவஞானிகளிடததிலுணடான விசேஷஙக ளருளிசசெயகிறுா,

தாமடங்க விநதத தலமடங்குந் தாபதாக
டாமுணாரி விநதத தலமுணருந - தாமுணியிற்
பூமடநதை தஙகாள புகழ்மடநதை போயகலுங
காமடநதை நிலலா ளயநது.

இ்ள. தாமடஙக விநததுதலமடஙகுந தாபதர்கடாமுணாரி விநதத தலமுணருமம = இபபடி ஞானததிலேநின்று சாதிததவர் களநதச் சிவனைபபெற்று சிவனிடததிலே யொடுஙகவே ஞான மு மொககவொடுஙகாநிறகும்,—இபபடிககொந்த சிவஞானிக ள பிராரததததாலே நிலைநிறநதாலு முனபொடுஙகின ஞானமு மொக்கவுணாநது முன்பு மாயை சீவிததாறபோல விபபொழு

து மிந்தஞானமே யிவனுக்குத் தனுகரண புவனபோகமுமாய் நிற்கும், — தாமுனியிற் பூமடந்தைதங்காள் புகழ் மடந்தைபோ யகலு நாமடந்தைநில்லா ளையந்து = இப்படிப்பட்ட சிவஞா னிகளுக்குக் கோபப்பிரியங்க ளில்லையாயினு மிகுந்த பாவிக ளால் அவர்கள் திரிவுளங் கரிகின்காலத்து அந்தப் பாவிகளுக்கு ண்டான ஐஸ்வரியமும்போ யவர்கள் கீர்த்தியும் விட்டுப்போ யவர்கள் வாக்குகளுந் தம்பியாநிற்கும். சிவனைக்கூடி நின்ற சிவஞானிகளுக்கும் பிராரத்தத்தாலே நிலைகிரிந்தாலும் விசுவங் கூடாமல் ஞானங்கூடின காரணமேதெனனில்? ஞானத்திலே நின்றவன் விழுந்தா லதற்குக்கீழான பிரபஞ்சத்திலே விழாநிற்ப பன, ஞேயத்திலேயழுந்தினவனுக்கு நிலைகிரிந்தா லதற்குக்கீ ழான ஞானத்திலேவிழுவன், இதனையொழிந்து விசுவங்கூடா தெனவறிக. (௬அ)

இப்படிச் சிவனைப்பெற்றவர்கள் முத்தராய் வினைதொழி ந்து ஒன்றையாக்குத லழிக்குதல் செய்கிறவிது ஈஸ்வரன்கிருத் தியமாயிருக்க விவர்களுக்குண்டானபடி யெப்படியென்ற மாணு க்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

துரியங் கடந்தசுடர்த் தோகையுட னென்றும்
பிரியாதே நிற்கின்ற பெம்மான் - துரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யுந் தன்மைகளு
மாக்கியிடு மன்பாக் கவன்

இ - ள். துரியங்கடந்த சுடர்த்தோகையுடனென்றும் பிரி யாதே நிற்கின்ற பெம்மான் = ஆன்மபோதத்தா லறிதற்கரிய ஞானசத்தியுடனே யெக்காலமும் விட்டு நீங்காமல்நிற்கிற பர மேஸ்வரனானவன், — துரியத்தைச் சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யுந் தன்மைகளுமாக்கியிடு மன்பாக்கவன் = தன்னு டையவளவிலே மிகுக்க வன்பைவைக்க வான்மாக்களையான்ம

போதங்கூடாமல் விழிப்பித்த ஞானசத்தியிலேகூட்டித் தனு
லேசெய்யப்பட்ட வநுக்கிரகநிக்கிரகங்களையு மவர்களாற்கொண்டு
தான் கூடிநின்று செய்வித்து அவர்கள் செய்தார்களெம்படியே
நிறுத்தாநிற்பார்கள். (௬௬)

இப்படிப்பட்ட சிவஞானிக ளருளாலே செய்த சாமாத்தி
யங்களை நாலுசெய்யுளாலே யருளிச்செய்கிறார்

ஓடஞ் சிவிகை யுலவாக் கிழியடைக்கப்
பாடல் பனைதாளம் பாலைநெய்த - லேடெதிர்வெப்
பென்புக் குயிர்கொடுத்த லீங்கிவைதா னோங்குபுகழ்த்
தென்புகலி வேந்தன் செயல்

கொல்கரியி னீற்றறையி னஞ்சிற் கொலைதவிர்த்தல்
கல்லே மிதப்பாய்க் கடனீந்த - னல்ல
மருவார் மறைக்காட்டில் வாயிற் றிறப்பித்த
றிருவாமூ ராளி செயல்

மோக மறுத்திடினு முத்தி கொடுப்பதென
வாகமங்கள் சொன்ன வவர்தம்மைத் - தோகையாற்
றூதாகப் போகவிடும் வன்றொண்டன் றொண்டுகளை
யேதாகச் சொல்வே னியான்.

பாய்பரியோன் றந்த பரமானந் தப்பரனைத்
தூயதிரு வாய்மலராற் சொற்செய்து - மாயக்
கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்
திருவாத வூராளுந் தேன்.

இ-ள் இப்படி நாயன்மார்செய்த செயற்பாடுகளையு மறி
வாயாக. (௭௬)

இப்படிப்பட்ட சிவயோகமே முத்தியைத் தருவதென்றும் நின்ற யோகங்களெல்லாம் சனனத்தை விளைக்குமென்று மருளிச் செய்கிறார்.

அம்மையிலு மிம்மையிலு மச்சந் தவிர்த்தடியா
ரெம்மையுமா ளெங்கு மியங்குதலான் - மெய்ம்மைச்
சிவயோக மேயோக மல்லாத யோக
மவயோக மென்றே யறி.

இ - ள் அம்மை—யறி=தம்பிரானார் திருவடியைப்பெற்ற சிவயோகிகள் பதமுத்திகளாலுண்டான பயங்களையும் பிராரத்தத்தாலே யிந்தலோகத்திலுண்டான பயங்களையுஞ் சொரூபத்தி ஐக்கியத்தாலேகெடுத்து அந்தச் சொரூபத்துக்குள்ளளவும் வியாத்தரா யொருசங்கற்ப விகற்பமின்றியே யெவ்விடத்துந் தங்கள் சுவேச்சையிலே திரிகையால் மாணவகனே? இப்படிச் சற்காரியமான சிவயோகமே சிவனையுள்ளபடியறிந்து கூடின யோகமாவது. மற்றுமுள்ள யோகமெல்லாஞ் சிவனையுள்ளபடியறியாத யோகமாகையா லவையெல்லாஞ் சனனத்தையுண்டாக்குமென்றே யறிவாயாக. (௭௪)

ஆன்மாக்களெல்லார்க்குங் கர்த்தா வொருவனாயிருக்கச் சிலரைப் பதமுத்திகளிலே வைத்துஞ் சிலரைத் திருவடியிலே சேர்த்துக்கொண்டுஞ் சிலரை விஸ்வத்திலே நிறுத்தியுஞ் செய்தாற் பக்ஷவாதியாகானோ வவனுடைய கிருபைக்குப் போதுமோ வென்ற மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

மன்னரு ளெவ்வண்ண மானுடர்பான் மாணவக
வன்ன வகைய தானருளு - மென்னி
லடியவரே யெல்லாரு மாங்கவர்தா மொப்பி
லடியவரே யெல்லா மறி.

இ - ள். மன—அறி = மாணவகனே! இராஜாவானவன் தன்னுடைய வாக்கினையின்றிலே தனக்கு நடக்கு மந்தராசியங்களில் பிராணிகளெல்லாரையு மிரக்ஷிக்கவேணுமென்கிற கருத்தெப்பொழுது முண்டாயிருக்கச் செய்தேயும் புத்திமான்களுமாய்ச் சாஸ்த்ருமாய்த் தன்னுடையவளவிலே மிகுந்தசினேகங்களை யுடையவருமா யிருக்கத்தக்கவர்களைத் தானுப்பார்த்துத் தன்னுடைய வளவிலே சினேகமின்றியே காரியத்தைப்பெற்ற வாக்கினைக்குப் பயந்திருக்கத்தக்கவர்களை யொவ்வொரு முகங்களிலேவைத்தும், குணஹீனரா யிருக்கத்தக்கவர்களை யவர்களுக்குத்தக்க தண்டங்களிலே தண்டித்து அவர்கள் குணவான்களாகும்படி செய்கிற விவையெல்லாங் கிருபையேயாற்போல, பரமேஸ்வரருடைய திருவுளமெல்லா ரளவிலுமொத்தவனாயிருப்பினு மலபாகமுண்டாமளவு மான்மாக்களுக்குத் தனுகரணபுவனபோகங்களையுங் கன்மபலங்களையுங்கூட்டிச் சுகதுக்க வேதனைகளிலேவைத்துச் சிலரைச் சத்திநிபாதத்துக் குறைதலைக்கீடாகப் பதமுத்திகளிலேவைத்து, மிகுந்த சத்திநிபாத முடையவர்களைத் திருவடியிலே சேர்த்துக்கொண்டு முறைமையிலே சேர்த்தருளாநிற்பனென்று சொல்லுகையால் வெல்லாருமவருக்கடிமையா யிருக்கச்செய்தேயுந் திருவடியைப் பெற்றவடியா ரொப்பில்லாத வடியாராகையால் நீயுமிவையெல்லாவற்றையுமறிந்து திருவடியிலே பொருந்தியிருக்கிற சிவயோகமே சுகந்தத்தை யறுக்கிறயோகமென்று மிதிலே நிலைநின்றனுபவிப்பாயாக. (௯௬)

இப்படி யொப்பில்லாத வடியார்க்குந் தேகமுள்ளளவும் பிராரத்தம் புசிக்கவேண்டுகையில் பிராரத்தம் புசிக்கச்செய்தே யாகாமியமேறுமற் புசித்தபடி யெங்ஙனென்ற மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

உடமபுடைய யோகிகடா முறறுசிற றினப
மடஙகததம பேரினபந தாககிற - றொடஙகி
முளைபபதுமொன றிலலை முடிவதுமொன றிலலை
யிளைபபதுமொன றிலலை யிவா

இ - ள். உடமபுடைய யோகிகடா முறறுசிற றினபபடங கததம பேரினபந தாககில = பிராரததநாசம பிறககுமளவு முடமபிருககததககு இவயோகிகள தாம சிறறினபததைப பொருநதினாகளாயினு மநதச சிறறினபமானது நிலையில வேறுபாடும பாவனையில வேறுபாடு மொழியப பேரினபததிலே வேறுபாடிலலையாகையா லிவாகளுககிநத விரணடுவேறுபாடுமினறிச சொருபததிலே நிலைததிருநதாலும ஞானததிலொழிநத மலமாயாதி கனமஙகளிறபடாாகள ஆதலாலே, கூடின சிறறினபங களெலலாம ஞானததினிலையாலே மீணடு மநதபபேரினபததிலே யாககிககொளளாநிறபாகள இபபடிச செயயி லிவாகளுககு — தொடஙகி முளைபபது மொனறிலலை முடிவது மொனறிலலை யிளைபபது மொனறிலலை யிவா = பிராரததம புசிககசசெயதேயு மறுமைககு விததான வாகாமியமஙகுரிபபது மொனறிலலை பிராரததநாசம பிறநது தேகமானது நழுவுங காலதது இவவுடமபுடனகூடி மரிபபதுமிலலை, ஆகையா லிவாகளொரு கனமஙகளாலு மொருசறறுஞ சலியாாகள. (ரு)

ஞானததாலே சொருபததைக கூடவேணுமாகி வநத ஞானநதானே யமையாதோ சொருபமெனறு ஒருபொருளகூட வேணுமோவெனற மாணாககனைநோககி யருளிசசெயகிறா.

பேரின்ப மான பிரமக கிழததியுட
னோரினபத துளளானை யுளளபடி - பேரினபங
கண்டவரே கண்டார கட்டுயிாதத வினனமுத
முண்டவரே யுண்டார் சுவை.

இ-ள் பேரின்பமான பிரமக்கிழத்தியுட னிருந்த ஞானபத்துள்ளானையுள்ளபடி பேரின்பங்கண்டவரே கண்டார் = அவ்விடப்படாத பரமானந்தமான பிரமசத்தியுடனே யிடைவிடாத சுகரூபனாயிருக்கிற பரமேஸ்வரனை முறைமையிலேகூடியநந்த பரமானந்தமே யநுபவிக்கிற சிவயோகிகளே சிவனை யுள்ளபடி யறிவார்கள்,—கடலுயிர்த்த வின்னமுதமுண்டவரே யுண்டார் சுவை = கடலிற்பிறந்த வினியவமுத்தத்தைப் புசித்து அதினுண்டான விரதத்தி லழுந்தினவர்களே யமுதத்தைப் புசித்தவர்களு மிகுந்தப்பிரயோசனமான நித்தியத்துவம் பெற்றவர்களுமல்லது, அந்த வமுதத்தைத் தரிசித்தமாத்திரத்தி லதினுடைய விரதமுந்தெரியாது பேறுங்கூடாது அதுபோல, மலமாயாதிகன்மங்களை நீங்கி ஞானத்தைத் தரிசித்தாலுஞ் சிவனைக்கூடிய பரமானந்தத்தை யநுபவித்தாலொழிந்து ஞானமறிந்த மாத்திரத்தில் சாயுச்சியங்கூடாது. (௭௭)

இப்படிச் சுகரூபமாயிருக்கிற பரமேஸ்வரன் நானாவிதமாயிருக்கிற பிரபஞ்சத்துக்குக் கர்த்தாவாகி லவனும் விகாரியாகானென்று மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்

நங்கையினு ளுமனைத்துஞ் செய்தாற்போ லுடனைத்து
நங்கையினுற் செய்தளிக்கு நாயகனும் - நங்கையினு
மேபியாயத் தானமேய நாட்டப் பெறுமிதுகா
ணெம்பெருமா னாத மியல்பு

இ-ள் நங்கை—இயல்பு = நம்முடைய நினைவினவசத்திலேநின்று கைகள் முதலான வங்கங்களெல்லாந் தொழில்களையுஞ் செய்துமுடியாநிற்க வந்தச் செயற்பாடுகளெல்லா நம்முடையமேலே யேறுமாற்போலச் சுகரூபியாயிருக்கிற சிவன் சாக்ஷிமாத்திரமாயிருக்கத் தன்னுடைய சத்தியாலே பிரபஞ்சகட்டத்தைநிற்க விந்தச்சத்தியினு நிர்விகாரமாயிருக்கிற சிவன்

தானொன்றைச் செய்யாதிருக்கச் செய்தேயு மிந்தச் சத்திக்குப் பிராணனுமாய நாயகனுமாகையாலே யிந்தச்சிவனையே கர்த்தாவாகச் சொல்லப்படுதலால் மாணவகனே? இவளவேகாணேம முடைய கர்த்தாவுக்குச் செயலாயுள்ளது (எஅ)

இப்படி வெருவிதமான சத்தியிலே நிர்விகாரமான சிவன் பொருந்தினபடி யெப்படியென்ற மாணாக்கனைநோக்கி யருளிச்செய்கிறார்

பொன்னிறங் கட்டியினும் பூணினு நின்றாற்போ
லந்நிறம் மண்ணணுமமயிகையுஞ் - செந்நிறத்த
ளாந்நிறத்த ளாயிருப்ப ளெங்கள் சிவபதியு
மந்நிறத்த ருபிருப்ப னங்கு

இ - ள் பொன் — ஆங்கு=பொன்னுக்கு நிறமானமாற்று ணது கட்டியானபோது மாபரணங்களானபோது மாறுதற்கு வேறுபாடில்லாதாற்போலச் சகருபனான சிவனும ஞானசொரு பியுமான சத்தியுமிந்த முறைமையேயாதலால பிரபஞ்சநிமித்த மாகச் சத்தியானது யாதொருருபமா யிருந்தது நம்முடைய கர்த்தாவாகிய சிவனு மந்தவிடங்களதோறு மந்தந்த முறைமைக் காயே யிராநிறபுன, (எகூ)

இன்னமுஞ் சிவனுடைய நிலைமையை விளங்க வருளிச் செய்கிறார்.

தாரத்தோ டொன்றுவார் தாரத்தோர் கூறுவார்
தாரத்தோ டெங்குந் தலைநிற்பார் - தாரத்தி
னுதாரத்த தேயிருப்பார் நாற்றனத் தேயிருப்பர்
வேதாந்தத் தேயிருப்பர் வேறு

இ - ள் தாரத்தோ டொன்றுவார் = சிருட்டிகாலத்திலே யான்மாக்கள் சூக்குமதேகத்துடனே யிச்சா ஞானக்கிரியை சிவிகல்பபொருட்டாகச் சிவனம் கமமுடைய சத்தியைத்

தோற்றுவித்துத் தாமு மந்தச்சத்தியுடனேகூடி யிச்சாஞானக் கிரியாசொரூபமாவர்—தாரத்தோர் கூறுவர் = அவர்களுக்குத் தூலதேகமாய வருபபுண்ணவேண்டித் தாமுஞ் சத்தியுமாக அர்த்த நாரீசுரமான விக்கிரகமாகாநிற்பர்,—தாரத்தோடெங் குந் தலைநிற்பர் — அந்த வான்மாக்களுக்கு மலபாக முண்டா கைப்பொருட்டு அவர்களை கன்மங்களிலே யநுபவிக்கவும் ஆஞ் ஞிக்கவும்வேண்டி சத்தியுருவமான பிரமவிஷ்ணு உருத்திரர், மஹேஸ்வரர் சதாசிவரென்று சொல்லப்பட்ட விக்கிரகங்க ளுடனே யந்தரமூர்த்தியான பிரணவசொரூபமாய ஆன்மக்க ளிடங்களிலே மாயாதத்துவங்களுடனேகூடி நடத்தாநிற்பர்,— தாரத்திறுத்தாந்தத்தேயிருப்பர் = மீண்டு மான்மாக்களையுந் தத்து வங்களையும் பிரிக்கவேண்டி மஹாமாயாசத்தியான நாதாந்த மானு நிருவிகாரத்திலேயிராநிற்பர்,—நாறுருணத்தேயிருப்பர் = இவையொன்றையுமறியாம லுபாதானங்களிலே மறைப்பட வேண்டி நாலாந்தானமான திரோதானசந்தியிலேயிராநிற்பர்,— வேதாந்தத்தேயிருப்பர் = இவற்றுக்கு அநுக்கிரகமே செய்ய வேண்டி வேதத்திலே முடிந்தபொருளான பராசத்தியிலே யிரா நிற்பர்,—வேறு = இப்படி யெல்லாமாய நிற்கச்செய்தேயு மிவற்றுக்குத் தானவேறுமாய தன்னுடைய சுபாவமான சொரூ பமா யிராநிற்பர். (அ௰)

இப்படி பரமேஸ்வர னெல்லாமாயல்லவுமாய நிற்கிற முறைமையைப் பேதமென்னவோ வபேதமென்னவோ பேதா பேதமென்னவோ வென்ற மாணாக்கனோக்கி யருளிச்செய் கிறார்.

ஒன்றுரைத்த தொன்றுரையாச் சாத்திரங்களொன்றுக் கொன்றுரைத்து நிச்சயிக்க மாட்டாவர் - வென்றுரைக்க
வென்று வியன்றிடுமோ வென்போலவா ரேதேனுஞ்
சொன்னாற்றா னேறுமோ சொல்.

இ-ள. ஒனறு—சொலல = வெகுவிதமாயுள்ள சாததிரங்க ளெலலாமொரு சறறுநதரிததுநின றவனுடைய வுணமையை யறுதியிடடுச சொலலமாடடா. இபபடிபபடட தொனறை யிபபொழு தறுதியிடடுசசொலல வெனனால முடியுமோ, வென னையொபபார சிலா சொனனாலும விசுவசததிலுளளாராக கேடடு மோசொலலாய இனனமுமிவனுக கிநதமுறைமை விளங கிறறிலலையெனறு கொணடு இபபடி யருளிசசெயததெனக கொளக. (௮௧)

இதனை யினனமிவனறியுமபடி யருளிசசெயகிறா

யாதேனுங காரணததா லெவவுலகி லெததிறமு
மாதேயும்பாக விலசசினையே - யாதலினறு
பேதமே செயவா யபேதமே செயதிடுவாய
பேதாபே தஞசெய்வாய பின

இ-ள. யாதேனும—பின = யாதொருகாரணததினாலுஞ சாவலோகங்க ளெலலாபபொருளகளுஞ சததியைபபொருந தின சிவனுடைய வடையாளமேயாகையால நீயுமிதனைப பேத மெனபாய அபேதமெனபாய பேதாபேதமெனபா யிவறறிற பொருநதினதொனறைச சொலவாயாக பினனெனறது ஞா தாககளுககு இநத மூனறு காரியமுங கருததலலவெனறது. அடையாளமெனறது சாவமுஞ சைதனனியமாக நினறவாகட கனறி நினறிராஷிகையாலெனவறிக. (௮௨)

இநதமுறைமையைததநதிலழுநதினவனுககொழிநதுகேட டவனுககு விளஙகாதெனறு இனனமுமிதனை விளஙக வருளிச செயகிறா.

நினறபடி நினறவாகட கனறி நிறநதெரியா
மனறினுணினறாடன் மகிழநதானுஞ - சென்றுடனே
யெண்ணுறுமைம பூதமுத லெட்டுருவாய் நின்றுமை
பெணணுறறுநின றுமெ பிரான்.

இ - ள் நின்ற—பிரானென்று சொல்லுகிறபேதமும் அபேத மும் பேதாபேதமுமென்று சங்காரகாலத்திலே சத்தியையுமொ டுக்கிக்கொண்டு சங்காரத்தாண்டவஞ்செய்தருளின தம்பிரானே சிருஷ்டிகாலத்திலே தோற்றுவிக்கத்தக்க பொருள்களுடனே பொருந்திய பஞ்சபூதங்களுஞ் சந்திராதித்தரு மான்மாக்களு மாய் நின்றானும், திதிகாலத்திலே படியாப்பிறவித்துயரங் கெடத்திருவம்பலத்தி லானந்தநிருத்தத்தை விரும்பினனுமாகை யா லாதியே தன்னுடைய சொரூபந்தோன்றாமலான்மாவாய் நின்ற முறைமைபோல வான்மபோதந்தோன்றாதபடிச் சிவனு யே நின்றவர்களுக்கொழிந்து சிவனுடைய வுண்மைதெரியாது ()

இனிச்சொரூபத்திலே பொருத்தன்மையாய் நிற்குமுறை மை யருளிச்செய்கிறார்.

சிவமே சிவமாக யானினைந்தார் போலச்
சிவமாகி யேயிருப்ப தன்றிச் - சிவமென்
றுணர்வாரு மங்கே யுணர்வழியச்சென்று
புணர்வாருமுண்டோ புவி

இ - ள் சிவமே சிவமாக யானினைந்தாற்போலச் சிவமா கியே யிருப்பதன்றி = பேதமும்பேதமும் பேதாபேதமு மறப் பக்குவத் திறப்பிரகாசித்தசிவசொரூபமேசொரூபமாக வேறொரு விகற்பமுங்கூடாமல் நானநுபவித்தபடியே யுன்னையும் நிறுத்த நினைந்தாற்போல மானவகனே நீயுமொருவிகற்பங்கள் கூடாம லந்தச்சொரூபமே சொரூபமாகவிருப்பதொழிந்து,—சிவமென் றுணர்வாருமங்கே வுணர்வழியச்சென்று வுணர்வாருமுண்டோ புவி = தானுந்தனியே யொருமுதலென்றும் சிவனுந் தனித் தொருமுதலென்றுந் தன்னுடையபோதத்தாலே யிந்தச்சிவனை யறியவிசாரிப்பாரு மவ்விடத்தேதானங்கெட்டுச் சிவத்துடனே பொருந்த விசாரிப்பாருமுண்டோ வுலகங்களில். (அச)

இன்ன மிதனை விளங்க வருளிச்செய்கிறார்.

அதுவிது வென்று மவனானே யென்று
மதுநீயே யாகின்றா யென்று - மதுவானே
னென்றுந் தமையுணர்ந்தா ரெல்லாமி ரண்டாக
வொன்றாகச் சொல்லுவரோ வுற்று

இ - ள் அது—உற்று = ஆன்மாவுஞ்சிவமு மெப்பொழுது மிரண்டாயிருக்குமென்றும், சிவமென்றொருமுதலில்லை யான்மாதானே சிவமென்றும், சிவம் நீயென்றும் வேறில்லை யுன்னுடைய வுபாதிகள் நீங்கினபொழுதே நீதானே சிவமாகிறா யென்றும் நான் சிவனுடனேகூடிச் சிவனாய் விட்டேனென்றும் தம்மையுள்ளபடி யறிந்திருக்கிற சிவயோகிகளிப்படியே பேதமாகவும் அபேதமாகவும் பேதாபேதமாகவும் சொல்லுவார்களோ மாணவகனே. (அ௫)

இனி கர்த்தாவெல்லாமாய் நிற்கிற சுபாவத்தை விளங்க வருளிச்செய்கிறார்

ஈற்றி யங்கே முதலொன்றா யீங்கிரண்டாய்
மாறாத வெவ்வகையாய மற்றிவற்றின் - வேறா
யுடனா யிருக்கு முருவுடைமை யென்றுங்
கடனா யிருக்கின்றான் காண்

இ - ள் ஈற்றியங்கே முதலொன்றாய = சர்வமுமொடுங்கிநின்ற விடத்துச் சிவமொன்றுமேயாய,—ஈங்கிரண்டாய = மீண்டுஞ் சிருஷ்டிகாலத்திலே சத்தியைத்தோற்றுவித்து மந்தச்சத்தியுந் தானுமாய,—மாறாதவெவ்வகையாய = சர்வத்தையு மந்தச் சத்தியிடமாய்நின்று தோற்றுவித்து அந்தச்சத்தியு மில்லையுங் கூடிநின்று நடக்கும்படி யொழிவற்ற வட்டமூர்த்தியுமாய,—மற்றிவற்றின்வேறாய = இப்படி யிவற்றிற்பொருந்தி நிற்கச

செய்தேயு மிவற்றுக்குத் தான்வேறுமாய் — உடனுயிர்க்கு முரு
வுடைமை = இப்படி வேறாய்நிற்கச்செய்தேயு மொருமுதல்
போல விவைதானேயாய் நிற்கிறவுண்மை,— என்றுங் கடனு
யிருக்கின்றான்காண் = மாணவகனே ? எப்பொழுது மவ
னுடையனு யிருக்கின்றான்காண் இது பேதமென்பார்க்கு
மபேதமென்பார்க்கும் பேதாபேதமென்பார்க்கு மிவையொன்று
மல்லவென்பார்க்கும் பொருந்திநிற்ப னென்னுமுறைமை யறி
வித்தது (௬௬)

சிவனுக்குச் சாவமுஞ் திருமேனியாகி லுடலுறாதெல்லா
முயிருமாதோவென்ற மாணாக்கனைநோக்கி யருளிச்செய்கிறார்

உன்னுதரத் தேர்கிடந்த கீட முறுவதெல்லா
முன்னுடைய தென்னுநீ யுற்றனையோ - மன்னுயிர்க
ளெவ்வகையே காணிற் சாவதுவு மாவதுவுஞ்
செவ்வகையே நிற்குஞ்சிவன் பால

இ - ள் உன்—பால = மாணவகனே ? உன்னுடையவுதரத்
திலே நானாவிதமாய்கிடக்கிற ஜந்துக்கள் வினைக்கீடாக அவை
படுகிற சுகதுக்கவேதனைகளெல்லா முன்னக்குள்ளவினைபோல நீ
கூடிநின் றநுபவித்ததுண்டோ ? ஆகையால், சாத்தையுங்கூடி
நிற்கச்செய்தேயு மவையொன்றுட னும் பற்றற்றுநின்று பிரகாசிக்
கிற சிவனிடத்திலே யவனருளாலே நிலைபெற்றுநிற்கிற வான்
மாக்க ளாக்கையுமழிகையுமாய வருகிறவுண்மை யந்தமுறைமை
போலக்காண் இது சுகதுக்கவேதனைக ளான்மாவுக்கொழிந்து
சிவனுக்கில்லையென்னுமுறைமை யறிவித்தது. (௬௭)

சிவன் சுகதுக்கவேதனைகள்கூடாமல் நிற்கச்செய்தே
சாவமுந்தானாக நிற்கிறசாமர்த்திய மருளிச்செய்கிறார்.

அவனே யவனி முதலாயி னானு
மவனே யறிவாயறிந்தா னானு - மவனேகா
ணானறிப வெண்ணு யவியாகி நின்றானுங்
காணாமை நின்றானுங் கண்டு

இ-ள் அவனே—கண்டு = மாணவகனே! பிருதிவி முதல நாதமீறான தத்துவங்களைச் சேட்டிக்கும்படி யந்தத் தத்துவங்களுக்குத் தத்துவனாய் நின்றானு மந்தப்பரமேசுரனே, யிந்தத் தத்துவங்களைப் பொருந்தி யான்மாக்கள் கன்மபலத்தைப் புசிக்கும்படி யந்தவான்மாக்களுக்கு ஆன்மாவாயி நின்றானு மந்தப் பரமேசுரனே, தோற்றப்பட்ட பூதகாரியங்க ளான்மாக்கள் செய்த வினைக்கீடாக பெண்ணாணலியென்னும் வகுப்புண்டு வடிவாம்படியவற்றை வகுப்பித்து இந்தவகுப்பாகு வகுப்பாய் நின்றானு மந்தப் பரமேசுரனே, இவற்றை யிப்படியறிந்துகூடி யிவை தானாய் நின்று நடத்தச்செய்தேயு மிந்த முறைமைக ளொன்றுமறியாதபடி இரேபவித் தொருபணியற நின்றானு மந்தப் பரமேசுரன (௮௮)

இப்படிப்பட்ட பரமேசுவரனை யிந்தத் திருஷ்டியாலே காணவொண்ணாதோவென்றன்பு மிகுதியாலே கேட்ட மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

இன்றுதா னீயென்னைக் கண்டிருந்துங் கண்டாயோ
வன்றிகதா னுன்னைக் கண்டேனோ - வென்று
லருமாயை யீன்றவடன் பங்கனையார் காணார்
பெருமையைச் சூழல பிழைத்து.

இ-ள் இன்று—பிழைத்து = இப்பொழுது நீயென்னைக் கண்டு மிவையெல்லா மறியச்செய்தேயு மென்னுடைய சொரூபத்தை யுன்னுடைய மாங்கிஷ திருஷ்டியாலே கண்டாயோ வல்லதி யிவற்றையெல்லா மறிந்தறிவிக்கிற நாந்தா னுன்னுடைய

சொரூபத்தை யிந்தத் திருஷ்டியாலே கண்டேனென்றால் யாவர்க்குந்தெரியாத மாயையைப்பெற்ற சத்தியைப் பாதியிலே யுடையபரமேசுரனை மாங்கிஷதிருஷ்டியாலே காணவல்லா ரியாவர், விடப்படாத மாயையாலே மறைக்கத்தக்க மறைப்பை யெல்லாந்தப்பி இந்தத் திருஷ்டிகோசரமாகக்கண்டு வழி பட்டு வீடுபெறுகைக்கு நமமைப்போலெழுந்தருளி வந்தனுக்கிர கித்த வாசாரியமூர்த்தியையொழிந்து வேறொருதெய்வமில்லை யென்றறிவித்தது (அகூ)

இப்படி கடாக்ஷித்த ஞானகுருவின் பெருமையை யருளிச் செய்கிறார்

கடலலைத்தே யாடுநற்குக் கைவந்து நின்றுங் கடல்ளக்க வாராதாற் போலப் - படியி லருத்திசெய்த வன்பரைவந் தாண்டதுவு மெல்லாக் கருத்துக்குச் சேயனுயக் காண.

இ - ள் கடலலை—காண = மாணவகனே ?,கடலின்கண் ணெய்தி திரைகளையலைத்து நின்றுநீந்தற்கு வல்லசாமர்த்திய வான்களுக்கும் கடலினுடையவாழமு மகலமு நீளமுமறிய வாராதுபோலச் பூமியின்கண்ணே சரியைகிரியையோகங்களி லே தீரவநுட்டித்த பத்திமான்களுக்கும் சிவனுடைய ரூப சொரூப சுபாவங்களை யறியவிசாரிக்கி லவர்கள்கருத்துக்கு மெட்டாதாகையாலே நமமைப்போலத் தம்பிரான் திருமேனி கொண்டெழுந்தருளிவந்து ஞானதீக்ஷா க்கிரமங்களினுலே மலங்களைப்போக்கி யவர்களை யடிமைகொண்டது. (கூ0)

ஆகையால நம்முடையபொருட்டாகத் திருமேனிகொண் டெழுந்தருளிவந்த வாசாரியனே யருளுஞ் சிவமுமென றருளிச்செய்கிறார்,

சிவனெனவே தேறினன்யா னென்றமையா லின்றுஞ்
சிவனவனி வந்தபடி செப்பி - லவனிதனி
லுப்பெனவே கூறாமை யுருச் செய்யக் கண்டமையா
லப்படியே கண்டா யவன்.

இ-ள் சிவன் — அவன் = சிவனென்னயானுந் தேறினன் காண்க என்று திருவாதவூர் நாயனாருளிச்செய்த பிரமாணப்படி நம்மை யிரக்ஷிக்குங்காரணத்தா லெப்பொழுதும் பரமேஸ்பரன் நம்மைப்போ லெழுந்தருளிவந்த முறைமைசொல்லி லுலகத்தி லுவரிதமான கூறாமை யுப்பாகவே வடிவங்கொண்டதெல்லாங் கண்ணையா லப்படியேகாண் மாணவகனே யருளாலே சிவன் திருமேனிகொண்ட முறைமை (௯௧)

இன்னமு மிவனசந்தேகந்தீராததுகண்டு ஆசாரியர் ஞானமாக்களி லொருவனல்லாவான்படியைத் திட்டாந்தபூர்வமாக வருளிச்செய்கிறார்.

அவனிவனாய் நின்ற தவனருளா லல்ல
தெவனவனாய் நிற்கின்ற தேழா - யவனிதனிற்
றோன்றும்மாப் புல்லூரி தொல்லுலகி லம்மாமா
யீன்றிடுமோ சொல்லா யிது

இ-ள் அவன் — இது = வாக்குமனாதீத கோசரமாயுள்ள சர்வேஸ்வரன் ஆன்மாக்களைப்போல தேகியாய்த்தோன்றினவிது சகலரிற்பக்குவரான ஆன்மாக்களுக் கவர்களுடைய சத்திநிபாதத்துக்கீடான சங்காரங்களாலே யவர்களுடைய மலமாயாதி கன்மங்களைப்போக்கித் தனக்குடைமையான பரமானந்தத்தையளிக்கைக்குத் தன்னுடையவருளாலே திருமேனிகொண்டெழுந்தருளிவந்ததொழிந்து எப்படிப்பட்டவனெப்படியாய் நிற்பானென்றுசொன்னா லறிவில்லாதவனே, அதெதன்போலவென்னில், பூமியின்கண்ணே தோன்றினமாமானது பயன

படுங்காலங்களிலே கைம்மாறுகருதாமல் சிரத்தையுள்ளவர்களுக்குப் பலனைக்கொடுத்துச் சந்துஷ்டிபிறப் பியாநிற்கும், இஃதொழிந்து இந்த மரநதாரகமாய்நிற்கிற புல்லுரிமரத்தின் பலத்தைக்கொடுக்கவற்றோ மாணவகனே சொல்லாய். இதனை=இது திருமேனிகொண டெழுந்தருளிவந்த வாசாரியனைச் சிவனுரு வென்றே தெளியவறிவித்தது, (கூஉ)

அருளென்ப தொனறுவேண்டுமோ சிவமொன்றுமேயமையாதோவென்ற மாணுக்கனைநோக்கி யந்தச்சிவமு மருளாலொழிந்து மோக்ஷத்தைக் கொடுக்கமாட்டாதென் றந்தவருளின பெருமையை யருளிச்செய்கிறார்,

முத்தி முதறகொடிக்கே மோகக் கொடிபடர்ந்
தத்தி பழுத்த தருளென்னும் - சுத்தியினுன்
மோகக் கொடியறுகக முத்திப பழமபழுக்கு
மேகக் கொடியெழுங்கா ணின்று.

இ - ள். முத்தி — இன்று =முத்தியைப்பெறுவதற்குமுதலான வான்மாவெனப தொருகொடியிலே யநாதியே மறைக்கத்தக்க வாணவமலத்தினகாரியமான வஞ்ஞானமானகொடி வெகுவிதமாகப்படாந்து, இதனாலே யிதாகிதமவினைந்து, இது காரணமாக மயக்கத்தைச்செய்கிறமாயையாலே பூதகாரியமான வுடமபு சநநந்தோறும பலியாநிற்கும, இவை பகுக்கப்பட்ட வெல்லைகளிலேயறிந்து தம்பிரானுந திருமேனிகொண டெழுந்தருளிவந்து அருளாலேசமைந்த வநேகதாரைப்பட்டவாளாலே யிந்தவாணவமலமான மூலத்தைவேரறுக்க, வப்பொழுதெல்லா மலங்களின்முத லடங்கலுஞசோாந்துபோய் முத்தியானது வெகுபலமாகப் பலியாநிற்கும், இத்தப்பழக்கத்திலுடைய வீரசத்தியாலே சிவமென்று மானமாவென்று மிரண்டல்லதப்படியப்பொழுதேயொரு சீரமையானசுபாவத்திற் றேன்றுநிற்கும்,

இனி யிநதவததத்தைத தமககருளிசசெயது தம்மை யிர க்ஷிததவாசாரியனையுந தீககைமுதலாக வவனிரக்ஷிதத முறைமையயுமினற வேழுசெயயுளாலு மருளிசசெயகிறார,

அகளததி லாணநதத தானநதி யாயே
சகளததிற றையலுடன றோனறி - நிகளத்தைப்
போககுவதுஞ செயதான்றன பொனனடியென் புன்ற
லைமே லாககுவதுஞ செயதா னவன

இ - ள். அகள—அவன = அடியேனை யீடேற்றுகைப பொருட்டாக சகளீகரமான திருமேனியிலே தனனுடைய காருணணிய சததியுடனேதோனறிக குறறமறற நிலததினுண டாகிய வாநநததததி லானநதியாயச சமைநதெழுநதருளியிருந தன்றியே பிணிததவிலஙகாகிய மலமாயா திகனமஙகளை யநேக சஙகாரஙகளாலே போககி யிடுவதுஞசெயது, தனனுடைய பொலிவினையுடைததாகிய திருவடியை யெனனுடைய பொல் லாததலையிலே வைபபதுஞசெய்தான. இது தீககைமுறைமை யறிவிததது. (௬௪)

குறறமறுத் தெனனையாட் கொண்டருளித் தொன்
னுறற தியானத துடனுறைவா - முறறவரின [டபோ
மாட்சியுமாய்நிறபரியானமறறொன்றைககண்டிடினக்
காட்சியுமாய நிறபார கலநது.

இ - ள். குறற - கலநது = இபபடித தமமுடைய வருளா யெனனுடைய மலமாயாதி கனமஙகளைப போககியேயெனனு டைய சுதநதரததையுமறுக கடிமைகொண்டெனக கருளியே பிரிணையநிறகிற தமமுடைய திருவடிஞானததையும் பிரகா சிபபிதது, யானெனறு மதுவெனறுஞ சொல்லுகிற வேறுபாட் டையுமறுததுத தமமுடையவசததிலே யாககிக்கொண்ட வல

த்ரங் கூடிக்கொண்ட முறைமையிலே நான் இயானிப்பானும் நிற்கைக்கு வந்தத இயானமுந் தாமேயாய நில்லாநிற்பர். இத் தநிலை முதிரவருகிற ஞேயத்தமுந்தனுந் தாமேயாகாநிற்பர். பிராரத்தவத்தாலே நிலைதிரிந்து விசுவந்தோன்றுங் காலத்து மந் தவிசுவந் தோன்றுமல காணபானுங் காணப்படும் பொருளுந் தாமேயா யிராநிற்பர் இது தீக்கைக்குப்பின்பு உண்மையிலே நிறுத்தின நிலையறிவித்த தெனக்கொள்க. (கூரு)

ஆளுடையா னெந்தரமு மாளுடையா னேயறியுந்
தாளுடையான் றொண்டா தலைக்காவ - லாளுந்
திருவிசலூ ராளுஞ் சிவயோகி யின்றென்
வருவினையை மாற்றினான் வந்து.

இ - ள். ஆளுடையானை=இப்படி யெழுந்தருளிவந் தென்னையடிமையாக வடிமைகொள்ளுகையாலே யாளுடையதேவனென்கிற திருநாமத்தையு முடையானை,—எந்தரமுமாளுடையானே=என்னைப்போலுந் தனாந்தவடியாரையு மடிமைகொள்ளுவானு மவனே,—அறியுந்தாளுடையானை = சாவானமாக்கள பொருட்டாகப் பஞ்சகிருத்தியத்தையு நடத்திப்பிதிலே பகுவப்பட்ட வான்மாக்களை யறிந் திரக்ஷிக்கவல்ல திருவடியுமுடையானை,—தொண்டர் தலைக்காவல்=உரியவடியாரை மாயப்படைமேலீட்டு வினைசெய்யாது பாதுகாக்கைக்குத் தலைக்காவலாயுள்ளவனை,—நாளுந்திருவிசலூ ராளுஞ்சிவயோகி =ஏககாலமுந் திருவிசலூரே திருப்படை வீடாகவுடைய சிவயோகி,—இன்றென் வருவினையை மாற்றினான் வந்து=இப்பொழுது தென்னுடைய வருஞானத்தாலே கன்மபலங் காரணமாக மாயையாகிற வூசலிலே யுழலாநிற்கிற சனன மரணங்களாகிய விசனசையையொழித்து அசைவறறநிலமாகிய திருவடியிலே வைத்தான். இது தம்முடைய வாசாரியன திருநாமமு மவனது மகிமையு மருளிச செய்ததெனக் கொள்க. (கூசு)

தூலத் தடுத்த பளிங்கின் றுளக்கமெனத்
தூலத்தே நின்று துளங்காமற் - காலத்தாற்
றூளைத்தத் தெனபிறவித் தாளை யறவிழித்தார்க்
காளன்றி யெனமா றதற்கு.

இ-ள் தால—அதற்கு = படிகக்கல்லிற் பிரகாசமான தடுத்தவன்னங்களினுடைய ரூபங்களைக்கொண்டு தன்னுடைய சுத்தமான பிரகாசந் தோன்றாம லதுவதுவாய் நின்றாற்போலக் கானுந் தேகத்திலே பொருந்திநின்று, சநந மரணங்களிலே மொத்துண்ணுமல மலபாகமும் கன்மவொப்புஞ் சத்திநிபாதமு முண்டான வவதாரத்தே யவதிகூடாமலெழுந்தருளிவந்து தம்முடைய பொன்னான திருவடியை யென்தலையினு மிருதயத்தினும் நிறகும்படி தந்தருளி, எனக் கெழுவகையா யெண்பத்து நான்குநூறாயிர யோனிபேதங்களிலுண்டான சநநங்கள் காலற்றுப்போம்படி இருக்கண்சாத்தியருளின தம்பிரானாருக்குத் கைம்மாறுசெய்ய வெண்ணுமளவி லதனவேறொன்றுக்குங் குறைவில்லுறைகையா லென்னை யடிமையாகக் கொடுத்து நான் பாங்கெட்டு விடுமதொழிந்து வேறொரு கைம்மாறு கண்டிலேன். இது கைம்மாற்ற வெழுந்தருளிவந் திரக்ஷித்தவ திசயமறிவித்தெனக்கொள்க. (கூஎ)

இக்கணமே முத்தியினை யெய்திடினு மியானினைந்த
வக்கணமே யானந்த தந்திடினு - நற்கணத்தார்
நாயகற்கு நாயகிக்கு நாணடிமை யெப்பொழுது
மாயிருந்த லன்றியிலை னியான்.

இ-ள். இக்கணமே-யான். = பெறுதற்கரிய முத்தியினை இப்பொழுது கூடினமாத்திரைக்குள்ளே பெறினும் நான் கருதப்பட்ட பரமானந்தம் கருதின கருத்து மாறுவதன் முன்னே பெறினு மிவையொன்றையு மாதரிப்பதில்லை, இத்தப்பேற்றை

யெளிக்கைப்பேரருட்டு அடியேனுக்காகத் திருமேனிகொண் டெழுந்தருளிவந்த சிவயோகிகள் தம்பிரானுக்கு மவருக்கு வாக்கு மனக் காயமாய்நின்ற ஞானசத்திக்கு நானெப்பொழுது மீளா வடிமையா யிருப்பதொழிந்து வேறொன்றுமில்லை. இது பேற் றினதிசயத்தா லடிமை சாதித்ததென வறிக. (௧௮)

என்னை யுடையவனவந் தென்னுடனாயென்னளவி
லென்னையுந்தன் னாளாகக் கொள்ளுதலா - லென்னை
யறியப்பெற் றேனறிந்த வன்பருக்கே யாளாய்ச்
செறியப்பெற் றேன்குழுவிற் சென்று

இ - ள் என்னை - சென்று = எனக்குக் கர்த்தாவாகிய பரமே ஸ்வர னென்னுடைய வநாதிமயக்கத்தை நீக்குதல் பொருட் டென்னைப்போ லெழுந்தருளிவந் தெனக்குள்ளே பொருந்தி நிற்போமென்று மென்னைத்தெளிய வறிவிக்கும்மளவி லாத்தக்கரு ணையாலே நானு மப்பொழுதே தம்முடைய வசமாயென்னையு மப்பொழுதே தாமவிரும்பின வடிமையாகக் கொள்ளுகையா லிப்படித் தம்பிரானுக்கு மீளாவடிமை யானேனென்று மெ ன்னுடைய வுண்மையு மறியப்பெற்றேன், இப்படி முன்னே யறிந் திருக்கிற சிவயோகிகளுக்கு ஏவற்செய்து மவர்கள் திர ட்சியிலே சென்றிருக்கவும் பெற்றேன். இனியென்னபெறவே ணும். இது பேற்றினுண்டான நிஷ்பல வேட்கையெனவறிக.

சிந்தையினு மென்றன் சிரத்தினினுஞ்சேரும்வகை
வந்தவனை மன்னிடாம் வாராமற் - றந்தவனை
மாதினுட னெத்திறமும் வாழ்ந்திருக்க வென்பதலா
லேதுசொலி வாழ்த்துவே னின்று.

இ - ள். சிந்தை - இன்று. = தன்னுடைய திருவடியான தென்னுடைய தலையினு மிருதயத்திலும் பொருந்தும்படி திரு

மேனிகொண் டெழுந்தருளி வந்த தம்பிரானை. பூமியின்கண்ணே ரன்ன பிறந்திராதது திரியாதபடி பரமானந்தத்தை யளித்தவனை, எப்பொழுதும் வாழ்த்துமளவில் லெல்லைப்படா தாகையால் தனவைவிட்டு நீங்காத ஞானசத்தியுடனே யெவ்விடத்தும் வாழ்ந்திருக்கவென்று சொல்லுவ தல்லால்வனை யெப்படி வாழ்த்துவேன். இது சிவனைக் கூடப்பெற்றவாக ளொருயுணர் விறந்து நின்றநுபவிக்கும் தொழிந்து மவனுடைய வுண்மை யறிந்து துதிக்கவெண்ணுமளவிலவனுணாயுணாவுங் கெட்டாத வனென்ற விடமறிவித்தது (ஙா)

ஆதார மாகி யருளோடு நிறகின்ற
சூதான வினபச சுகவடிவை - யோதாம
லுள்ளவாகள் கூடி யுணாவொழிய நிறபதலால்
தெள்ளவா ராதே சிவம்.

திருக்களிறறுப்படியார மூலமுமுறையும் முற்றிறறு.

திருச்சிறறமபலம்.

தனியன்.

சேடன் படிபுரககுந் தென்கடலூ ருய்யவந்தான்
பாடுங் களிறறுப படிதனககு - நீடிமையோர்
தேடும புகழ்ச்செஞசொற சிவபபிரகாசன திருந்த
காடியுரை காட்ட நயந்து.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அருணந்திசிவாசாரியர்

அருளிச்செய்த

# இருபாவிருபஃதுமூலமும்,

திருவாவடுதுறையாதீனம்

நமசிவாயத்தம்பிரான் செய்த உரையும்.

இவை,

காஞ்சிபுரம்

மகாவித்வான்

கந்தசாமிமுதலியார்

மாணாக்கர்

கா - சுந்தரமூர்த்திமுதலியார்

அவர்கள் பார்வையிட்டு,

கனணிகைபபோ

முருகேச முதலியாரால்

சென்னை

ஜீவகாருண்யவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1898௵

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இருபாவிருபஃது.

---

## வெண்பா.

கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி (நல்லூர்
மண்ணிடையின் மாக்கண் மலமகற்றும் - வெண்ணெய்
மெய்கண்டா னென்றொருகான் மேவுவரால் வேற்றுமை
கைகண்டா ருள்ளத்திறக் கண்.

## வியாக்கியானம்

கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி - பூரணகத்தர் வாக விருக்கப்பட்ட ஸ்ரீகண்ட பரமேஸ்வர னாசாரிய விக்கிரகமாகத் திருமேனிகொண் டெழுந்தருளு மவதாரத்து நெற்றியிற் றிருநயனமுந் திருமிடற்றிற் றரித்தருளின நஞ்சமாகிய கறுப்பினையு மறைவுசெய்தருளி,—மண்ணிடையின் மாக்கண் மலமகற்றும் - பூமியினகண்ணே வியாபிக்கப்பட்ட ஆன்மாக்களுக்குண்டாய பாசத்தைத் தீக்ஷாக்கிரமங்களினாலே போக்குகிற,—வெண்ணெய்நல்லூர் மெய்கண்டான் - திருவெண்ணெய் நல்லூரென்கிற திருப்படை வீட்டிலே திருவவதாரஞ் செய்து மெய்கண்ட தேவனென்கிற திருநாமத்தினையுந் தரித்தருளினவனை,—என்றொருகான் மேவுவரால் - ஒருகாற்சென்று பொருந்தினைத்தவர்கள்,—வேற்றுமை கைகண்டா ருள்ளத்திறக்கண் உயிர்க்குயிரா யிருக்கிற சிவனைத் தங்களிடத்திலே புலப்படக் கண்டவர்கள், (இதன்கருத்து,) கடவுள் வணக்கமாகிய குரு

தி என்னவே சிவமென்று மாசாரியரென்றும் வேறுயிராதிரண்
டு மொருமுதலென்பது கண்டுகொள்க. அப்படியாறு விந்தச
சிவ னிப்படி மானிடவேடமாக வேண்டுவா னேனெனில அஃ
தாவது விஞ்ஞானகலா பிரளயாகலா சகலரெனப்பட்ட மூவ
கை யான்மாக்களையுஞ் சிவனிரக்ஷிக்கு மிடத்து யாதாமொருப
டசிகளை மிருகங்களைப் பிடிக்கவேண்டினவாக ளதற்கதற் கேற
ற வினப்பாவைகளைக் காட்டிப் பிடித்தாற்போல ஆன்மாக்க
ளெடுக்கப்பட்ட வுருவத்துக்குத் தக்க திருமேனி கொண்டரு
ளி யிரட்சிக்கை கடனாகையால சகலராயுள்ள மானுடரை யிரட்
சிக்குமிடத் தவர்களைப்போல மானிடச சட்டை சாத்தியாசாரிய
விக்கிரகமாக வெழுந்தருளின தெனவறிக, சிவஞானமாக்கள
டுக்கப்பட்ட வுருவத்துக்குத் தக்க திருமேனி கொண்டருளுவ
னென்பதற்குப் பிரமாணம். ஞானபூசா கரணத்தில். "எவ்வுல
கத்து மூர்த்தி யேதுகொண் டிவணியங்கு, மவ்வுலகத்து மேனி
யதுகொண்டங்கமரு மீசன்". எ-து. கண்டுகொள்க சகலரா
யுள்ள மானுடரை யிரட்சிக்குமிடத் தவர்களைப்போல மானிடச
சட்டைசாத்தி யாசாரிய விக்கிரகமாக வெழுந்தருளுவ னென்ப
தற்கு. பி - ம். போற்றிப் பஃறொடையில், "கனைநெறி விஞ்
ஞானகலா ரமேலமொன்றிணையு, மந்நிலையே யுண்ணின் றறுந்
தருளிப் - பின்னன்பு மேவாவிளங்கும் பிரளயாகலருக்குத், தே
வாயமல்கன மங் கீாததருளிப் - பூவலயந், தன்னின் றங்காசக
லாக்கவர்போல், முன்னின்று மும்மல்நீாத தாட்கொள்கை
யன்னவனுக், காதிகுண மாதலின்ஞ் லாடுந் திருத்தொழிலுஞ், சோ
தி மணிமிடற்றிற் சுந்தரமும் - பாதியாம், பச்சையிடமும் பவள
த் திருச்சடைமே, வைச்சந்தியு மதிக்கொழுந்து - மச்சமற, வா
டொரவு மழகார் திருநுதன்மே, னீடுருவவன்னி நெடுங்கண்ணுங்
- கேடிலயங், கூட்டுந் தமருகமுங் கோலவெரியகலும் பூட்டா
வுக் குச்சுழ புலியதளும் - வீட்டின்ப, வெள்ளத் தழுந்தி விடுங்

தாளினு மடியா ருள்ளத்தினும் விரியா வொண்சிலம்புங் - கன்ன வினை, யென்று பிறப்பறுக்கச் சாத்திய வீரக்கழலு, மொன்றமு ருத்தோணரும முள்ளடக்கி - யென்று, மிறவாதவினைபத் தெமை யிருத்தவேண்டிப, பிறவாமுதல்வன் பிறந்து - நறவாரும், தாரு லாவும் புயத்துச் சமபந்தநாதனென்று, பேரிலா நாதனொரு பேர் புனைந்து - பாரோரத, முண்டி யுறக்கம் பயமின்ப மொத்தொ ழுங்கு, கொண்டுமகிழ்ந்தருணம்போற்றி" என்றும் திருவாசகத் தில் அருபரத்தொருவ னவனியில்வந்து, குருபரனாகி யருளிய பெருமையைச், சிறுமையென்றிகழாதே" எ-ம். சிவப்பிரகா சத்தில், உணாவாயின்ற ஞானக்கூத்த னொருமூர்த்தி கொடு குறுகி." எ-ம். "இறையருளுருவாய வந்துகூட்டிடுமே." எ-ம். வருமேற்கோள்களைக்கண்டுகொள்க. இவ்வுதாரணங்களைக் காட்டி யது இந்நூலாசாரியனை முன்னிலைக் கர்த்தாவாக நாட்டிவரு கையா லாசாரியருக்குங் கர்த்தாவுக்கும் வேற்றுமை யில்லை யென்னுங் கருத்தைப்பற்றியென்வறிக. இந்நூற்பயன் புறச்சம யத்தாரால் மயங்காமை. இந்நூற்காரணம் பொருணிச்சயமுற்று நிட்டைகூடல். (௧)

இங்ஙன மாசாரிய மூர்த்தியாகவந்து இரட்சிக்கிற தேவரீ ருயிர்க்குயிராயின் றறிவிக்கச் செய்தேயு மடியேனுக்கு அறி யாமை யுண்டாவானே னென்னும் வினாவுமதற்கு விடையுமே லருளிச்செய்வா னெடுத்துக் கொண்டருளியது.

நேரிசையாசிரியப்பா.

கண்ணகன் ஞாலத்துக் கதிரவ னொருவனை
வெண்ணெயத் தோன்றிய மெய்கண்ட தேவ
காரா கிரகக் கலியாழ் வெனின்
போரா வின்பத் திருத்திய பெரும
வினவ லானா துடையே னெனதுள

நீங்கா வில்லைமை யூஙகு முளையா
லறிவின னைமமலம பிரிவின் மையெனி
ஞொராவினை யுணாத்தும விராயகின றனையேற்
றிபபிய மங்கோ பொய்ப்பகை யாகாய்
சுதத னமலன சோதி நாயகன்
முத்தன் பரம்பர னெனுமபெயா முடியா
வேறுநின றுணாதநின வியாபக மினறுயப்
பேறு மினறு மெமகெகம பெரும்
விருநிலக தீகீ ரியமா னனகாலெனும
பெருநிலைத தாணடவம பெருமாற இலாதலின்
வேறோ வுடனோ விளமபல வேணடுஞ
சிறி யருளல சிறுமை யுடைத்தா
லறியாது கூறினை யபககுவ பககுவக
குறிபாாத தருளுனல குருமுத லாயெனி
னபக்குவ மருளினி மறியேன மிகததரும
பககுவம வேணடிற பயனிலை நினறுற
பக்குவ் மதனுற் பயனி வரினே
நினைப பருவ நிகழததா தனறோ
தன்றைப பாரிலி யெனபதூஉ தகுமே
மும்மலஞ் சடமணு மூபபிள மையினி
னின்மலன் பருவ நிகழ்ந்திய தியாககோ
வுணர்வெழு நீக்கததை யோதிய தெளிவோ
யினையிலி யாயினை யெனபதை யறியேன
யானே நீக்கினு நதானே நீங்கினுங்
கோனே வேண்டா கூறல் வேண்டுங்
காண்பா ரியார்கொல் காட்டாக் காலெனு

மாண்புரை யுணர்கிலேன் மன்றபாண்டியன
கேட்பக் கிளக்கு மெய்ஞ் ஞானத்தி
னூட்பால் வாக்கரு ளென்பதை யறியேன்.

பி-ம் கண்ணகன் ஞாலத்துக் கதிரவனுமென்ன வெண்
ணெய்த்தோன்றிய மெய்கண்டதேவ - இடமகன்ற பூமியினிடத்
துண்டாகிய விருளைக் கடிந்து பொருட்டாக வாகாசமாகாசத்
திலே தோன்றப்பட்ட வாதித்தனைப்போல வான்மாக்களுக்
குண்டாகிய வஞ்ஞானமாகிய விருளைக் கடிந்துபொருட்டாகத்
திருவெண்ணெய் நல்லூராகிய திருப்படை வீட்டிலே திருவவ
தாரஞ்செய்தருளின மெய்கண்டநாதனே,— காராக்கிரகக் கலி
யாழ வெனைநினைப் பேராவின்பத் திருத்திய பெரும - அஞ்ஞான
மாகிய சிறைச்சாலைப்பட்டு விலங்காகிய தேகத்திற்கிடந் தழுந்
துகிற வடியேனை நின்னுடைய வசைவற்ற பேரின்பமான வ
நுபவத்திலே யிருத்திய தம்பிரானே,—வினவலா னுதுடையே
ன - அடியேனுக்கொருவினா தேவரீர் சந்நிதியிலே விண்ணப்பஞ்
செய்யவேணுமென்று அவசரமு முண்டாயிருந்தது, அதேதெ
ன்று கேட்டருளுமாகில் எனதுளநீங்கா மைநிலையுங் குழுமையா
ல்- அடியேனுள்ளத்தைவிட்டு நீங்காமல் நிற்கிற மும்மையுமா
கியே தொடங்கி மிகவு முண்டாயிருக்குமிடத்தும்,— அறிவின்
மை - அடியேனுக் கறியாமை வருவானேனென்று கேட்கில்,—
மலமபிரி வின்மையெனின - அஃதான்மாவினோடு மநாதியேகூடி
வரப்பட்ட வாணவமல முதலைனவிட்டு நீங்காதபடியினாலேய
னுனக்கறியாமை யுண்டானதென்று தேவரீரருளிச்செய்யில்,—
ஓராவினையுணர்த்தும் - அடியேனைவிட்டுத் தேவரீர் நீக்கமாக
வொழுங்கின்ன றருளுமென்னின்றதை யுண்டாக்கும்,—விராய்
நின்றனையேல் அப்படிக்கழமை நீக்கமாகச்சொல்லாதுநாமு முன்
னோடுகூடியே நிற்போமென்றருளிச்செய்யில்,- திப்பியத்தேர
அப்புதித் தேவரீரருளிச்செய்தது தெய்வீகமான தோராச்சரிய

மாகவிருந்தது. அது வென்னென்று கேட்டருளுமாகில்,-பொய்
ப்பகை,யாகாய - அப்படி யஞ்ஞானத்தோடும் கூடியிருக்கப்
ட்ட வடியேனோடு தேவரீருங் கூடியிருக்குமாகில் பொய்யென்கி
றவஞ்ஞானத்தைச் சேதிக்கிறவனென்று தேவரீரைச் சொல்ல
வேண்டியதில்லையாம். அன்றியும்,—சுத்தனமலன் சோதிநாயகன
முத்தன் பரமபரனெனும் பெயர் மூடியா-அநாதி சுத்தனாயிருக்
கிறவனென்றும் நின்மலனென்றும் எல்லாத்துக்கும் மேலான காரி
யத்தமில்லாத பேரொளியா யிருக்கப்பட்ட கர்த்தாவென்றும்
சாவ வுபாதி சூனியங்களெல்லாங் கழன் றப்பாறப்பட்டவனென்
றும் வஸதுவென்றுசொல்லப்பட்டதற் கெல்லா மப்பாறபட்ட
வஸ்துவென்றும் இங்ஙனஞ் சொல்லப்பட்ட திருநாமங்களுந்
தேவரீருக் குண்டாகா (அதெப்படி யென்னில் மலாந்தன் மல
சம்பந்தியா யிருக்கிறவனோடுகூடி நில்லானென்று சீடன் வினு
வ) அப்படியல்ல,— வறுநீன றுணாதக்கின-நாமுனோடுகூடி
நிற்பதில்லை யுன்னறிவுக் கறிவாக வேறே நின்றே யுன்னையறி
விந்து நிற்போமென்று தேவரீரருளிச்செய்யில்,--வியாபகமின
ருயப்பேறு மின்றுமெமக் கெம்பெரும - என்னுடைய பெருமா
னே அப்பொழுது தேவரீருக்குச் சாவவியாபியென்கிறது மில
லையா அடியேனுக்குச் சாயுச்சியமென்கிற பேருமில்லையாம்,
அன்றியும்,—இருநிலர் நீரீ ரியமானன காலெலும் பெருநிலைத
தாண்டவம் பெருமாறகிலாதலின் - இருநிலஞ்ய்த நீயாகிநீருமாவெ
யியமானனுமெறியுங் காறறுமாகி யருநிலையதிங்களாய ஞாயிறு கி
யாகாயமா யட்டமூர்த்தி யாகியென்னுந் திருத்தாண்டகத்தினப
டி பூரணநிலையாகிய திருக்கூத்தும் தேவரீருக்கில்லையாகவேணு
ம்,ஆகையால்,-வேறாவுடனே விளம்பல்வேண்டும - தேவரீரடி
யேனை யறிவிக்குமிடத்து வேறாய் நின்றறிவிக்குமோ கூடியொ
ன்றாய் நின்றறிவிக்குமோ விவை யிரண்டிலுமொன்று திருவ
ருளிச் செய்தருளவேண்டும்,,,,சீடியருளல் - அப்படி யடியேன்

கேட்ட வினவுக்கு விடையருளாமற் றிருவுளக்கேடாக வேண்டு வதில்லை, அது வென்னென்று கேட்டருளுகில், சிறுமைய டைத்தால - அடியேன் றற்போதனுடைமையால் தோன்றினதை விசாரியாமல் விண்ணப்பஞ்செய்தே னதற்குத்தா மருளிச்செ ய்து தெளிவிக்கைக்கே வேண்டுவது,—அறியாது கூறினை - அப் படி நீ கேட்ட வினவுக்குத்தாரு சொல்லாமற் கோபித்துக்கொ ண்டோமென்று நீ யறியாமற்சொன்னாய், அப்படியானால் தே வரீர் திருவுளக்கேடானேனென்று நீ கேட்கில்,—அபக்குவ பக்குவக் குறிபார்த்தருளினை குரு முதலாயெனின் - அநுவயம் குருமுதலாய் பக்குவ பக்குவ குறிபார்த் தருளினையெனின் - கா மாசாரியனாதத யானையாலே அபக்குவனைக்கண்டாற் கோபி க்கிறதும் பக்குவனைக்கண்டாற் பிரியப்படுகிறது மாசாரியனுக் கு முறைமையாந் தன்மைபோல் நான்சொன்னவத்தங்களை நீ மாறுபாடாகக் கொள்ள நாம் கோபித்துக்கொண்டதா யிருக்கு மென்னில், அப்படித் தேவரீர்சொன்ன வத்தங்களை யடியே னறியுமிடத்து,—அபக்குவ மருளினுமறியேன - அடியேனபக் குவனுடையாலே தேவரீரருளிச்செய்கிற வத்தங்களை யறியப் போகிறதில்லை, அதுவென்றியும்,—மிகத்தருமபக்குவம் வேண் டில் - மிக்கத சத்திநிபாதத்துக் குரிய பக்குவனாயிருக்க வேணு மென றருளிச்செய்யில்,—பயனில்லை நினைல - பக்குவனுக்கு ஒ ருவர் சாதாரணமாகவுந் தறிவிக்க வேண்டாதது கொண்டே தேவரீராலொரு பிரயோசனமு மில்லையாம், அலலது,—பக்குவ மதனுற பயனீவரினே - ஆன்மாக்கள் பக்குவத்துக்குத் தக்கபய னுக்குத் தேவரீரொழுந்தருளுமாகில்,—நின்னைப்பருவ நிகழ்த்தா து - அந்தப்பக்குவமென்று சொல்லப்பட்டது சடமானபடியினு லே அது தேவரீரை யடியேனுக் குண்டாக்கமாட்டாது,—அன் றே - அதல்ல, அந்தப்பக்குவமே யுண்டாக்குமென்னிலோ,—

தன்னொப்பாரிலி யென்பதூஉமே - தேவரீரையொத் தாரு மிக்காருமில்லாதவரென்று சிவாகமங்கள் சொல்லுகின்றனும் வழுக்கல்லவா: அதனறியும்,— மும்மலஞ் சடமுனு மூப்பிள்ளமையினினின்மலன்பருவ நிகழ்ந்திய தியாக்கோ - ஆணவமாயை காமியமென்னு மூன்றுமலங்களுஞ் சடமாயிருப்பதுகொண்டு பக்குவம வேண்டுவதில்லை, ஆன்மாவச்சுமாறி யெடுத்தவுடல்தோறு மடுத்ததின் றன்மையாய மூப்பிள்ளமை வருதலால் மூப்பிள்ளமை யில்லாதவனுக்குப் பக்குவங்கூடாது, தேவரீரோ வென்றால் தேக சம்பந்தமில்லாத வமலனாயிருக்கையினாலே யதுசொல்லவொண்ணாது, ஆதலாற் பக்குவ மாக்காயதென்று வினவியவிடத்து, —உணர்வெழ நீக்கத்தையோதியது - உனக்கோ ரறிவுண்டாமிடத்து அந்தமலங்கணீங்குற வவதரத்தாற் புண்ணியபாவந் துலையொப்புவந்துண்டாய பாசனீங்கினது தானும்பக்குவமென்றது,—எனினே - என்று தேவரீ ரருளிச்செய்யில்,—இணையிலியாயினை யென்பதையறியேன் - தேவரீரை யொப்பாரு மிக்காருமில்லாதவரென்கிறதை யடியேனின்றுவிட்டேன். அதேதென்று கேட்டருளுகில்,—யானே நீக்கினுந் தானே நீங்கினுங் கோனேவேண்டா - அந்த மலங்களை யடியேன் தானே நீக்கிக் கொள்ளினு மவை தானேநீங்கினுங் கோனாகிய தேவரீர் வேண்டா, ஆகையால் தேவரீர் நீக்க விகாரியல்லீரென்று வினவியவிடத்து,—கூறல்வேண்டும் - அடியேன் விண்ணப்பஞ் செய்யத்தக்க தொன்றுண்டு அதேதென்று கேட்டருளில்,—காண்பாரார் கொல்காட்டாக் காலென்னு மானை புரையுணர்த்தினை - "காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்கால்" என்னு மழகிய திருத்தாண்டகத்தி னுரையைத் தேவரீரின் றிங்கருளிற்றில்லையும், — மன்று - அறுதிப்பட்டு நிச்சயமாக அடியேனுக்கு முறைமையாவது,— பாண்டியன் கேட்பக் கிளக்கு

மெய்ஞ்ஞானத்தி னுட்பாலவாக்கரு ளென்பதை யறியே. - பாண்டிய ராசாவானவன் கேட்கத்தக்கதாகத் திருஞானசம்பந்தசுவாமிக ளருளிச்செய்த ஆட்பாலவாக்கருளென்னும் உண்மைஞான வுபதேசத் திருப்பாட்டினுரையாகிய சிவஞானத்தை யறிந்தேனில்லை, நிச்சயமாக வதுவேயறிவென்று அடியாராயுள்ளவர்களுக்குத் தேவரீ ராயென்று கண்டிருக்கிறதொழிய வேறொன்று விகற்பித்துக்கேட்க வழக்கில்லையென்கிற முறைமையே யறிவாயுள்ளது என்று விடைவறேனை - (க-து) பதியொன்றுண்டென்று மப்பதி தொழிற்படுத்தினாலன்றி யாவுந் தொழிற்படாதெனபதாம (நு-பம) மலம பிரிவின்மையெனின எனபதற்கு ஆன்மாவினோடு மநாதியேகூடி வரப்பட்ட வாணவமல முனையிட்டு நீங்காதபடியினாலென்று பொருள்கூறியதற்கு பி-ம, சித்தியாரில, "அறிவிலனமூர்த்தனளித்தன" எனனுஞ் செய்யுளில "பிரிவிலன் மலத்தினோடும் கண்டுகொள்க. விராயநின்றனையேல் - அப்படி நம்மை நீக்கமாகச்சொல்லாது நாமு முன்னோடுகூடியே நிற்போமென்று பொருள்கூறியதற்கு பி-ம, சிவஞானபோதத்தில். "மெய்ஞ்ஞானந்தனனில விளையாதசத்தாதல" என்ற பாடத்தில் "தண்கடனீருப்புப் போற்றுனேயுளமுளவாய்த்தான" கண்டுகொள்க. வேறுநின்றுணாதின் எ-கு நாமுன்னோடு கூடி நிற்பிலலை யுன்னறிவுக் கறிவாக நாம வேறேநின்றே யுன்னையறிவித்து நிற்போமென்று பொருள் கூறுதற்கு பி-ம, சிவஞானபோதத்தில், 'மனனுசிவன் சத்தியின மற்றுலகஞ் சேட்டித்த, தெனனு மறையி னியனமறந்தாய் - சொன்னசிவன், கண்ணுயுளமவிளையாற கண்டறிந்து நிற்குங்கா, ணெண்ணேன் சிவனசத்தை யின்று' எ-து கண்டுகொள்க. சிறுமையுடைத்தால் எ-கு ஆசாரியன் மேலவைத்து ஆனமா வவனுக்குச் சிறுமையாமென்று பொருளுரைப்பாருமுளர் அது குருசிஷ்யக்கிரமத்துக்குப் போதாதாகையால் பொருளாகாதென வறிக. பக்குவமதனுற் பயனீவரினே எ-கு ஆன்மாக்கள் பக்குவத்துக்குத்தக்க

பயனாகத் தேவரீ ரெழுந்தருளுமாகில் என்று பொருள் கூறிய தற்கு பி - ம். சிவப்பிரகாசத்தில், "நாடியசத்திநிபாத நாலுபாத நண்ணுமவகை யெண்ணரிய ஞானபாதம், கூடுமவர் தமக்குணர வாயினின்ற ஞானக்கூத்தனொரு மூர்த்தி கொண்டுகுறுகிமோக, நீடியகே வலசகல் நிகழாவாறு நிறுத்திமல மறுக்குமிது நிலையாகச் தங், கேடிலபுகழ் தருஞ்சரிதை கிரியாயோகக் கேண்மையரே வினை யுணர்த்தக் கிளக்குநூலே" கண்டுகொள்க. உணர்வெழு நீக்கத்தை யோதியதுஉனக்கோ ரறிவுண்டாமிடத்து அந்த மலங் கணீங்கிற வதரத்தாற புண்ணிய பாவங் துலையொப்புவந் துண்டாயப பாசநீங்கினதுதானும் பக்குவமென்றதற்கு பி ம, சிவப்பிரகாசத்தில், "எண்ணரிதா" என்ற விருத்தத்தில் "மலபரிகமபொருந்தியக்கா லருளாலுணணிலவுமொளியதனு லிருள்கறறிப பாதமுறறிடும்." எ-து கண்டுகொள்க. பாண்டியனைகேட்பக் கிளக்குமெய்ஞ்ஞானத்தி னுட்பாலவாக்கரு ளென்பதையறியே எ-கு பாண்டிய ராசாவானவன கேட்கத்தக்கதாகத் திருஞானசமபந்த சுவாமிக ளருளிசசெய்த ஆடபாலவாக்கருள் என்னு முண்மைஞான வுபதேசப பாட்டினுலாயாகிய சிவஞானத்தை யறிந்தேனில்லை நிச்சயமாக வதுவே யறிவென்று அடியார்களாயுள்ளவாகளுக்குத் தேவரீா நாயனென்று கண்டிருக்கிறதொழிய வேறொன்று விகறபித்துக்கேட்க வழக்கில்லையென்கிற முறைமையே யறிவாயுள்ளது என்று விஞவுறறே என்றதுக்கு பி-ம, திருக்கடைக்காப்பு "ஆட்பாலவாக்கருளும் வண்ணமு மாதி மாணபும், கேட்பானபுகிலளவிலலை கிளக்கவேண்டா" கண்டுகொள்க. (உ)

இங்ஙனம் பதிலக்கணங்கேட்ட மாணவகன் பசுவிலக்கணங்கேட்கும வினு மேலருளிச செய்கின்றது.

அறிவறி யாமை யிரண்டு மடியேன்
செறிதலான மெய்கண்ட தேவே - யறிவோ
வறியேனோ யாதென்று கூறுகே ளாய்ந்து
குறிமாறு கொள்ளாமற் கூறு.

வி - ம. அறிவறியாமை யிரண்டு மடியேன் செறிதலால் - ஓரவத்தைதிலே யறிந்து மோரவத்தைதிலே யறியாமலுமாக விந்த விரண்டு பகுதியு மடியேன் கூடிவருகையினால்,—மெய்கண்ட தேவே - மெய்கண்டதேவனே,—அறிவோவறியேனோ யாதென்றுகூறுகேன் - அடியேனை யறிவென்று சொல்லப்பட்டிருக்குமோ அறியாதவனென்று சொல்லப்பட்டிருக்குமோ விவையிரண்டினுள் யாதென்று விண்ணப்பஞ் செய்வேன்,—ஆய்ந்து-இவ் விரண்டு பகுதியுந் திருவுள்ளத்திலேயாராய்ந்து பார்த்தருளி,—குறிமாறு கொள்ளாமற்கூறு - தேவரீரருளிச்செய்கிற வர்த்தத்தினைக் குறிப்புக் கடியேன்மறந்து விண்ணப்பஞ் செய்யாம லருளிச் செய்தருள் (க-து) ஆன்மா சத்துமல்ல அசத்துமல்ல கூடினது தானதன்மையாற் சதசத்தென்னுஞ் சிறப்பினையுடைத்தாம் அதாவது அறிவித்தா லறிகிறவனென்றது உ-ம. சித்தியாரில், "அறிவிக்கப்படுஞ் சித்துமிவன்" எ-ம் சிவஞானபோதத்தில், "அறிவிக்கவன்றி யறியாவுளங்கள்" எ-ம், திருவாசகத்தில் "அறிவிலாமை யன்றேகண்டேதாண்டநாள்" எ-ம், கண்டுகொள்க

பசுவிலக்கணங் கேட்ட மாணவகன் மேற் பாசவிலக்கணங் கேட்கும் வினாவருளிச் செய்கின்றது.

கூறிய மூன்று மலத்தின் குணங்குறி
வேறு விளக்கினை விகற்பங் கற்பங்
குரோத மோகங் கொலையஞ்ஞா மதங்கை
விராயெண் குணனுமா ணவமென விளம்பினை

யஞ்ஞா னம்பொய யயர்வே மோகம்
லிப்சா சூந்திய மாச்ச ரியம்பய
மாயுவேழு குணனு மாயைக் கருளினை
யிருத்தலுங் கிடத்தலு மிருவினை யியற்றலும்
விடுத்தலும் பரிக்கைத மேவலென றெடுத்த
வறுவகைக் குணனுங் கருமத் தருவினை
யாங்கவை தானு நீங்காது நின்று
தனவழிச் செலுத்தித் தானே தானு
மென்வழி யென்பதொன றின்று மன்னா
ஆரும பெயரு முருவுங் கொண்டென
னாருமப் பெயரு முருவுங் கெடுத்த
பெண்ணை சூழ்ந்த வெண்ணெயம் பதியிற்
சைவ சிகாமணி மெய்யா மெய்ய
மும்மலஞ் சடமென மொழிந்தனை யம்ம
மாறுகோள் கூறல போலுந் தேறுஞ்
சடஞ்செய லதனைச் சார்ந்திடு மெனினே
கடம்படு மதனுட் கண்டில மிடம்படு
முன்றிரன் போனற தாயிற தொன்றி
யணைந்தாங் ககறல் வேண்டுங் குணங்களும்
புன்மையின் றொரு மெய்மைவந் தணைதாத
தானே மாட்டா தியானே செய்கில
னீயோ செய்யாய் நின்னல னாயிட்
டியல்பெனிற போகா தென்று மயல்கெடப்
பந்தம் வந்த வாறிங்
கந்தமாதி யில்லாயருளே.

ம்பையிற் பெய்தகத்தடக்கி - நரம்பு எலும்பு மூளை தசை தோல்
இரத்தஞ் சுக்கிலம் என்னப்பட்ட தாதுக்களேழும், கண், மூக்கு,
செவி உபத்தமெனப்பட்ட வற்பத்துவாரங்களேழும், வாய்
அபானமெனப்பட்ட பெரியதுவார மிரண்டுமாகத்துவாரமொ
ன்பதுமாயிருக்கப்பட்ட சரீரத்திலேயிட்டுள்ளே யொடுக்கிவைத்
து—நீக்கி யென்றனைப் போக்கறநிறுத்தி-என்றனைப் போக்கற
நிறுத்தி நீக்கி அடியேனுடைய சரீரத்தைவிட்டுப் போகாமலும் நிறு
த்தி யதனை விட்டுப்போமவதரத்து விடுவிப்பதுஞ்செய்து—இச்
சைமுதலிய வெழுப்பிட்டத்திடும விசைச்சாலவும் வியப்பு- அடி
யேனுக்குண்டாயிருக்கப்பட்ட விச்சாஞானக்கிரியைகளையும் பிரே
ரிப்பித்துக் காரியப்படுத்துகின்ற விதத்தை மிகவுங்கொண்டாட்ட
மாயிருந்தது—அதுநிற்க - இங்ஙனந் தேவரீர்செய்தருளின காரிய
மடியேனாலேயோபுகழப்பட்டிருப்பது அது நிற்கட்டும்—வாக்கு
மனமும் போக்குள்ளதுவுஞ் சொல்லு நினைவுஞ் செய்யுஞ் செயலு
நல்லவுந் தீயவு மெல்லாமறிந்து-அடியேன் வாக்கினாற் சொல்லுகி
றதினாலும் மனத்தினால் நினைக்கிறதினாலுங் காயத்தாற் செய்கிற
தொழிலினாலு முண்டாக்கப்பட்ட நன்மை தீமைகளாயுள்ள புண்
ணியபாவங்களெல்லாந் தேவரீர் திருவுளத்தடைத்தருளி—முறை
பிறழாமற் குறைவு நிறைவின்றாய்க் காலமுந் தேசமு மாலறவகு
த்து நடுவின்றருத்தலி னடுவனாகுதியே - அடியேன் செய்துவந்த
வடைவுகளுந் தவறுவாராம லதற்கேற்கக் குறைச்சலற வத்தப்பு
ண்ணியபாவங்களை யநுபவிக்கத்தக்க காலங்களையுமவையிற்றைப்
புசிக்கைக்கிருப்பிடமான தேசங்களையு மயக்கமறவகுத்து அடி
யேனையு மந்தக்கன்மங்களையுங்கூட்டித் தேவரீர் நடுவனாகநின்று
புசிப்பிக்கையினாலே தேவரீரை நடுவனென்கிறதுமுண்டே—ஆகை
யாலே—சான்றோர்செய்தி மான்றிருப்பினறே - நடுவாயிருக்கப்
பட்ட பெரியோர்க ளியல்புக்கு மயக்க முண்டாகாதே—சால்பா
செயலேமாலாகுவதே-சான்றோரல்லாத வறிவீனரா யுள்ளவர்கள்
செயல்களே மயக்கமுண்டாவது, அப்படியிருக்க—அத்துவாமெ

த்தி யடங்காவினைகளுஞ் சுத்திசெய்தனையே-மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகளென்று சொல்லப்பட்ட வாறுவகையாலும் நிரம்பி மிஞ்சிக்கிடக்கிற கன்மங்களையெல்லாந் தீக்ஷைகளினாலே தேவரீர் சோதனைசெய்த வடியேனுக்குச் சுத்திவருத்தினதுண்டே அதுவுமுண்டென்றருளிச்செய்யில்—ஒத்த கன்மத்திலே நீங்கின வென்னை - அடியேனுக் கிருவினையொப்பிலே போனதென்ன—உலகூழ்வினைகளு மாங்கவையெருந்துவ தாமோ-இவ்விடத்துண்டான ஆழ்வினைகள் தேவரீர் செய்யப்பட்ட தீக்ஷைகளிலே சுத்திசெய்தவிடத்து நத்தக்கன்மங்கள் புசிக்கிறதாமையாம், அதனாலே—கருமமருத்தலாங் கடனதுவினாரும்—தேவரீர் சுத்திசெய்தவர்கள் தனையென்றருளிச்செய்யில் தேவரீர் சுத்திசெய்தவழக்கினாலே மீளவுங் கன்மங்களை நின்று புசிப்பிக்கைக்குக் கடனில்லையாம், அப்படிப் புசிப்பிக்குமென்றருளிச்செய்யில்—தருமபுரத்தலப் பெருமையதன்றே-தேவரீர் தருமத்தாலென்றெழுந்தருளியிருக்கிறது பெருமைக்கதனேயென்று விண்ணப்பஞ்செய்யப்படும்—கண்ணினுண் மணிய-கண்ணுக்கு மணிபோலக் காட்டாகவுள்ளவனே—கருத்தினுட் கருத்த-அறிவுக்கறிவாக வுள்ளவனே—வெண்ணெயமேவந்த - திருவெண்ணெய்நல்லூருக்குக் கத்தாவாக வுள்ளவனே—மெய்கண்டதேவ - மெய்கண்டநாதனே—இடப்படு குரமபையுளிருத்தித் துடைப்பதில்லா வருடோனறிடச் சொல்லே - துக்கத்துக்கேதுவாயுள்ள சரீரத்துக்குள்ளே யடியேனை யிருத்திவைத்து அடியேனுக்குண்டான கன்மங்களைத் துய்ப்பதாகப் போகாதவந்த வனுக்கிரகத்தை யடியேனுக்கு விளங்கவருளிச்செய்தருள் (௧-ஆ) தேவரீராகக் கலந்திருக்கிறதென் னுண்மையானாலே தேவரீருடைய நட்பமானவர்க்குக்கெட்டாதென்று சொல்லவேண்டுவ தில்லையாம், என்னெனில் சிவனு மான்மாவு மெக்காலமு மிடைவிடாம லிருக்கையிலேயு மான்மா மலத்திலே பற்றினபடியினாலே சிவனிடத்திலே கூடியின்றும் பற்றில்லையாகையா லச்சிவன் பெத்தத்திலு மொத்திருப்

பொன்பதாம். உ-ம. போற்றிப்பஃறொடையில். "உன்னுமென்று நீங்காதொளித்திருந்து தோன்றாநின்ற, கள்ளமின்று காட்டுங் மூலபோற்றி" எ-து. கண்டுகொள்க. (ரு-ம.) எழுவகைத்தாதுக் களினாலும் நவத்துவாரங்களினாலு மிந்தச் சரீரத்திலே பொருந் தவைத்து ஜநநமரணமும் படுத்தி யடியேனுக் குண்டாயிருக்கப் பட்ட விச்சாஞானக்கிரியைகளையும் பிரேரிப்பித்து நடப்பித்துங் கொண்டாட்டமாயிருந்ததென்று சொல்லுவானேனென்னிலசிவ னைப்பொருந்தியுஞ் சரீரபெந்தத்திலே வைப்பானேனென்பது கருத்து. அது மலசம்பந்தமாகையாலே மலக்குருடனுக்கு மலநீ ங்கவேண்டி மாயையாகிய கோல் கொடுத்ததென வறிக. பி-ம. போற்றிப் பஃறொடையில். "கட்புலனாகாணாதங் கைக்கொடு த்த கோல்போற், பொறபுடையமாயைப் புணர்ப்பினங்கண்" எ-து. கண்டுகொள்க மனவாக்குக் காயங்களினாலே யார்சிக்க ப்பட்ட புண்ணியபாவங்களைத் தேவரீர் திருவுள்ளத்தடைத்தருளி க்கன்மங்களை நடுவனாக நின்று புசிப்பிக்கையினாலே நடுவனென்று சொல்லப்பட்டிருக்கவும் பெரியோர்களியல்புக்கு மயக்கமு முண் டாகாதே ஆறத்துவாவுஞ் சுத்திபண்ணினதுண்டே. * கன்மசம த்துவத்திலே போனதென்னவெனில், கன்மசமத்துவமவந்தவி டத்துச் சத்திநிபாதமுண்டா யதினாலே கர்த்தா வாசாரியமூர்த்த மாகத் திருமேனிகொண்டுவந்து தீக்ஷாக்கிரமங்களின்லே யத்து வாசுத்திபண்ணி மலத்தைப்போக்கி யிரக்ஷிப்பன். பி-ம். சித்தி யாரில். "அநாதிமுத்தனாயப் பரனாயசலனாயெல்லா வறிவுதொழி லநுக்கிரகமுடையவனாகனம், நுணுகிகமற றொத்தவிட்டதேசத திபாத நழைவித்துமலங்களெல்லா நுங்கோக்கி, மனுகாணங் களெல்லாமடக்கித் தனனை வழிபடுகல்லறிவருளிமாக்கருணைக்கை யா, லினதுபிறப்பினினின்று மெடுத்துமாறு லின்பமுத்திக்கே

---

* கன்மசமத்துவமாவது புண்ணியபாவங்க ளிரண்டிலேயு மூவர்ப்புவந்தது.

வைப்பனெங்கள் முத்தியிதுவே" எ-ம். போற்றிப்பஃறொடை
யில் "காமவினை, யெல்லையிரண்டி னிடையொப்பிற-பல்பிறவி,
யத்தமதிலன்றே வள்வென்றுபார்த்திருந்து, சத்திபதிக்குந் தரம்
போற்றி - முத்திதரு, நன்னெறிஞ்ஞானகலா நாமமலமொன்றி
னையு, மந்நிலையே யுண்ணின் றறுத்தருளிப-பின்னன்பு, மேவாவி
னங்கும பிரளயாகலருக்குத், தேவாய மல்கன்மந் தீர்த்தருளிப்-
பூவலயந், தன்னின்றுங்காச்சகலாக்கவர்போல,முன்னின்றும்
மலந்தீர்த்தாட் கொள்கை." எ-ம். கண்டுகொள்க. இப்படிச்சஞ்
சிதமண்ணி யிருக்குமிடத்தும் பிராரத்தமாகிய வினை புசிக்கவந்த
தானை" சஞ்சிதபண்ணின ஆன்மாக்களே. அதெப்படியெனனில்
சஞ்சித மாசாரியா ஞானதிருஷ்டியினாலு மாகாமியமாசாரியாலை
த்தஞானத்தினாலும பிராரத்தமசரீரத்தோடேயுமநீங்கும் பி-ம்.
சிவப்பிரகாசத்தில், 'நீங்குமாயை சேராவகைவினை திரிவிதத்
தால் நீங்கிட" எ-ம். திருவாதவூரருக்கு அநுக்கிரகம்பண்ணின தி
ல், "விரிந்த சஞ்சிதவினைக ளனைத்தும விழிக்கவெந்தது விருமபு
மிப்பிறப்பிற புரிந்தவல்வினை யுடலுடனகலும புந்திசேரருள் வ
ருவினைபோகக்" எ-ம். திருவருட்பயனில். என்றவினையுடலோ
டேகுமிடை யேறுவினை தோன்றி லருளேசுடும். எ-ம். சித்தியா
ரில். "அருமபருவ மடைதலுமே யாசாறுசித, தோன்றிநுகராதவ
கை முற்செய்கன்மத் துகளறுத்தங கத்துவாதொடக்கறவே சோ
தித், தேன்றவுடற கன்மமநுபவத்தினாலறுத்திங்கினிச்செய்கன்ம
மூலமலஞானத்தாலிடிப்பன். எ-ம சொன்னது கண்டுகொள்க.
ஆகையாலே யாசாரியா கடாக்ஷத்தினாலே மோக்ஷத்தையடைந்
தாலும் பிராரத்தம் புசிக்குமள்வும சரீர நிற்குமென்றது. ஆனால்
ஞானவான்கள புசிக்கிறது பிராரத்தமுமாயவாகள்தேகமும்பிரா
ரத்ததேகமானு லவாகளே யர்ச்சனைபண்ணின திறலேயு நிவேதித்
ததினாலேயு மானமாககள கதியடைவாரகளென்றுசொல்லவேண்
டுவதில்லையெனனில் அவாகள போகஞ் சிவனே யேற்றுக்கொள்
ளுகையினாலே சிவபோகமாச்சுது, மாயாபதார்த்தஞ் சிவபோக

மாமேரு வென்மாயா பதார்த்தஞ் சுத்திபட்டு மந்திரமயமாய்மந்திரமூ ஞானதிருஷ்டியினாலே பார்க்கப்பட்டு ஆன்மாவைச்சிவனுடலாக்கிக்கொண்டு புசிக்கையினாலே சிவபோகமாச்சுது. பி-ம, உண்மைநெறி விளக்கத்தில், "பாதகங்கள்செய்திடினுங்கொலைகளையுகள்ளுப்பயின்றிடினு நெறியல்லா நெறிபயிற்றிடினும், சாதிநெறிதப்பிடினுந் தவறுகள்செய்திடினுந் தங்களென்றேயார் செய்வறுத் தானதுவாயிற்றி, நதனிவனு-லுயிரா யுண்டுறங்கி நடக்கு நானோயோகங்களைபுர தானாகச்செய்து, பேதமற நின்றிவனைத்தானாக்கியிவன பெருஞ்சிவயோகமென்ப பேசுநெறியிதுவே. எ-து. கண்டுகொள்க. அவர்கள்திருமேனிபிராரத்ததேகமல்லவென்றதற்குத்திருஷ்டாந்தம், திருஞானசம்மந்தமூர்த்திகடாக்ஷம்பெற்ற கலியாணத்துக்குவந்த ஞாதாக்கள் திருமேனியடங்கலுஞானத்திலே பொருந்துகையினாலும் அப்பர்சுவாமிகள் திருமேனி சர்வாணமாகக்ளுங்கண்ணை ஞானப்பிழம்பாகிய மகாலிங்கத்திலேயடைதலினாலும் பட்டணத்துப்பிள்ளை ஞானமாகிய லிங்கமாய முளைக்கையினாலேயும் திருவாதவூரர் சர்வாணமாகக்ளுங் காணத் திருவாசகத்துக்கு உண்மைப்பொருளைக்கேட்கப் பொருளிதுவென்று ஞானாகாசத்திலே பொருந்தினபடியினாலேயும் பிராரத்ததேகமாகிய மாயாதேகத்துக்கும் ஞானத்துக்குஞ் சம்பந்தமில்லாதபடியினாலே அவர்கள் திருமேனியுமஞானமென்றேகண்டுகொள்க.

சர்வான்மாக்களுந் தேவரீருக்கடிமையாக விருக்கையிலேயுஞ் சிலர்க்குத் திருவருள்கடாக்ஷித்தும் சிலர்க்குக் கடாக்ஷியாமலுமிருப்பானேனென்றுகேட்கும் வினாமே லருளிச்செய்கிறது.

சொற்றெரும்பு கொள்ளநீ சூழ்ந்ததுவு நிற்செயலகண்
மற்றவர்க ணின்றேசுகின் மாய்ந்தவுயிர்க்-குற்றங்
கொளுத்தியாங் கைய வுயாவெண்ணெய் நல்லூர்க்
குளித்தம்பூக் கொன்றையெங் கோ.

வி-ம் சென்றெழுமபு கொள்ளநீ சூழநதுவும-சர்வானமா
க்களுந தேவரீருககடிமையாக விருககவுஞ சிலா தேவரீாதிருவரு
ளைப பெறததககதான வடிமைததிறஙகள் செயதுவரு முபாயங
கொடுததருளிஞய,—நிறசெயலகண மறறவாகள - மறறுளளபெ
ததானமாக்களையுந தேவரீா சேடடைபபடுததுகையிஞலே செய
றபட்டுவருகிறவாகள இஙஙனமிரணடுவகையிலுளள ஆனமாகக
ளுந தேவரீாலே செயறபட்டு வருமிடததும,—நின ஞேககின
மாயநதவுயிாககுறறஙகு - தேவரீா திருககணசாததிஞலே செயல
றுகைவநத வானமாககளிடததிலே யநுககிரகஞசெயது பிரகாசி
ததுநினறும,—ஒளிததியாஙகு-மற்றுளளபெததரிடததிலே கூடிநி
றகுமிடதது மறைநதுநினறும. இஙஙனம வருகிறமூறைமையை
ஞய - அடியேனுககுச சுவாமியாயுளளவனே,—உயாவெணணெய்
நலலூாக குளிததமதுக கொனறையெஙகோ - சிறபபிஞலுயாந
திருககப்படட திருவெணணெயநலலூரிலே மதுககளிஞல முழு
ககபபடட கொன்றைமாலையைசசாததி யெழுநதருளியிருககபபட்
ட காததாவாயுளளவனே,—சொல - அடியேனவிணணபபஞசெ
யத காரியமிரணடையு மருளிசசெயதருள் (க-து) சிவன கததா
வெனகிறதும ஆனமாகக ளடிமையெனகிறதும பொது இனிச
சிறபபாவது கததாவை யாணடவனெனறறிநது இரணடறறவண
பிஞலே வழிபடுகினற ஞானவானகளுககுத தயிரினெய்போற
ஞேனறியிருபபன ஆணடவனடிமையெனறறியாத பெததான
மாககளிடததிலே பாலினெயபோலத தோனமூதுநிறபன. உ-ம்.
சிவஞானபோததநில "தனனுணரு நேசததாதமபானிகழுநதி
நெயபோற பாசததாாக கினறுமபதி" எ-ம. திருவாசகததில்,
"அரசேபொன்னமபலநதாடும" எனனும செயயுளில் "பிறை
சோ பாலினெய்போலப பேசாதிருநதா லேசாரோ" எ-ம. தே
வாரம. 'விரகிறறீயினன பாலிறபடுநெயபோல, மறைய நினறு
ளன மாமணிச சோதியான, எ-ம, வருமேதுககளைக கணடுகொளக.

# இருபாவிருபஃது.

இங்ஙன முயிர்க்குயிராய் நின்று காரியப்படுத்துகிற சிவன் பெத்தத்தில் மறைந்துநின்று காரியப்படுத்துகிற முறைமையுமு த்தியிற் பிரகாசித்துத்தான் மேலிட்டுநின் றுபகரிக்குமுறைமையு மேலருளிச்செய்கின்றது

கோலங்கொண்ட வாறுணர்ந்தே
ஞாலங்காவ லனியானெனக்கொளீஇப்
பொய்யைமெய்யெனப் புகன்றுவையத்
தோட்டப்பட்டகை நாடிநாட
வென்னுட்கரந்தென் பின்வந்தருளி
யென்னையுந் தன்னையு மறிவின்றியற்று
மென்னறியாமை யுமகன்றையுங்கண்
டியாவரியாவையு மியாங்களுஞ்சென்று
புக்குழிப்புக்குப் பெயர்த்துழிப்பெயர்ந்து
மிக்கபோகம் விதியால்விளைத்திட்
டெற்பணியாள ரெனைப்பிரியாதே
யோடிமீள்கென வாட்படுத்திட்
டெண்வழிநின்றன னெந்தையன்றே
வருண்மிகவுடைமையி னருட்டுறைவந்து
பொருண்மிகவருடலும் பொய்ப்பகையாதலுங்
கைக்கண்டுகொள்ளெனக் கடலுலகறிய
மெய்கண்டதேவனென் பெயர்விரீஇத்
தன்னுட்கரந்து தான்முன்னாகித்
தன்னுந்தானுமா யென்னையின்றாக்கித்
தன்னையுமென்னையுந் தந்துதனது
செய்யாமையுமென் றுசெயலின்மையு

மேல்முதநி. அருண்மிகவுடைமையின - தனககுககிருபைபமிகுத திருகண்கயினலே —அருட்டுறைவநது - திருவெணணெயநலலூ ராகிய திருபபடைவீட்டிலே திருவவதாரஞ செயதருளி,—பொ ருணமிகவருடலும் சிவாநுபவமாகிய பொருளானது மிகுதியாக நினறு அநுககிரகிககிறதையும,—பொயப்பகை யாதலும - அநத ப்பொருள் பிரபஞசமாகிய பொயயைககடிநது நீககிறவழககை யுங,—கைககணடுகொளளென பிரததியக்ஷமாகக்கணடுகொளளெ னக காட்டியருளி,—கடலுலகறிய மெயகணடதேவனெனப பெ யாவிரீஇ - சமுததிரஞசூழநத வையகததா ரறியநதககதாக மெ யகணடநாதனெனகிற திருநாமததினையும பரபபியருளி,—தன னுடகாரநது தானமுனனுகி - தனனுடைய பேரறிவினுளளேயெ னனுடைய சிறறறிவை யடககிககொணடுதனசெயலேமேலீடாக —தனனதுநதானுமா யெனனையினருககி தனனுடையவருளுநதா னுமா யெனனையு மெனனுடைய ஞானததோறறததையு மடககி தனனையு மெனனையுநதநது தாளுருமுதலுணடெனகிறதுங கெ டாமல் யாளுருமுதலுணடெனகிறதுங கெடாமலெனககுபபுல ப்படவறிவிததது,—தனது செயயாமையுமெனது செயலினமையும தான சாவமுங காரியபபடுததி நிறகுமிடததுந தாளுனறிலுஞசு ட்டியறியாம்ற ரேயவறநிறகிற முறைமையினையு நானசாவமுஞ செயது நிறகுமிடதது மெனனுலொனறு முடியாதென்கிற செய லறுதியையும,—எமமான காட்டியெயதல-எமமுடைய சுவாமியா யிருககிறவ னெனககுத் தரிசனபபடடுநினற முறைமையைபபா ர்ததவிடதது,—அமமா வெனககேயதிசயந தருமே-மிகவுங கொ ணடாடபபட்டு எனககுததானே யாசசரியததைதயுந தராநிற்கும.()

இங்ஙனம் பாசக்ஷபமபண்ணின வாச்சரியததை மேலருளிச செய்கினறது.

தருமா தருமத் தலைநின் றுழ்வேனைக்
கருமாகடல்விடமுண் கண்டப-பெருமான

திருவெண்ணெய்நல்லூர்ச் சுவேதவனத்தா
னுருவெள்ளவந்தெடுத்தா னுற்று

வி - ம். தருமாதருமத் தலைநின்றுழல்வேனை - தன்மமாகிய புண்ணியத்தையு மதன்மமாகிய பாவத்தையுஞ்செய்து துக்கசாகரத்திலே கிடந்தழுந்துகிற வென்னை,—கருமாகடல விடமுண்கண்டப்பெருமான் - கருமைபொருந்தின மகத்தானசமுத்திரத்திலே யுண்டாக்கப்பட்ட நஞ்சினை யமுதுசெய்தடக்கப்பட்ட கண்டத்தினையுடைய கர்த்தாவாயுள்ளவனே, திருவெண்ணெய்நல்லூர்ச் சுவேதவனத்தான் - திருவெண்ணெய்நல்லூராகிய திருப்பதிவீட்டிலே யெழுந்தருளியிருக்கப்பட்ட சுவேதவனப் பெருமாளென்னும் பிள்ளைத்திருநாமத்தையுடையவன், உருவெள்ள வந்தெடுத்தானுற்று - சரீரத்தொடர்ந்தனைப்பட்டு நிறகிற வெள்ளம்போலே யுருப்பட்டுவந்து நான சநககுழியிலழுந்தாமலெடுத்துத்தனது திருவடியிலே கூட்டிக்கொண்டருளினான். (௧௯)

கர்த்தா வியங்க மாசாரியமூர்த்தியாக திருமேனிகொண்டெழுந்தருளிப் பாசசேதனம்பண்ணி தனது காருண்ணியமாகியவுண்மைஞானத்தைக் கடாக்ஷித்த முறைமையை வியந்துவாயாகப் புகழ்ந்தமுறைமை மேலருளிச்செய்கின்றது.

உற்றவாபெற்றவ ரற்றவாமுற்று
மற்றவாகக்கற்றவ னல்லவாகக்கல்லவ
னந்தமாதி யில்லவனவந்து
குரக்குமனத்துக் கொடியேனபாக்கும்
பாபபைக்குவித்து நிறுத்திப்பிடித்திட்
டிருளவெளியாகு மருளினையறுத்து
வந்துபுகுதலுஞ் சென்றுநீங்கலு
மின்றியொன்றாய் நின்றவந்நிலையி
லொன்றுகாமு மிரண்டாகாம

லொன்றுமிரண்டு மின்றாகாமற்
றனைத்துப் பெருமை தாசகாஞுயினு
மென்னதுப் பெருமை யெல்லாமெய்தித்
தன்னையெனக்குத் தருவதையறியு
மென்னையுமெனக்கே தந்துதன்னது
போந்தப் பெருங்கடலதனு
ளாராவின்ப மளித்தருந்ரா
வுள்ளுப்புறம்பு மொழிவின்றிநின்ற
வள்ளன்மைகாட்டி மலரடியருளிய
மன்னனெங்கோன் வாய்புனற்பெண்ணை
வெண்ணெய்க்காவலன் மெய்கண்டதேவ
னண்ணலருளா லயத்தனணிய
மலமுத லாயினமாயக்கு
மூலசுவுபிக்கெல்லா மொருகண்ணே

வி-ம. உற்றவர்பெற்றவ ரற்றவர்முற்று மற்றவர்க்குற்றவன்- தன்றுறவின் முறையார் யுள்ளவர்கள் மாதாபிதாக்கள் தனக்கு வேற்றுமையற்றிருக்கப்பட்ட ஸ்ரீ மற்றமுண்டான தன்றான்னிய க்ஷேத்திரங்கள முதலாயுள்ள சர்வவுபாதியாயிருக்கப்பட்டதேகப் பிரபஞ்சத்தை நீங்கினவர்களுக்கு கிடைற்றுப் பிரிவற்றிறக்கப் பட்டவன, அல்லவாக்கல்லவன - அப்படிச் சர்வவுபாதிகளையுமநீங் காதவர்களுக்கு வேறாயிறக்கப்பட்டவன, அந்தமாதியில்லவன்- தனக்குமுடிவுமுதலுமில்லாதவன்; வந்து ஆசாரியமூர்த்தமாகத்தி ருமேனிகொண்டெழுந்தருளிவந்து - குரக்குமனத்துக்க கொடியே னபாக்கும பரப்பைக்குவித்து - குரக்குப்போதமபோல வொன றிலுநரிப்பிலலாமலெழுந்தது புத்தியாகத்திரிகிற பாவியாயிருக் கிறவென்னைப் பிரபஞ்சப்பரப்பில திரிகிறவியாத்தியை யொடுக் குவித்து, திறத்திப்பிழ தந்திட் டிருள்வெளி யாகுமருளினையறுத்து

துன்று திருவடி ஞானத்திலேயிறத்திப பழைய பிரபஞ்சவாதனையி லேபோகாமற பிடித்துக்கொண்டு கேவலசகலமெனகிற மயக்கத் தையுநீக்கி, வந்து புகுந்தவுளமெனறு நீங்கலுமின்றிதானவந்தென் னுள்ளத்திற புகுந்திறதும நானசெனறு தன்னோடேகூடி யென கருணடானபாசங்களை நீக்குகிறதுமிலலாமல ஒன்றுய நினறவசநி லையில - அநாதியேதானு நானுநீங்காமல நினறநிலையிலே, ஒன்று காம லிரணடாகாமல - தானுநானு மொனறுபடுவதுஞ்செயயாம லிரணடுபடுவதுஞ் செயயாமல, * ஒனறுமிரணடு மினறுகாமல் தானுமயானும ஒனறுபட்டு நிறகிறதும வேறவானுமபேறுமாயிர ணடுபட்டு நிறகிறது மிலலையாகாமல தனனதுபெருமை தாககா ருயினுமெனனது பெருமை யெலலாமெய்தி - தனககுணடான சாவஞ்ஞமும பஞ்சகிருத்தியமுமெனககுணடாகக்குறைவிலலையாயி னுமெனககுணடாயிருககபபட்ட விச்சா ஞானக்கிரியைகளையுமவி யாததிவியாபகங்களாகிய பெருமையு மிவைகளெலலாந தனனு டைய பூரணத்திலே யடக்கிககொணடு, தனனையெனககுத்தருவ தையனறியு மெனனையு மெனக்கேதந்து - தனனுடைய வானந்த சொருபத்தை யெனககுக கடாக்ஷித்ததுமனறியேயநதபேரின பத்தோடுங்கூடி யநுபவிந்திருக்கிற வானமபோதமாகியசிறறறிவு கெடாமற கெடுகிறகிற முறையையுமெனககுககடாக்ஷித்தருளி —தனனதுபேரானநதப பெருங்கடலதனு ளாராவினபமளித்து தன்னுடையபரிபூரணமாகிய வானநதவெள்ளமான பெரிய வருட் சமுத்திரத்திலே விளையப்பட்டிருப்பதாய வொருகாலத்திலுமுவ ட்டாத வினபத்தை யெனககுக கடாக்ஷித்தருளி,—நீராவுளளும் புறமபுமொழி வினறிநினற வள்ளனமைகாட்டி ஒருகாலத்திலும் விடபபடாம லகமபுறமெங்கும பூரணமாயநின றனவரதமு மறி

* ஒன்றுகாமலிரணடாகாம லொனறுமிரணடுமினறுகாமல் என்பதறகு, பேதமுமபேதமும பேதாபேதமுமாகாமல என்று பொருளுரைப்பினுமாம.

விதந்துகிறகிற வளப்பாட்டையுந் தரிசிப்பித்து,— மலரடியருளிய மன்னன்-தாமரைமலர்போன்ற ஸ்ரீபாதத்தைக் கடாக்ஷித்தருளின தம்பிரானே,—எங்கோன்-எமக்குக் கர்த்தாவா யுள்ளவன்,—வார் புனற்பெண்ணை வெண்ணெய்க்காவலன் - மென்மேலும் வருகி றபுனலினாலே பெருக்கப்பட்ட பெண்ணையாற்றையுடைய திரு வெண்ணெய்நல்லூருக்குக் கர்த்தாவா யிருக்கப்பட்டவன்,—மெய் கண்டதேவன்-மெய்கண்டதேவனென்கிற திருநாமத்தினை யுடை யவன்,—அண்ணல் - எனக்குச் சுவாமியா யிருக்கிறவன்,—அரு ளால்யாத்தன் - தன்றருளே கோயிலாக வெழுந்தருளி யிருக்கப்ப ட்டவன்—நண்ணிய - என்னைவந்து பொருந்திய,—மலமுதலா மினமாய்க்கு மூலகவுயிர்க்கெல்லா மொருகண்ணே-ஆணவமலமு தலாயுள்ள மலங்களையெல்லாஞ் சேதனம்பண்ணினவன் சர்வ லோகங்களிலுமுள்ள வான்மாக்களுக்கெல்லா மோரறிவாகநின் றநுக்கிரகஞ்செய் தருளுகிறவன் (று-ம.) அற்றவாக்கற்றவன்-எ-கு தேகாதிபிரபஞ்சங்களை நீக்கப்பட்ட தபோதனாக்குக் கர்த்தாவிரு ண்டற்று நிற்பனென்று பொருள்கூறியதற்கு. பி-ம தேவாரம 'உலகினிலியற்கையையொழித்திட்டற்றவர்கத்துச்சிவனுறைகி ன்றவாலவாயாவதுமிதுவே.'' எ-ம் தேகாதியென்றது உடம்பு முதலானவற்றைநீங்கவே தவமாமென்பது கருத்தாகையாலென வறிக இதற்கு பி-ம. திருவாசகம. "பாவியேற்குமுண்டாங்கொல் பரமானந்தப்பழங்கடல்சேர், தாவியாக்கையானெனதெனயாந்து மின்றியுறுதலே.'' எ-ம திருவள்ளுவப்பயன். மற்றுந்தொடர்ப் பாடெவன்கொல் பிறப்பறுக்க லுற்றார்க்குடம்புமிகை, எ-ம. கண் டுகொள்க, அந்தமாதியில்லவன். எ-கு முடிவுமுதலுமில்லாதவ னென்று பொருள்கூறியதேதெனில் சிவனேற்றமு மிறுமில் லாதவனாகையாலே யப்படிச்சொன்னதென வறிக. இதற்கு. பி-ம திருவெம்பாவையில் "ஆதியுமந்தமுமில்லா வரும்பெருஞ்சோதி யை.'' என்பதுகண்டுகொள்க. இனிவந்து எ-கு. ஆசாரிய விக் கிரகமாக வெழுந்தருளியென்று பொருள்கூறியதற்கு பி-ம திரு

வெம்பாவையில் ''இங்குநம்மில்லந்தோறு மெழுந்தருளிச் செங்
கமலப்பொற்பாதந்தந்தருளுஞ் சேவகனை,, எ-து கண்டுகொள்க
குரக்குமனத்துக்கொடியேன பரக்குமபரப்பைக் குவித்து எ-கு
பிரபஞ்சவியாத்தியையொடுக்குவித்து என்று பொருள் கூறியத
றகு. பி-ம. சிவஞானபோதத்தில் ''சிறைவிட, டலகடலிற்சென
றடங்குமாறுபோனமீளா, துலைவிலரனபாதத்தையுற்று எ-து.
கண்டுகொள்க, இருள்வெளியாகு மருளினையறுத்து எ-கு. கேவ
லசகல மிரண்டினையுநீங்கியென்றுபொருள்கூறியதேதெனனில்
கேவலத்திலாணவத்தால் மறைப்புண்டுகிடக்கையா லிருளென்ற
தெனவறிக சகலத்திற்கலையாதி தத்துவங்களோடுங்கூடி ஜீவிக்
கையா லொளியென்றதெனவறிக இதற்கு பி-ம. சிவப்பிரகா
சத்தில்''புகலுமல மொழித்தற்கு என்னுஞ்செய்யுளில இகலிரு
ளினையுணரி லிருள்வெளியாந் தன்மையெய்தும எ-து. கண்டு
கொள்க. இனிவந்து புகுதலுஞ்சென்று நீங்கலுமின்றி யொன்று
யநின்ற வந்திலையில. எ கு சிவனான்மாவை வந்து கூடவுமில்லை.
ஆன்மாசென்று சிவனைக் கூடவுமில்லையென்று பொருள்கூறியத
ற்கு பி-ம போற்றிப்பஃறொடையில உள்ளமெனறுநீங்காதொ
ளித்திருந்து தோன்றிநின்ற,கள்ளமின்றுகாட்டுங் கழல்போற்றி,
எ து கண்டுகொள்க. ஒன்றாகாம லிரண்டாகாம லொன்று மிர
ண்டுமின்றாகாமல் எ-கு. ஆன்மாவுஞ் சிவனுமிரண்டுமுதலா யிரு
க்குமிடத்து ஒன்றுபட்டு நில்லாதென்று மிரண்டுபட்டுநில்லாதெ
ன்று மொன்றுமிரண்டுமில்லாம லிராதென்றும பொருள்கூறியத
றகு. பி-ம சிவப்பிரகாசத்தில் உடலுயிர்கண்ணருக்கனறிவொ
ளிபோற்பிறிவருமத்துவிதமாகும் எ ம திருக்காளத்தியந்தாதியில்
உரையும்பொருளுமுயிருமுடலும் விரையுமலருமபோலவிம்மிச-
சைவின்றிச் சென்றவாறெங்ஙன் திருக்கயிலையெம்பெருமா,
னின்றவாறெங்ஙனேநிறைந்து,, உ-ம. கண்டுகொள்க. இனித்தன்ன
துபெருமைத தாக்காணுயினும், எ-கு. தனக்குண்டாகிய சாவஞ்

ஞதது வமும் பஞ்சகிருத்தியமு மெனக்குண்டாக்கிறு ரில்லையாயி
னுமென்று பொருள்கூறியதேதென்னில ஆனமா முததியைபபெ
ற்றவிடததுஞ் சிவனுக்குணடான தனமை யுணடாகாதெனபது
கருத்து இதறகு பி-ம. சிவப்பிரகாசததில இனறுநோககுஞற
நடககுமியல்பிலோாககினையவாய்நது, நினறதோரலகைகோநதா
ணிகழவதெனதுபோலுளளத தொனறியவுணாவு தமபாலுள்ளது
நிகழததுமீசன, றனெரு ழினடத்துமேனிதனக கெனககொணடு
தானே எ-ம சிததியாரில''உயிாதானுஞ்சிவானுபவமொனறினுக
குமுரிததே. எ-ம, சஙகறபநிராகரணததில''நாழிகொளளபதாழி
யினைல புனலதனுறசுருத்து முதலுளதாகவேணடும, எ-ம, கணடு
கொள்க, எனனதுபெருமையெல்லாமெயதி எ-கு ஆனமாவுககு
ள்ள விசசாஞானககிரியைகளையும வியாததிவியாபகஙகளையுஞசிவ
னுள்ளே யடககிகொள்ளுவனென்று பொருள்கூறியதறகு பி-ம்,
சிததியாரில ''விருமபிபபொன்னினைககுளிகையொளிபபதுபோ
லடககி எ-து, கணடுகொளக. இனிதனனையெனகருததருவதை
யனறியும எ-கு. பி-ம சிததியாரில ' இநதனததினெரிபாலிரெய்
னனுஞ்செயயுளிலே,''தானுகிநதனனுருவபபாபபையெலலாங
கொடுபுகுந்துபதிபபனிவனபாலே'' எ-ம திருவாசகததில,''தந்த
துன றனனைககொணட தெனறனனைசசஙகரா வாாகோலேசது
ர்தத ரநதமொனறிலலா வாநநதமபெறறேன யாதுநீபெறறதொ
னறென்பால், எ-ம், கணடுகொளக எனனையு மெனக்குத தருது.
எ-கு, அநதச சிவானுபவததை யநுபவிககினறசிறறறிவுஙகெடா
மலென்றுபொருட் கூறியதேதெனனில சிறறறிவுகெட்டாலநுப
விப்பாரில்லாதாகையா லபபடிசசொனனதெனவறிக முததியி
லான்மா நினறனுபவிககுமெனபதறகு பி-ம், உணமை விளககத்
தில் முததிதனில்மூனறுமுதலுமொழியக கேள், எனற பாடடும்,
சிததியாரில் உயிாதானுஞ சிவானுபவ மொனறினுககு முரித்தே,
எ-ம் சொனனதிப் பொருள் பற்றியெனவறிக, தனனது பேரா
னநதப பெருஙகடலதனுளாராவினபமளித்து, எ-கு, அருட்சமு

தத்திரத்திலே விளையப்பட்ட விம்பத்தையெனக்குக்கடாக்ஷித்ததெ
ன்று பொருள்கூறியதற்கு வி-ம. சித்தியாரில் சித்தாந்தத்தே சிவ
ன்றன திருக்கடைக்கண் சேர்த்திச்சநமொன்றிலே சீவன்முத்
தராக வைத்தாண்டமலங்கழுவி ஞானவாரிமடுத்தானந்தம்பொழி
ந்து எ-து. கண்டுகொள்க நீராவுள்ளும் புறம்பு மொழிவின்றி
நின்ற வள்ளன்மைகாட்டி, எ-கு. ஒருகாலத்திலும் விடப்படா
மல் சிவனுள்ளும் புறம்புமாய்நிறைந்து நிற்பனென்றுபொருள்கூ
றியதற்கு. பி - ம. திருவாசகத்தில உம்பர்கட்கரசேயொழிவற
நிறைந்தயோகமே, எ-து. கண்டுகொள்க மலரடியருளிய மன்
னனெங்கோன. எ - கு. தாமரைமலர்போன்ற ஸ்ரீபாதத்தைக்
கடாக்ஷித்தருளினவனென்று பொருள்கூறியதற்கு பி-ம. திருவெ
ம்பாவையில. செங்கமலப்பொற்பாதந் தந்தருளுஞ் சேவகனே.
எ-து. கண்டுகொள்க, அருளாலயத்தன எ - கு. அருள்கோயிலாக
வெழுந்தருளியிருக்கப்பட்டவனென்று பொருள்கூறியதேதென்
னில சிவன தன்தருளாகிய சத்தியுடம்பாக வெழுந்தருளியிருக்
கையாலெனவறிக. இதற்கு. பி-ம. சிவப்பிரகாசத்தில நீடுபராசத்
திநிகழ்ச்சாஞானநிறைகிரியைத் தாவதனைநிமலனமேவி நாட்டிய
கருணைத்திருவுருவமாகி எ - ம. சித்தியாரில, காயமோமாயையன்
றுகாண்பதுசத்திதன்னால், எ-ம. திருவாசகத்தில உடையாண்டவு
நீயிருந்தி எ-ம. வருமேதுக்களைக் கண்டுகொள்க. இனிமல்முதலா
யினமாயக்கும் எ-கு. ஆணவமலமுதலாயினவெல்லாவற்றையுஞ்
சேதனம்பண்ணினவனென்று பொருள்கூறியதற்கு, பி ம. போற்
றிப்பஃறொடையில. முன்னின்று மும்மலந்தீர்த்தாட்கொள்கை.
எ-ம. தத்துவவிளக்கத்தில் க்கிருகாழி மன்கட்டிடுமெபாசங்கண்
மூன்றவைதாம, புதிதருமாணவம்போகஞ்செய்தகன்மமுமாயை
யுமா, முதியதுதானென்று முன்பினிலவந்தது சேதனனக, னறி
கமறைப்பனவாயிரகோடிவிருத்திகளே, எ - ம. கண்டுகொள்க.
உலகவுயிர்க்கெல்லாமொருகண்ணே எ - கு. சாவான்மாக்களுக்
ம ஓரறிவாகிநின் றறிவிக்கிறவனென்ற தேதெனனில் ஆதித்த

ஞெனறுயிருந்தும பலகணகளுககுங காட்டாநினறதுபோ லெ
னவறிக. இதறகு பி-ம, சித்தியாரில கணகட்கிருளினையொளியா
லோட்டுமிரவியையபோல்வீசன் எ-து. கணடுகொளக

'இஙஙனம வியாககியைசசெயயபபட்ட விநத இருபாவிரு
பஃதுஎனனும நூலுககுச் செயயுட்கடோறு மாசாரியரைசசீஷன
கேட்டும விறைவுககுவிடையமாக வாசாரிய ரருளிசசெயயபபட்ட
சோறகளையெலலா மீளவுஞ சீஷன மறுததமொழியாகவருகையா
லாசாரிய ரருளிசசெயததெலலாங கீழபபட்டுச சீஷனசொலலே
மேறபட்டு வருமதைப பொருளெனககொளவாருமுளா அதுசித
தாநதபபொருளுககு விரோதமெனவறிக அபபடியாகில வேறு
பொருள கொளளுமிடதது மறறுமுணடான நூலகளையோதியறி
நது குருமுகாநதரமாகக கேட்டறிநது சமபிரதாயமவநத சிததா
நதிகளுககொழிய தறபோதஙகொணடறிவாக கறியபபடாதெ
னவறிக அபபடியாசாரியா சததியமுஞ சீஷனசொல லசததிய
மெனனுங கருததைபபறறி யிநநூலுககு வியாககியை யெழுதின
தேதெனனில கணணகனஞாலதது எனனுமுதலகவலிலே சீறிய
ருளல சிறுமையுடைததாலெனறு சீஷன கூறியதறகுததரமாக
வாசாரியா அபககுவ பககுவககுறிபபாாததருளினங குருமுதலாய
எ-கு. பொருள நாமசொனனவததஙகளை மாறுபாடாதக கொள
ளுகையாலே நாஙகோபிததுககொணடோமென ருசாரியா திரு
வுளம்பறறுகையாலே யாசாரியா திருவுளமபறறினதே சததியம்.
அந்தவாசாரியா வாககியததுககுச சாததிரசமமதி யெழுதினதினு
லும ஆசாரியா திருவுளமபறறினது சததியமெனகிறதைக் குருமு
காநதரமாகக கேட்டு அநுபவததாற கணடுகொளக.

திருசசிற்றமபலம.

இருபாவிருபஃது மூலமும் உரையும்

முற்றிற்று.



உ

சிவமயம

திருச்சிற்றம்பலம்.

# திருவதிகை மனவாசகங்கடந்தார்

அருளிச்செய்த

# உண்மைவிளக்கமூலமும்,

உரையும



இஃது,

காஞ்சிபுரம்

மகாவித்வான

## கந்தசாமிமுதலியார்

மாணாக்கர்

## கா - சுந்தரமூர்த்திமுதலியார்

அவர்கள் பார்வையிட்டு,

கனனிகைபபோ

## முருகேச முதலியாரால்

சென்னை

ஜீவகாருண்யவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.



1898௵

உ

சிவமயம்.

# தனியன்.

மன்னதிகை வாழு மனவா சகங்கடந்தான்
மின்னனைய வாழவிலுறு மெய்கண்டான்-பன்மறைகள்
வண்மைதரு மாகமநூல் வைத்த பொருள்வழுவா
யுண்மைவிளக் கஞ்செயதா னுற்று

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உண்மைவிளக்கம்.

வெண்பா.

வண்மைதரு மாகமநூல் வைத்த பொருள்வழுவா
வுண்மை விளக்க முறைசெய்ய-திண்மதஞ்சேர்
அந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற் றைங்கரனைப்
பந்தமறப் புந்தியுள் வைப்பாம்.

இ-ள், வண்மைதருமாகமநூல் - வளப்பத்தைத்தாநின்ற ஆகமநூலிலே,—வைத்தபொருளவழுவாவுண்மைவிளக்கமுறை செய்ய-பரமேஸ்வர னருளிச்செய்துவைத்த பதியி னுண்மையும பசுவினுண்மையும பாசத்தினுண்மையும் வழுவாமலிந்தநூலிலே விளங்கச்செய்வது பொருட்டாக,—திண்மதஞ்சேர் - திண்ணிய மூன்றுமதமும பொருந்தப்பட்ட,—அந்திநிறத்து - செக்கர்வான மபோன்ற சிவந்த திருமேனியினையும,—தந்திமுகத்து - யானை முகத்தினையும,—தொந்திவயிற்று - பண்டியுண்டான திருவுந்தி யினையும,—ஐங்கரனை - ஐந்து ஸ்ரீ அத்தத்தினையுமுடைய விக்கி னேஸ்வரப் பிள்ளையாரை,—பந்தமற பாசபந்தங்களெல்லாநீங்க, புந்தியுள் வைப்பாம-அடியேனுடையமனதிலே தியானம்பண்ணு கின்றேன்.

பொய்காட்டிப் பொய்யகற்றிப் போதாநந் தப்பொருளாய்
மெய்காட்டுமெய்கண்டாய் விண்ணப்பம்-பொய்காட்டா

மெய்யா திருவெண்ணெய் வித்தகா சுத்தவினை
யையாநீ தானகேட் டருள.

இ ள். பொய்காட்டி தேகாதி பிரபஞ்சத்தைப்பொய்யெனக்காட்டி, பொய்யகற்றி-பொய்யைநீக்கி, போதாநந்தப்பொருளா மெய்காட்டு மெய்கண்டாய விண்ணப்பம அறிவிலே யாநந்தசொரூபமாயிருக்கிற வுண்மையைக காட்டுகிற மெய்கண்டநாதனே யொருவிண்ணப்பம, பொய்காட்டாமெய்யா-பொய்யைககாட்டாத மெய்சசத்தியத்தை யுடையவனே, திருவெண்ணெயவித்தகா-திருவெண்ணெய்நல்லூரிலே எழுந்தருளியிருககப்பட்ட ஞானாசாரியனே, சுத்தவினை யையாநீதானகேட்டருள-சுத்தமாகிய வினாவினைச் சுவாமீ தேவரீர திருசசெவிசாற்றியருளவேணடும. (உ)

ஆறாறு தத்துவமே தாணவமே தனறேதான
மாறா வினையேது மற்றிவற்றின-வேறாக
நானேது நீயேது நாதனட மஞ்செழுத்துத்
தானேது தேசிகனே சாற்று

இ-ள். ஆறாறுதத்துவமேது-முப்பத்தாறுதத்துவங்களாவதேது ஆணவமேது - ஆணவமலமாவதேது ; அன்றேதானமாறாவினையேது-அநாதியிலேவிட்டு நீங்காமலிருக்கிற வினையாவதேது, மற்றிவற்றின வேறாகநானேது - இந்த மலங்களுக்கு வேறாகமுமொன்றுபட்டிருக்கிற வென்னுடைய சொரூபமாவதேது, நீயேது-தேவரீருடைய சொரூபமாவதேது, நாதனடம-பரமேஸ்வரனுடைய திருநடமாவதேது, அஞ்செழுத்துத தானேது-பஞ்சாக்கரத்தி னுண்மையாவதேது, தேசிகனே சாற்று-சுவாமீ திருவுளம பற்றியருளவேண்டும. (௩)

உள்ளபடி யித்தை யுரைக்கக்கே ளொன்றனக்கு
வள்ளலரு ளாலன்று வாயமலர்ந்து-தெள்ளியசீ

ராகமங்கள் சொன்னவகையிலே யாநந்த
யோக நிகழ்புதல்வா வுற்று.

இ-ள் உள்ளபடியிதனை யுணரக்கேளென்றனக்கு-உண்டான படியே நீ கேட்டவினவைச் சொல்லுகிறோங்கேள், வள்ளலருளாலன்று வாய்மலர்ந்து-பரமேஸ்வரன் றனது காருண்ணியத்தினாலே யநாதியிலே திருவாய்மலர்ந்து, தெளிவியசீராகமங்கள் சொன்னவகையிலே தெளிவாயிருக்கிற வாகமங்கள் சொன்னமுறைமையிலே ஆநந்தயோகநிகழ் புதல்வாவுற்று-ஆநந்தயோகத்திலே யடங்கிநிற்கிற பிள்ளாயுற்றுப்பொருளறிகேள். (௪)

நாற்கோணம் பூமிபுனல் நண்ணு மதி யின்பாதி
யேற்குமனல் முக்கோண மெப்போது-மாக்கு
மறுகோணங் காலவட்ட மாகாய மான்மா
வுறுகாய மாமிவற்றா லுற்று.

இ-ள் நாற்கோணம்பூமி - பிருதிவி நாலுகோணமா யிருக்கும், புனல்நண்ணுமதியின்பாதி-அப்புவானது அர்த்தசந்திரனைப்போன்றதாயிருக்கும், ஏற்குமனல்முக்கோணம்-பொருந்தப்பட்டதேயுவானது மூன்று கோணமாயிருக்கும், எப்போது மாக்குமறுகோணங்கால - பொருந்தப்பட்டவாயுவானது எந்தக்காலமும் மறுகோணமாயிருக்கும் வட்டமாகாயம்-ஆகாயமானது வட்டமாயிருக்கும், ஆன்மா வுறுகாயமா மிவற்றாலுற்று - ஆன்மாவுக்குப் பஞ்சபூதமு பரிணாமமாயிருக்கிறதேகமாய்வந்துபொருந்தும். (௫)

பொன்பார் புனல்வெண்மை பொங்கு மனல்சிவப்பு
வன்கால் கருமைவளி வான்றூம-மென்பார்
எழுத்து லவரயவப் பாராதிக் கென்று
மழுத்தமதாய நிற்கு மது.

இ-ள. பொன்பார் பிருதிவியானது பொன்னிறமாயிருக்கும்; புனல்வெண்மை - அப்புவானது வெள்ளைநிறமாயிருக்கும, பொஙகுமனலசிவப்பு மிகுநது வாராநினற தேயுவானது சிவந்தநிறமாயிருக்கும, வனகால கருமை-வலியததைத தாராநினற வாயுவானது கருமைநிறமாயிருக்கும, வானாமமம - மிகுநதவாகாசமானதுபுகைநிறமாயிருக்கும, எனபார - எனறிப்படிப பெரியோரகளசொலலுவாரகள, எழுததுல வரயவப பாராதிககெனறும-பிருதிவிககு லகாரமும அபபுவுககு வகாரமும தேயுவுககு ரகாரமும வாயுவுககு யகாரமும ஆகாயததுக்கு அகாரமும, அமுரதமதாய நிற்குமது இபபடிப பலமாயப பொருநதிநிறகும. (௬)

குறிகுளிசங் கோகனகங கொளசுவததி குனறு
வறுபுளளி யாரமுத விநதுப-பிறிவினறி
மணபுணறீக காலவான மனனு மடைவேயென
றெண்புதல்வா வாகமமோ தும

இ-ள. குறிகுளிசங கோகனகங கொளசுவததி குனறுவறு புள்ளியாரமுத விநதுப் பிறிவினறி மணபுணறீக காலவானம-பிருதிவிககு வசசிரமும அபபுவிககுத தாமரைபபூவும தேயுவிககுச சுவததிகமும வாயுவுககு அறுபுள்ளியும ஆகாயததுககு வமுதவிநதுவும விடடுநீஙகாமல, மனனுமடைவேயென றெணபுதல வாவாகமமோதும இநதவடையாளஙகளிலே நிலைபெறறிடுமென று ஒள்ளியபிள்ளா யாகமஙகளிலே சொலலும. (௭)

பாராதி யைந்துக்கும பனனுமதி தெயவங்க
ளாரா ரயனாதி யைவரா-மோரோர
தொழிலவாகளுக்குச் சொலலுஙகாற ரேறறமுத லைந்தும்
பழுதறவே பண்ணுவர்காண் பார.

இ-ள். பாராதி யைந்துக்கும் பன்னுமதி தெய்வங்களாரார்-பிருதிவு அப்பு தேயு வாயு ஆகாசம் ஐந்துகளுஞ் சொல்லப்பட்ட

வதிதேவதைகளாரானென்று கேட்கிறாயானால், அயனாதியைவ ராம்-பிருதிவிக்குப்பிரமாவும் அப்புவிக்குவிஷ்ணுவும் தேயுவிக்கு ருத்திரனும் வாயுவுக்கு மகேஸ்வரனும் ஆகாயத்துக்குச் சதாசிவரு மென ஐந்துபேராம், ஓரோர்தொழி லவர்க்குச் சொல்லுங்கால- ஒவ்வொருத்தர் கிருத்தியங்களைச் சொல்லுமிடத்து, தோற்றமுத லைந்தும் பழுதறவே பண்ணுவார்கள் பார் சிருஷ்டி திதி சங்கா ர திரோபவ மநுக்கிரக மைந்துங் குற்றமறச்செய்வார்களென் று விசாரித்தறிவாயாக. (அ)

படைப்ப னயனளிப்பன் பங்கயக்கண் மாயன்
றுடைப்ப னுருத்திரனுஞ் சொல்லில்-திடப்பெறவே
யென்றுந் திரோபவிப்ப ரீசர் சதாசிவரு
மன்றே யநுக்கிரக ராம்.

இ-ள். படைப்பனயன - பிரமா சிருஷ்டிப்பன், அளிப்பன் பங்கயக்கண்மாயன்-செந்தாமரைக் கண்ணையுடையமகாவிஷ்ணு இரக்ஷிப்பன், துடைப்ப னுருத்திரனுஞ்சொல்லில்-சொல்லுமி டத்து ருத்திரமூர்த்தியானவர் சங்கரிப்பர், திடப்பெறவே-நிச்சய மாகவே, என்றுந் திரோபவிப்பரீசர் - மகேஸ்வரமூர்த்தியானவ ரெந்தக்காலமுந் திரோபவம்பண்ணுவர், சதாசிவருமன்றே யநு க்கிரகராம்-சதாசிவமூர்த்தியானவ ரநாதியிலே யநுக்கிரகம்பண் ணுவார். (கூ)

மண்கடின மாய்த்தரிக்கும் வாரிகுளிர்ந் தேபதமா
மொண்கனல்சுட் டொன்றுவிக்கு மோவாமல்-வண்கால்
பரந்துசலித் துத்திரட்டும் பார்க்கிலா காயம்
நிரந்தரமாய் நிற்கு நிறைந்து.

இ-ள். மண்கடினமாய்த்தரிக்கும்-பிருதிவியானது விடயங்க ளிலே கடினகுணத்தைக் கொடுத்துக்கொண்டிருக்கும், வாரிகுளி ர்ந்தேபதமாம்-அப்புவானது விடயங்களிலே நெகிழுந்தகுணத்தை

கொடுத்துக்கொண்டுநிற்கும் ' ஒண்கனல்சுட் டொன்றுவிக்கும்-தேயுவானது விடயங்களிலே சுட்டொன்று தலைப்பண்ணிக்கொண்டு நிற்கும் ஓவாமல-விட்டுநீங்காமல், வண்கால்பரந்து சலிந்துதிரட்டும்-வளப்பத்தையுடைய வாயுவானது விடயங்களிலே திரட்டிக்கூட்டாநிற்கும், பாரகிலாகாயமநிரந்தரமாய்நிற்குநிறைந்து-விசாரிக்குமிடத்து ஆகாயம் விடயங்களுக்கெல்லா நிரந்தரமா யிடங்கொடுத்துக்கொண்டுநிற்கும். (ம)

உள்ளபடிமாபூத மோதினேமுன் றனக்குக்
கள்ளமிருமைம்புலனுங் கட்டுரைக்கில்-மெள்ளவே
யோசைபரிச முருவஞ்சுவைநாற்ற
மாசைதருமைம்புலனே யாம்.

இ-ள். உள்ளபடிமாபூதமோதினேமுன்றனக்கு-உண்டான படியே மகத்தாகிய பஞ்சபூதங்களுஞ் சொன்னேம், கள்ளமிருமைம்புலனுங் கட்டுரைக்கில் - கள்ளமிகுந்து வரப்பட்டாநின்றசத்தாதிவிடயங்களைச்சொல்லுமிடத்து, மெள்ளவே-மையவே,ஓசைபரிசமுருவஞ் சுவைநாற்ற மாசைதருமைம்புலனேயாம் - ஆசையைக்கொடாநின்ற சத்த பரிச ரூப ரச கந்தமென்றறிவாயாக.()

ஞானேந்திரியங்கள் நன்றாயுரைக்ககேள்
ஊனமிகுபூத முற்றிடமா-யீனமாஞ்
சத்தாதியையறியுந் தானஞ்செவிதோல்கண்
ணத்தாலு மூக்கென் றறி.

இ-ள். ஞானேந்திரியங்கள்நன்றாயுரைக்ககேள் - ஞானேந்திரியங்கள் நன்றாயச்சொல்லுகிறோங்கேள், ஊனமிகு பூதமுற்றிடமா-ஊனமிகுத்துவரப்பட்டாநின்ற பஞ்சபூதங்களிடமாக, ஈனமாஞ் சத்தாதியையறியுந் தானஞ்செவிதோல் கண்ணத்தாலுமூக்கென்றறி-ஈனத்துவமாயிருக்கிற சத்தாதிவிடயங்களை யறிகிறவிட

மேதென்று கேட்கிறாயானால் சுரோத்திரந் தொக்கு சக்ஷு சிங்ஙுவை யாக்கிராணமென் றறிவாயாக. (௰௨)

வானிடமாய்நின்று செவி மன்னுமொலியதனை
யூனமிருந்தோல்கா லிடமாக-வூனப்
பரிசந்தனையறியும் பார்வையிற்கண்ணங்கி
விரவியுருவங் காணுமே.

இ-ள். வானிடமாய் நின்று செவிமன்னுமொலியதனை - ஆகாயத்தினிடமாகநின்று சுரோத்திரஞ் சத்தத்தையறியும், ஊனமிருந்தோல் காலிடமாக வூனப்பரிசந்தனையறியும் - வாயுவினிடமாக நின்று ஊனத்துவமாயிருக்கிற தொக்குப்பரிசத்தையறியும், பார்வையிற்கண்ணங்கி விரவியுருவங்காணுமே - தேயுவினிடமாக நின்று சக்ஷுரூபத்தையறியும். (௰௩)

நன்றுகநீரிடமாய் நாவிரதந் தானறியும்
பொன்றுமணமூக்குப் பூவிடமாய்-நின்றறியு
மென்றேதுமன்றே யிறையாகமிதனை
வென்றார்சென்றாரின்ப வீடு.

இ-ள். நன்றுக நீரிடமாய நாவிரதந்தானறியும் - நல்லஅப்புவினிடமாகநின்று சிங்ஙுவை ரசத்தையறியும், பொன்றுமணமூக்குப் பூவிடமாயநின்றறியும் - பிருதிவியினிடமாகநின்று கெடாத வாக்கிராணங் கந்தத்தையறியும், என்றேதுமன்றே யிறையாகமம் - பரமேசுவரன் திருவுளம்பற்றினின்ற வேதாகமங்களிலே யநாதியிலேயென்றிப்படிச்சொல்லும், இதனைவென்றார் சென்றாரின்பவீடு - இந்தப் பஞ்சேந்திரியங்களை நிக்கிரகம்பண்ணின பேர்களே மோக்ஷவீடடைந்தவர்கள். (௰௪)

கண்ணுதனூலோதியிடுங் கன்மேந்திரியங்க
ளெண்ணுமவசனாதிக ளிடமாக-நண்ணியிடும்

வாக்குப்பாதம்பாணி மனுவுருதமுபத்த
மாய்க்கருதநாளு மது.

இ-ள், வாக்குக்கு வசனமும் பாதத்துக்குக் கமனமும் பாணிக்குத் தானமும் பாயுருவுக்கு விசர்க்கமும் உபத்தத்துக்கு ஆனந்தமும் நாடோறும் இந்தமுறைமையிலே பொருந்தியிடுமென்று நெற்றிக்கண்ணை யுடைய பரமேஸ்வர னருளிய வேதாகமங்களிலே சொல்லும். (௧௫)

வாக்காகாயமிடமாய் வந்துவசனிக்குங்கால
போக்காருங்காற்றிடமாய்ப் புலகியன-லேற்கு
மீகைக்குதநீ ரிடமாய்மலாதி
விடுமேபாரிடமுபத்தம விந்து.

இ-ள். வாக்காகாயமிடமாய் வந்துவசனிக்கும்-ஆகாயமிடமாய்நின்று வாக்குவசனத்தைச்சொல்லும், கால்போக்காருங்காற்றிடமாய-வாயுவினிடமாகநின்று பாதம் கமனம்பண்ணும், புலகியனலேற்குமீகை-தேயுவினிடமாகநின்று பாணியிடுதலுமேற்றலுஞ்செய்யும், குதநீரிடமாய மலாதிவிடும் - அப்புவினிடமாகநின்று பாயுரு மலசலத்தைப்பிரிவிக்கும், பாரிடமுபத்தமவிந்து-பிருதிவியினிடமாகநின்று உபத்தமானந்தத்தைவிடும். (௧௬)

அந்தக்கரண மடைவேயுரைக்கக்கேள்
ளந்தமனம்புத்தியுட னாங்காரஞ்-சித்தமிவை
பற்றியதுநிச்சயித்துப் பல்காலெழுந்திருந்தங்
குற்றதுசிந்திக்கு முணர்

இ-ள். அந்தக்கரணமடைவே யுரைக்கக்கேள்-அந்தக்கரணங்களுடைய வடைவைச் சொல்லுகிறோங்கேள், அந்தமனம்புத்தியுடனாங்காரஞ் சித்தமிவை பற்றியது நிச்சயித்துப் பல்காலெழுந்திருந் தங்குற்றது சிந்திக்கும் - மனம்பற்றும் புத்திநிச்ச

யிக்கும் ஆங்காரமெழுந்திருக்கும் சித்தஞ்சிந்திக்கும், உணர்-அறிவாயாக (௰௭)

ஓதியிடோலாறு முற்றுண்மத்தத்துவமென்
றோதியருணூ லறையுங்காண்-டீதறவே
வித்தியாதத்துவங்க டன்னைவிளம்பக்கே
ளுத்தமனே நன்றா யுனக்கு

இ-ள். ஓதியிடோலாறு முற்றுன்மத்தத்துவமென்றோதியருணூலறையுங்காண் - சொல்லப்பட்ட விருபத்தாலும் பொருந்தப்பட்ட ஆன்மதத்துவமென்று பரமேஸ்வரனுடைய வேதாகமங்களிலேசொல்லும், தீதறவே-குற்றமறவே வித்தியாதத்துவங்கடன்னை விளம்பக்கே ளுத்தமனே நன்றாயுனக்கு - உத்தமனாகிய பிள்ளாய் வித்தியாதத்துவங்களேழையுஞ்சொல்லுகிறோங்கேள். (௰௮)

காலநியதி கருதுங்கலைவித்தை
யேலவிராகம்புருட னேமாயை-மாலறவே
சொன்னோமடைவாச் சொன்னவிவைதன் னுண்மை
யுன்னியுரைக்கக்கா முற்று

இ-ள். காலநியதி கருதுங்கலைவித்தை யேலவிராகம் புருடனேமாயை மாலறவே - காலம் நியதி கலை வித்தை இராகம் புருடன் மாயை மயக்கமறவே, சொன்னோமடைவாக - இந்தமுறைமையிலே சொன்னோம், சொன்னவிவை தன்னுண்மையுன்னியுரைக்கக்கா முற்று-இதனுடைய சுபாவத்தைச் சொல்லுகிறோம் உற்றுப்பொருந்திக்கேள். (௰௯)

எல்லைபலம்புதுவை யெப்போதுநிச்சயித்தல்
அல்லறருங்கிரியை யான்மாவுக்-கொல்லை
யறிவாசையைம்புலனு மாரவருங்காலங்
குறியாய்மயக்கென்று கொள்.

இ-ள். எல்லைப்பலம்புதுமை - காலதத்துவமானது கழிகாலத்தெல்லையும் நிகழ்காலத்துப்பலத்தையும் எதிர்காலத்துப்புதுமையும் பொருத்துவிக்கும், எப்போதுநிச்சயித்தல் - நியதிதத்துவமானது எந்தக்காலமும் கன்மத்தையிவ்வளவென்று நிச்சயம்பண்ணிநிற்கும், அல்லற்றருங்கிரியை - கலையானது ஆணவத்தைச் சிறிதுநீக்கி யான்மாவுக்குக் கிரியையையெழுப்பும், ஆன்மாவுக்கொல்லையறிவு - வித்தியாதத்துவமான தான்மாவுக்குச் சீக்கிரத்திலே யறிவையெழுப்பும், ஆசை - இராகதத்துவமானது பெற்றபதார்த்தங்களைச் சிறிதாக்கிப்பெருத்திலே யிச்சையுண்டாக்கும் ஐம்புலனுமாரவருங்காலம் - ஆன்மா பஞ்சேந்திரியங்களிடமாகச் சத்தாதிவிடயங்களைப் புசிக்கவருகிற வவதரத்தில் புருடதத்துவமானது விடயத்திலே யழுந்துவிக்கும், குறியாய்மயக்கென்றுகொள் - மாயையானது ஒன்றைநினைக்கவொட்டாமல் மயக்கத்தைச் செய்யுமென்றறிவாயாக. (௨௰)

வித்தியா தத்துவங்க ளேழும் விளம்பினோம்
சுத்தமாந் தத்துவங்கள் சொல்லக்கேள் - சித்தமாஞ்
சுத்தவித்தை யீசுரம்பின் சொல்லுஞ் சதாசிவந்தற்
சத்திசிவங் காணவைக டான.

இ-ள். வித்தியாதத்துவங்க ளேழும் விளம்பினோம் - வித்தியாதத்துவங்களேழுஞ் சொன்னோம், சுத்தமாந்தத்துவங்கள் சொல்லக்கேள் - சுத்தமாயிருக்கிற சிவதத்துவங்களைந்தையுஞ் சொல்லுகிறோங்கேள், சித்தமாஞ்சுத்தவித்தை யீசுரம்பின்சொல்லுஞ் சதாசிவந்தற்சத்தி சிவங்காணவைகடான - நித்தியமாயிருக்கிற சுத்தவித்தை ஈசுவரம் சாதாக்கியம் சத்திசிவமென்றறிவாயாக. (௨௧)

சுத்தவித்தை ஞானமிகுந் தொன்மையா மீசுரந்தா
னத்தனை ஞெழிலதிக யாக்கியிடு - மொத்தவிவை

* சாதாக் கியமென்றுஞ் சத்தி சிவங்கிரியை
யாதார ஞானவுரு வாம்

இ-ள், சுத்தவித்தை ஞானமிகும்-சுத்தவித்தை ஞானமேறிக் கிரியை குறைந்திருக்கும், தொன்மையா மீசுரந்தானத்தனொ ழிலதிகமாகியிடும்-பழமையாக ரப்பட்டாநின்ற ஈஸ்வரதத்துவ மானது ஞானங்குறைந்து கிரியையேறியிருக்கும், ஒத்தவிவைசா தாக்கியமென்னும்-சாதாக்கிய தத்துவம் ஞானமுங்கிரியையுமொ த்திருக்கும், சத்திசிவங்கிரியை யாதாரஞானவுருவாம்-சத்தி தத் துவம் கிரியையாயிருக்கும் சிவதத்துவம்ஞானமாயிருக்கும் (௨௨)

ஆறாறு தத்துவமுஞ் சொன்னோ மடைவாக
மாறா மலமிரண்டும் வாசொல்லக் - கூறில்
அறியாமை யாணவநீ யானசுத் தக்கங்
குறியா வினையென்று கொள்.

இ-ள் ஆறாறுதத்துவமுஞ் சொன்னோமடைவாக-முப்பத் தாறு தத்துவங்களுடைய முறைமையுஞ்சொன்னோம், மாறாமல் மிரண்டும்வாசொல்ல - விட்டுநீங்காமலிருக்கிற வாணவமல்த்தை யுங் கன்மமலத்தையுஞ் சொல்லுகிறோங்கேள், கூறில்-சொல்லுமி டத்து, அறியாமையாணவம்-அறியாமையைப் பண்ணிக்கொண் டுநிற்கிற தீராணவமலம், நீயான சுத்தக்கங் குறியாவினை யென்று கொள்-சுத்தக்கமென்னையு நினையாமல் நீதானாயிருக்கிறது தா னே கன்மமலமென்றறிவாயாக. (௨௩)

ஆறாறு தத்துவமு மாணவமு மல்வினையு
மாறா வருளால் வகுத்துணைத்தீர் - வேறாக
வென்னை யெனக்கறியக் காட்டி னவைகண்டே
னுன்னரிய தேசிகனே யுற்று

* சாதாக்கியத்தின் விரிவைச் சதாசிவரூபமென்னு நூலிற்காண்க.

இ-ள். ஆறாறுதத்துவமும்-முப்பத்தாறுதத்துவமும் ஆணவ மும்-ஆணவமலத்தையும், வல்வினையும்-கன்மமலத்தையும், மா றுவருளால வருத்தினாதகீ-விட்டுநீங்காத கிருபையினாலே பகு த்தருளிச்செய்கிறா, வேறாக வென்னை யெனக்கறியக்காட்டிடா-இந்த மலங்களுக்கு வேறுகாம லொன்றுபட்டிருக்கிற வென்னுடைய சொரூபத்தையு மருளிச்செய்யவேணும், இவைகண்டோ-இந்த மூன்றுமலங்களையுந் தரிசித்தேன், உண்ணரியதேசிகனேயுற்று-நி னைந்தற்கரிதாகிய தேசிகனே யுற்றுப்பொருந்தத்தக்கதாக (௨௪)

நன்று ரைக்கக் கேள நல்லசித்தின முன்னசித்திங்
கொன்றாது சித்தசித்தை யோராது - நின்றிவற்றை
யன்றே பகுத்தறிவ தானமாவே யென்றுமறை
குன்றும லோதுங குறித்து

இ-ள். நன்றுயுரைக்கக்கேள் - நீகேட்டதான்மதரிசனத்தை நன்றாகச் சொல்லுகிறேங் கேள, நல்லசித்தின முன்னசித்திங் கொன்றாது நல்லசித்தாகிய சிவத்தின்முன்னே யசித்தாகியபாசமி ல்லாது, சித்தசித்தையோராது-நல்லசித்தாகிய சிவத்துக்கு அசி த்தாகிய பாசத்தையறியவேண்டுவதில்லை, நின்றிவற்றையன்றே பகுத்தறிவதானமாவே-சித்தாகியசிவத்தையும் அசித்தாகியபாசத் தையும அநாதியிலே பொருந்தி விசாரித்தறிந்து அறிகிறதானமா வே, என்றுமறை குன்றுமலோதுங் குறித்து-பரமேசுவரனுண்ட யவேதாகமங்களிலே குறையாமற் சொல்லும். (௨௫)

தத்துவங்க ளாறாறுந் தன்னைத்தா னென்றறியா
தெத்தன்மை யென்னுளி லியம்பக்கேள - சுத்தமா
மாறு சுவையு மறியாது தன்னைத்தான
கூறி லவையினைபோற கொள.

இ-ள். தத்துவங்களாறுறுந்தன்னைத்தானென்றறியாது-முப் பத்தாறுதத்துவங்களும ஜடமாகையினாலே தன்னுடைய சொரு

பதத்தைத் தானறியச்செய்யாது, சேதனமையென்னி லியம்பக்கே ள-எந்தமுறைமையென்று கேட்கிறீராகில் சொல்லுகிறோங்கே ள, சுத்தமா மாறுசுவையுமறியாமலு தன்னைத்தான-சுத்தமாயிரு க்கிற வறுவகைச்சுவையுந் தன்னுடைய சொரூபத்தைத் தானறி யச்செய்யாது, கூறில-சொல்லுமிடத்து அவையிவைபோறகொ ள-முப்பத்தாறுதத்துவங்களுஞ் சுவைகளைப்போலத் தன்னுடை யசொரூபத்தைத் தானறியச்செய்யாது. (உசு)

ஆறு சுவையு மருந்தி யவைதன்னை
வேறொருவன் கூறியிடு மேன்மைபோ - லாறா
மொன்றொன்றா நாடியுணர்ந் தோதி லறிவாய
நின்றபொரு டானேகா ணீ

இ-ள் ஆறுசுவையு மருந்தியவைதன்னை வேறொருவன்கூறி யிடுமேன்மைபோல - ஆறுவகைச்சுவையும் புசித்துக்கைக்கிறது காக்கிறது * கூக்கிறது துவர்க்கிறது புளிக்கிறது இனிக்கிறதெ ன்க் கண்டுகொண்டொருவன் சொல்லுகிறமுறைமைபோல, ஆறா றுமொன்றொன்றா நாடியுணர்ந்து-முப்பத்தாறு தத்துவங்களையு மொன்றொன்றாக விசாரித்தறிந்து, ஓதில-சொல்லுமிடத்து, அறி வாய நின்றபொருடானேகாணீ - முப்பத்தாறு தத்துவங்க ளையும் பொருந்தியறிந்து அறிகிறவறிவுகாணியாகிய ஞானமாம். (உஎ)

குன்றா வருளாலே கூறினீ ரென்வடிவு
பொன்றாத நாமமுருவம் போயினீர் - நின்றருக்கன்
கண்ணுக்குக் காட்டுமோ போலே யுணர்த்தியிப்ப
நண்ணியறி வித்திடுவோ னாம்

இ-ள் குன்றாவருளாலே கூறினீரென்வடிவு - கெடாதகிரு பையினாலே அடியேனுடையசொரூபத்தையருளிச்செய்தீர், பொ ன்றாத நாமமுருவம்போகியீர் கெடாததேவரீருடைய சொரூபத்

* கூக்கிறது-உவர்க்கிறது.

தையு மடியேனுக்கருளிச்செய்யவேணுமே, நின்றருக்கண் கண்ணுக்
குக் காட்டுமாபோல - அதித்தப்பிரகாசமானது கண்ணுக்குப்ப
தார்த்தங்களைக் காட்டிக்கொண்டு நிற்கிறதுபோல், உனதறிவின
ணைப்பறிவித்திடுவோமாம-உனதறிவிலே பொருந்தினின்று றறிவித்
துவருவோமாம். (உஅ)

அணறியுங்கே ளான்மாவா லாய்ந்தறியு மைம்பொறிக
ளின்றி யறியா திவையென்ன - நின்றதுபோ
லோவாம லுன்னை யுணாத்துவோ முன்னறிவின்
மேவாமன மேவினா மே

இ-ள், அனறியுங்கேள-அறிவிலலாமலுஞ் சொல்லுகிறோஞ்
கேள ஆனமாவாலாயந்தறியு மைமபொறிகளினறியறியாதிவை
யென்ன-ஆனமாவிலேயறிந்து காரியப்பட்டுவருகிற பஞ்சேந்தி
ரியங்களும ஆனமாவினுலேயறிந்துகாரியப்பட்டுவருகிறோமென்
றறியச்செய்யாது, நினறதுபோல-அந்தப பஞ்சேந்திரியங்களைப்
போல, ஓவாமலுனனையுணாத்துவோம-விடடுநீஙகாமனினறுண
ககறிவிபபோம, உனனறிவின மேவாமன மேவினாமே-உனன
றிவிலே பொருநதாமற பொருநதினின றறிவித்துவரச்செய்தேயு
நீயறியாமலிருந்தது மபபடிபோல. (உகூ)

அக்கரங்கட் கெல்லா மகரவுயிர் நின்றாற்போல
மிக்க வுயிர்க்குயிராய மேவினோ - மெக்கணுநு
நில்லா விடத்துயிர்க்கு நில்லா தறிவென்று
நல்லா கமஞ்சொல்லு நாடு

இ-ள் அக்கரங்கட்கெல்லா மகரவுயிர் நின்றாற்போல்-ஐம
பததோ ரக்ஷரத்துக்கும் அகரமாகிய வக்ஷரமுயிராய் நினறது
போல, மிக்கவுயிர்க்குயிராய மேவினோம-சாவானமாகவிடத்தி
லேயும அறிவுக்கறிவாயப் பொருந்தினினறும, எக்கணுநில்லா
விடத்துயிர்க்கு நில்லாதறிவென்று-ஜடசித்துக்களெல்லாம காத்தா

நிறைந்து நின்றுவிததாலலல தறியசசெயயாதென்று, நலலாகம மோதுநாடு-நலலவேதாகமஙகளிலே சொலலுமெனறு விசாரித தறிவாயாக. (௯௰)

நறறவததோா தானகாண நாதாநதக் தஞ்செழுத்தா
லுறறுருவாய நினறுட லுளளபடி - பெறறிடநான்
விணணறா பொழிலவெண்ணெய மெய்கணட நாதனே
தண்ணா ரருளாலே சாறறு.

இ-ள். நறறவதோா தானகாண-நல்லதவததைபுடையவா னமாககள தரிசிககததககதாக, நாதாநததஞ்செழுததாலுறறுருவாய நினறுடல-நாதாநததினமுடிவிலே பஞசாக்ஷரமேதிருமேனியாககொணடு நிருததஞ்செயகிற முறைமை, உளளபடிபெற றிடநான-உணடானபடியே யடியேன தரிசிககததககதாக, விணணறாபொழில வெணணெய மெயகணடநாதனே - ஆகாயததளவுயா வாவியிருககாநினற சோலைகளசூழநத திருவெணணெயநலலூரே திருபபதியாகவெழுநதருளியிருககிற மெயகணடசுவாமி, தணணா ரருளாலேசாறறு - குளிாநதகிருபையினலே திருவுளமபறறியருள வேணடும. (௯௧)

எட்டு மிரண்டு முருவான லிஙகததே
நட்டம புதலவா நவிலககேளா - சிட்டன்
சிவாயநம வெனனுந திருவெ ழுநதஞ் சாலே
யவாயமற நினறுடு வான.

இ-ள். எடடுமிரணடு முருவானலிஙகததேநடடம எட்டுமிர ணடுமுருவாயிருககிறயகாரமாகிய ஞானமாவினிடததிலேநடனம, புதலவாநவிலககேள-பிளளாய சொலலககேள, சிடடன - பரமசி வன, சிவாயநமவெனனுந திருவெழுததஞசாலே யவாயமறநின றுடுவான-பஞசாககரமே திருமேனியாககொணடு ஆனமாககள் பிறவியறததககதாக நிருததஞ்செயவன. (௯௨)

ஆடும் படிகேணல் லம்பலத்தா னையனே
நாடுந் திருவடியி லேநகரம் - கூடு
மகர முதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார்.

இ-ள். ஆடும்படி கேணல்லம்பலத்தானையனே யென்னல்ல திருவம்பலத்தினகண்ணே எழுந்தருளிநின்று நிருத்தஞ்செய்கிற முறைமையைச் சொல்லுகிறோங் கேள், நாடுந்திருவடியிலே நகரம் - உண்ணரிய ஸ்ரீபாதத்திலே நகாரமாகவும், கூடு மகர முதரம் - பொருந்தப்பட்ட திருவுந்தியிலே மகாரமாகவும், வளர்தோள் சிகரம் - மிகுந்து வளரப்பட்டு நின்ற திருத்தோளிலே சிகாரமாகவும், பகருமுகம் வா - சொல்லப்பட்ட திருமுகத்திலே வகாரமாகவும், முடியப்பார் திருமுடியிலே யகாரமாகவும் இந்த முறைமையிலே நமசிவாயவென்கிற பஞ்சாக்கரமே திருமேனியாகக் கொண்டு நிருத்தஞ்செய்வாரென்று விசாரித்தறிவாயாக. (௩௩)

சேர்க்குந் துடிசிகரஞ் சிக்கனவா வீசுகரம்
மார்க்கும் யகர மபயகரம் - பார்க்கிலிறைக்
கங்கி நகர மடியின்கீழ் முயலகனார்
தங்கு மகரமது தான்.

இ-ள். சேர்க்குந்துடிசிகரம் - டமருகமேந்திய ஸ்ரீ அத்தத்திலே சிகாரமாகவும், சிக்கனவாவீசுகரம் - வீசிய ஸ்ரீ அத்தத்திலே வகாரமாகவும், ஆர்க்கு மயகர மபயகரம் - அமைந்த ஸ்ரீ அத்தத்திலே யகாரமாகவும், பார்க்கிலிறைக்கங்கி நகரம் - அக்கினியேந்திய ஸ்ரீ அத்தத்திலே நகாரமாகவும், அடிக்கீழ்முயலகனார் தங்குமகரமது தான் - முயலகனை மிதித்த பாதத்திலே மகாரமாகவும் இந்த முறைமையிலே பஞ்சாக்கரமே திருமேனியாகக் கொண்டு நிருத்தஞ்செய்வாரென் றறிவாயாக. (௩௪)

ஓங்கார மேநற் றிருவாசி யுறறதனி
னீஙகா வெழுததே நிறைசுடரா - மாங்கார
மறறா ரறிவா ரணியமபலததா ளுடலிது
பெறறா பிறபபறறா பின

இ-ள ஓஙகாரமேநற்றிருவாசி-பிரணவநதானே நல்லதிருவாசியாகவும, உறறதனி னீஙகாவெழுததேநிறைசுடராய-பிரணவததைவிடடுநீஙகாத பஞசாககரமே யுளளொளியாகவும, ஆஙகாரமறறா ரறிவா-யானெனதெனனுஞ செருககறறவாகளறிவாாகள, அணியமபல்நதா ளுடலிதுபெறறா பிறபபறறாபின-அழகிய திருவமபலத்தினகணணிலே யெழுநதருளிநினறு திருததஞசெயயு முறைமையைத தெரிசிததவாகளே பினபு சநநமரணமறறவாகள (கரு)

தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற
சாறறியிடு மஙகியிலே சஙகார - மூறறமா
யூனறு மலாபபதததி லுறற திரோதமுததி
நானற மலாபபதததே நாடு

இ-ள். தோறறநதுடியதனில - டமரகமேநதிய ஸ்ரீஅத்தநதிலே சிருஷ்டியாகவும, தோயுநதிதியமைபபில-அமைததஸ்ரீ அத்தத்திலே ஆனமா இரக்ஷையாகவும, சாறறியிடுமஙகியிலே சஙகாரம்-அககினியேநதிய ஸ்ரீஅததததிலே மலசஙகாரமாகவும, ஊறறமாயூனறு மலாபபதததி லுறறதிரோதம - உறறியாயூனறிய ஸ்ரீபாததததிலே பிரபஞசததை மறைககுந திரோதமாகவும, முததிநானறமலாபபதததேநாடு-தூககியஸ்ரீபாததததிலே யநுககிரகமுத்தியாகவும இநதமுறைமையிலே முததி பஞசகிருததியமே திருககூததெனறு விசாரிததறிவாயாக. (கசு)

மாயை தனையுதறி வலவினையைச் சுட்டுமலஞ
சாய வமுககிவரு டானெடுதது - நேயததா

லானந்த வாரிதியி லான்மாவைத் தானழுந்தல்
தானெந்தை யாரபாதந் தான்.

இ-ள். மாயைதனையுதறி-டமரகமேந்திய ஸ்ரீஅத்தத்திலே மாயையைநீக்கி, வல்வினையைச்சுட்டு-அக்கினியேந்திய ஸ்ரீ அத்தத்திலே கன்மமலத்தைச்சுட்டு, மலஞ்சாயவமுக்கி - ஊன்றிய ஸ்ரீபாதத்திலே மல்மேலிடாமலமிழ்த்தி, அருள்தானெடுத்து-தூக்கியபாதத்திலேயருளேதனுவாகநிறுத்தி, நேயத்தாலாநந்தவாரிதியி லான்மாவைத் தானழுந்தல்தான் - கிருபையினலேயமைத்த ஸ்ரீஅத்தத்திலே யாநந்தவெள்ளத்திலே ஆன்மாவை யழுத்துகிறதுதான், எந்தையார் பாதந்தான்-எம்முடையசுவாமியாகிய பரமேஸ்வரனுடைய திருக்கூத்துமுறைமை (௬௭)

மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்
தானந்த மானிடத்தே தங்கியிடு - மானந்த
மொண்டருந்தி நின்றாடல் காணுமருண் மூர்த்தியாய்க்
கொண்டதிரு வம்பலத்தான் கூத்து

இ-ள். மோனந்தமாமுனிவர் மும்மலத்தைமோசித்து-மௌனஞானிகள் கர்த்தாவினுடையகிருபையினலே மூன்றுமலங்களையு நீக்கி, தானந்தமானிடத்தே தங்கியிடும்-ஆன்மபோதமுடிந்தவிடத்திலேயுதயமாகிற, ஆநந்தமொண்டருந்தி நின்றாடல்காணும்-ஆநந்தவெள்ளத்திலே முகந்துகொண்டநுபவிக்கிறதுதான், அருண்மூர்த்தியாய்க்கொண்ட திருவம்பலத்தான்கூத்து - ஆன்மாக்களை யிரக்ஷிக்கவேணுமென்கிற காருண்ணியமே திருமேனியாகக்கொண்டு திருவம்பலத்தினகண்ணி லெழுந்தருளிநின்று நிருத்தஞ்செய்கிற முறைமைத்தாம். (௬௮)

உரையுணர்வுக் கெட்டா வொருவன்மிகு பஞ்சாக்
கரத்தால் வரைமடந்தை பாதி - புரையிடமாய்க்

காணும படியே கருணையுருக கொண்டாடல்
பேணு மவர்கருண்டோ பிறபபு

இ-ள் உரையுணர்வுகெட்டா வொருவன்-மனவாக்குக்கா யங்களுககெட்டாத வொப்பறறபரமேசுவரன, மிகுபஞசாக்கர த்தால-பஞசாககரத்தினாலே மிகுநதகாருணியமே திருமேனியாக க்கொணடு, பரையிடமாய்நின்று பராசத்தியாகிய திருவமபலவிட மாகநின்று, வரைமகடான காணுமபடியே-மலையரையன மகளகா ணும்படிககு, கருணையுருககொணடு - கிருபையினாலேதிருமேனி கொணடெழுநதருளி, ஆடலபேணுமவாககுணடோபிறப்பு-ஆடி யருளியதிருக்கூத்தைவிருமபினபெயாகளபினபுசனனமறறவாகள்.

நாதாநத நாடகததை நன்று யருளசெயதீ
ரோதீ ரெழுததஞசு முளளபடி - தீதறவே
யஞசெழுததீ தாகி லழியுமெழுத தாயவிடுமோ
தஞச வருட்குருவே சாறறு.

இ-ள். நாதாநதநாடகததை நன்று யருள்செய்தீர்-தத்துவாதீ தமாயிருககிற திருக்கூத்து முறைமையை நன்று யருளசெயதீர்; அஞசெழுததீதாகி லழியுமெழுததாயவிடுமோ-பஞசாககரமெழுத துகளிலே•யொன்றுயிருககுமாகில அழிகிற வெழுததுகளாமோ, தஞசவருட்குருவே-புகலிடமாயிருககிறகிருபையுடையதேசிகனே தீதறவேயோதீ ரெழுததஞசுமுளளபடிசாறறு குறறமறறபஞசாக கரததி னுண்மையை யுணடானபடியே யடியேனுக கருளசெயய வேணடும். (௪௰)

உறற குறியழியு மோதுங்காற் பாடைகளிற
சறறும பொருடான சலியாது - மறறதுவே
யீசனரு ளாவி யெழிலார் திரோதமல
மாகியெழுத தஞசினடை வாம.

இ-ள் ஓதுங்கால்-சொல்லுமிடத்து, உற்றகுறியழியும்-பொருந்தப்பட்ட வெழுத்துக்களுடைய குறிகளழியும், பாடைகளிற் சாற்றும்பொருட்டான சலியாது-பதினெண்பாஷைகளிலே யுண்டானபொருள்கள் சற்றுங்கெடாது, மற்றதுகேள பஞ்சாக்கரத்தி னுண்மையைச் சொல்லுகிறமுறைமைகேள், ஈசனருளாவியெழி லார்திரோதமலம் ஆசிலெழுத்தஞ்சி னடைவாம் - சிவன் அருள் ஆன்மா வழகியதிரோதம் மலம் ஐந்தும் குற்றமில்லாத பஞ்சாக்கரத்தின் முறைமைத்தாம், (சக)

சிவனரு ளாவி திரோதமல மைந்து
மவனெழுத் தஞ்சி னடைவா - மிவனின்று
நமமுதலா யோதிலரு ளூடாது நாடுமருள்
சிமமுதலா யோதுநீ சென்று.

இ-ள் சிவனருளாவி திரோதமலமைந்து மவனெழுத்தஞ்சி னடைவாம் - சிவம் அருள் ஆன்மா திரோதம் மலமைந்தும் பரமேஸ்வரனுடைய பஞ்சாக்கரத்தின் முறைமைத்தாம், இவனின்று-பக்குவப்பட்டவான்மாவின்று, நமமுதலாயோதிலருளூடா து-நகாரமுதலாகவுச்சரிக்கில் அருள்பொருந்தாது, நாடுமருள்சிம முதலாயோதுநீசென்று - ஆசாரியாநுக்கிரகம்பண்ணின முறை மையிலேநின்று சிகாரமுதலாக வுச்சரிக்கிலருள்பொருந்தும். ()

அண்ணல் முதலா யழகா ரெழுத்தைந்து
மெண்ணி யிராப்பகலற் றின்பத்தே - நண்ணி
யருளா னதுசிவத்தே யாக்குமணு வை
யிருளா னதுதீர வின்று.

இ-ள் அண்ணல்முதலாயழகாரெழுத்தைந்தும்-சிவமுதலா கியழகுபொருந்திய பஞ்சாக்கரமைந்தும், எண்ணி-இடைவிடா மலுச்சரிக்கில், இராப்பகலற்றின்பத்தே - கேவலசகலமற்றவிடத் தே, நண்ணியருளானது சிவத்தேயாக்குமணுவையிருளானதுதீர

வின்று - ஆன்மாவுக்கு ஆணவமலமானதுநீங்கவருளானது பேரின்பமாகிய சிவத்திலே பொருத்திவிக்கும். (௨௩)

ஆதி மலமிரண்டு மாதியா யோதிஞற்
சேதியா மும்மலமு நீர்வாகா-போத
பதிப்பரிதா மின்பத்தே வா ழலா மாறி
விதிப்படியோ தஞ்செழுத்து மே.

இ-ள். ஆதிமலமிரண்டு மாகியா யோதிஞற் சேதியாமும்மலமுநீங்காகா-ஆதியாகிய நகாரமும் மலமாகியமகாரமும் இரண்டுமெடியாகவுச்சரித்தால உறுதியாக மும்மலமுநீங்கி ஆன்மாவருளைப்பொருந்திய பேரின்பவாழ்வை யுறமாட்டாது உறுமுறைமை கூறுமிடத்து, மாறிவிதிப்படியோதஞ்செழுத்தும (ஒதினல) போதமதிப்பரிதா மின்பத்தே வாழலாம - நகாரமுதலாக வுச்சரிக்கு முறைமையைமாறிச சிவமுதலாக அத திருவெழுத தஞ்சையும் விதிப்படியுச்சரிக்க வானம்போதத்தால் மதித்தற்கரிதாகிய பேரின்பவாழ்விலெய்தி வாழலாம நீயுமசிவமுதலாகவுச்சரிப்பாயாக.

அஞ்செழுத்தே யாகமமு மண்ணலருமறையு
மஞ்செழுத்தே யாதிபுரா ணமனைத்து-மஞ்செழுத்தே
யானந்தத் தாண்டவமும யாவைக்கு மப்பாலா
மோனந்த மாமுத்தி யும.

இ-ள் அஞ்செழுத்தேயாகமமு மண்ணலருமறையும - பரமேஸ்வரன திருவுளம்பற்றியருளின இருபத்தெட்டு சிவாகமங்களும நாலுவேதமும பஞ்சாக்கரமே, அஞ்செழுத்தே யாதிபுராணமமனைத்தும-பதினெண்புராணங்களனைத்தும்பஞ்சாக்கரமே, அஞ்செழுத்தே யானந்தத தாண்டவமும-ஆனந்தநடனமும்பஞ்சாக்கரமே, யாவைக்குமப்பாலா மோனந்தமாமுத்தியும - தத்துவாதீதமாகிய மௌனஞானமாயிருக்கிறமுத்தியும்பஞ்சாக்கரமே.

முத்தி தனையடைந்தோர் முந்துபழம் போதங்கி
வித்தகமாம் வீணை யிசையிறதி-ஒத்த
விரதமணம் வெம்மை யெழிலுந்தம் போல
விரவுவரென் றோதும் விதி.

இ-ள் முத்திதனையடைந்தோர் - மோக்ஷத்தையடைந்தபெ ரியோர்கள் பேரின்பத்திலே யிரண்டறநிற்கிற முறைமைக்குத் திருஷ் டாந்தமெப்படியென்று கேட்கிறாயாகில், முந்துபழம்போதங்கி வித்தகமாம்வீணையிசையிறதிஒத்தவிரதமணம் வெம்மையெழி லுந்தம்போல - பழமும் ரசமும்போலவும் பூவுமணமும்போலவும் அக்கினியும் வெம்மையும்போலவும் பண்ணும்மோசையும் போல வும், விரவுவரென்றோதும் விதி-இப்படி யிரண்டறப்பொருந்தி நிற்பாரகளென்று ஆகமங்களிலேசொல்லும். (௬௬)

தத்துவங்க ளெல்லாஞ் சகசமா யான்மாவிற்
பெத்தத்தி னிற்கின்ற பெற்றிபோல்-முத்திதனிற்
சித்தமல மற்றா செறிந்திடுவ ரென்றுமறை
சத்தியமா யோதியிடுந் தான்.

இ-ள். தத்துவங்களெல்லாஞ் சகசமா யான்மாவிற் பெத்தத் தினிற்கின்ற பெற்றிபோல - பெத்தத்திசையிலே தத்துவங்களெ ல்லாம் ஆன்மாவினிடத்திலே யிரண்டறநிற்கிறமுறைமைபோல, முத்திதனிற்சித்தமலமற்றா செறிந்திடுவரென்று மறை சத்தியமா யோதியிடுந்தான் - முத்திதிசையிலேசகசமலமறறபக்குவபபட் டவானமாக்கள் சிவனிடத்திலே இரண்டறப் பொருந்துவார்க ளென்று சத்தியமாகவே சிவாகமஞ்சொல்லும். (௬௭)

ஆதவன்றன் சந்நிதியி லம்புலியி னொர்சோதி
பேதமற நிற்கின்ற பெற்றிபோ-லாதரத்த

தன்னை திருவடியி லானமா வணைந்தின்பக்
கண்ணி லழுந்தியிடு காண.

இ-ள். ஆதவன்றன சந்நிதியி லட்டபுவியினுாசோதி பேதமற நிறதினற பெறறிபோல-ஆதிததபிரகாசததின முனனேசகதிர பபிரகாசமான இரணடறநிறகிற முறைமைபோல, நாதாநதந்த னை திருவடியி லானமாவணைநது-சததுவாதிதமாயிருக்கிறதிரு வடிஞானததிலே யானமாபபொருநதி, இனபககணணி லழுநதி யிடுகாண - பேரினபததிலே யிரணடறப பொருநதுமெனறறி வாயாக. (சஅ)

சென்றிவனறு னென்றிற சிவபூ ரணசிதையு
மனறவனறு னெனறுமெனி லந்நியமா-மின்றிரண்டு
மற்றநிலை யேதெனனி லாதித்த னந்தனவிழிக்
குற்றமற நினறதுபோற கொள்.

இ-ள். சென்றிவன்றுனென்றிற்சிவபூரணஞ்சிதையும்-ஆன்மா சிவனேசசென்று பொருநதுவானுகில சிவனுக்குப் பூரணத்து வமிலலையாகவேணும, அன்றவன்றுனென்றுமெனி லந்நியமாம்-சிவஞானமாவைசசென்று பொருநதுவானுகி லப்பேர் வானமா வேறுயிருக்கவேணும, இனறிரணடு மற்றநிலையேதென்னில்-இர ண்டு முறைறமையுமலலாமலநின்ற நிலைகூறுக திருஷ்டாந்தமெப்ப டியென்று கேட்கிறுயானுல் ஆதிததனநதனவிழிக் குற்றமறநின்ற றதுபோறகொள-அநதகனுககுப படலநீஙகினகாலத்து ஆதித்த பபிரகாசமுந கணணினுடைய வொளியும இரணடறக கலநது நினறுறபோல. (சகூ)

வாககு மனமிறந்த வானகருணை யானொரு
தாக்கறவே நிறகுந தனிமுதல்வா-நீகாப்
பதியினைபபோ னித்தம பசுபாச மொன்றும்
கதியிடததுந் தனமையுங் காட்டு.

இ-ள். வாக்குமனமிறந்த வான்கருணை யாளனொரு தாக்கற வேயிற்கும் தனிமுதல்வா - மனவாக்குக் காயங்களுக் கெட்டாதபொருளே வடிவாய அடியார்களிடத்திலே யிரண்டறநிற்கிற வொப்பற்ற கர்த்தாவே — நீக்காப் பதியினைப்போ னித்தம் பசு பாசமென்றாய்-விட்டு நீங்காமலிருக்கிற பதியினைப்போற் பசுவும் பாசமும் நித்தியமென்றருளிச்செய்தது, — கழியாத மூன்றினையுங்காட்டு-முத்தியிலும் பதி பசு பாச மூன்றுமுதலும் அழியாமனிற்கிற முறைமையை அடியேனுக்கு அருளிச்செய்ய வேணும். (௫௰)

முத்திதனில் மூன்று முதலு மொழியக்கேள்
சுத்தவனு போகத்தைத் துய்த்தலணு-மெத்தவே
யின்பங்கொ டுத்தலிறை யித்தவினை வித்தல்மலம்
அன்புடனே கண்டுகொளப் பா.

இ-ள். முத்திதனில் மூன்றுமுதலு மொழியக்கேளப்பா-அப்பனே முத்தியிலும் பதிபசுபாசமூன்று முதலுமழியாமனிற்கிற முறைமையைச்சொல்லுகிறோங்கேள், — சுத்தவனுபோகத்தைத் துய்த்தலணு-பேரின்பத்தைப் புசிக்கிற தான்மா, — மெத்தவேயின்பங்கொடுத்தலிறை -பேரின்பத்தை மிகுதியுங் கொடுக்கிறது கர்த்தா, இத்தவினைவித்தல்மலம் - பேரின்பத்தை மேன்மேலும் விளைக்கிறது மலம், — அன்புடனே கண்டுகொள் - அன்பினுலே யறிவாயாக. (௫௧)

அப்பாலும் முத்திக ழியாத காரணந்தான்
செப்பரி யருளாலே செப்பக்கே-ளொப்பில்
குருலிங்க வேடமெனக் கூறிவிவை கொண்டார்
கருவொன்றி லில்லார்கள் காண்.

எப்புவியும் - ஏழுவுலகத்தவரும், மந்தரவெற்பும் - மந்தரமலைவாசிகளும், மறி - அலைமட்டங்கும், கடலும் - சமுத்திரவாசிகளும், மந்திரமும் - சப்தகோடிமகாமந்திரங்களும், வேதமுடி - நான்கு வேதங்களும், வேதமுடிவும் - முப்பத்திரண்டு உபநிடதங்களும் விளைவிந்துவுடன் - சுத்தமாயையிலுண்டாகிய விந்துவுடன், நாதமும் - அம்மாயையின் காரியமாகிய நாதமும், காணு - இவைகளால் காணப்படாத, நலத்தினன் - நன்மையையுடையவன்,

ஓத

அரியா னெளியா னளவிறந்து நின்ற
பெரியான் சிறியான் பெண்பாகன் —

(இ-ள்,) ஓத - எடுத்துச்சொல்ல, அரியான் - (உழுவலன்பின்றலைப்படாத அயன்முதலியதேவர்கட்கு,) அருமையானவன், எளியான் - (அன்பின்றலைப்பட்ட அடியருக்கு) எளிமையானவன், அளவிறந்து - (வைகரியாதி நால்வித வாக்கின் பகுதியாகிய வேதமுதல் நாதமீறானவைகளுக்கு அதீதமாய்ச் சுட்டுணர்வுக்கெட்டாது யாங்கணும் பிரிவின்றி சமவேதமாய் நின்ற) வியாபகமாய், நின்ற - எழுந்தருளிய, பெரியான் - (அளவின்றிப்பரந்த அண்டங்களையாவும் தன்னுள்வியாப்பியமாகத் தான்வியாபகமாயெங்குநிறைந்துநின்ற) பெரியவன், சிறியான் - (மலபாகம்வருவித்தருளுதற்பொருட்டு அணுக்களாகிய உயிர்கட்குள்ளிருந்து அதிசூக்கும ஐந்தொழில்நடத்தும்) சிறியவன், பெண்பாகன் - (நிஷ்கள்சிவம் ஆன்மாக்களின் போர்த்தகாரமாகிய ஆணவத்தைத் தீர்க்கும்பொருட்டும் • ஆகமங்களைக் குருசந்தானத்தில் வைக்கும்பொருட்டும் அறுவகைச்சமயத்த வருமவரவா தியானவண்ணம் அருளுதற்பொருட்டும் அருள்வடிவாகிய சத்தியின்வழியேசங்கற்பித்துநின்ற) அம்மையாரை வாமபாகத்திலுடையவன்.

தெரியா

அருவா னுருவா னருவுருவு மில்லான
மரியான மரிபபாா மனத்தான —

(இ-ள்) தெரியா - ஒருவராலுமறியப்படாத, அருவான் - (சிவம் சத்தி நாதம் விந்து என) அருவமானவன், உருவான - (மகேசுரன உருத்திரன திருமாலஅயன என) உருவமானவன, அருவுருவம்-(சதாசிவமெனனும) அருவுருவமாகி, இலலான - (நவந்தருபேதமுநாடக மாத்திரையானடிக்கும) இவையாவுமிலலாதவன, மரியான - இறவாதவன, மரிபபாா - இறக்கும்பிரம விஷ்ணுக்களுடைய மனத்தான - மனத்திலிருப்பவன,

பரிவான

மெய்யாக்கு மெய்யன வினைக்குவினை யாயினன
பொய்யர்க்குப பொய்யாய பொய்யாயினன —

(இ-ள்) பரிவான - பக்குவப்பட்ட, மெய்யாக்கு - உணமையடியாாக்கு, மெய்யன-உண்மையாய விளங்குபவன, வினைக்கு-பிரபஞ்சகாரியங்கட்கு வினையாயினன - நிமித்தகாரணனாயினன, பொய்யாக்கு - உணமையிலலாாக்கு, பொய்யாய- இனமையாய், பொய்யாயினன - தோன்றுதவனாவான்.

ஐயன

பட்டாகம பூண்ட பரமன பசுவி
னிடமாய் நிறைந்த விறைவன —

(இ-ள்,) ஐயன-சர்வான்மாக்களுக்குந்தந்தையானவன், பட்டாகம் (தாருகாவனத்து விசாரவேமத்துணடாக்கியேவிய)படநாகங்களை வேகூடியபாம்புகளை பூண்ட - ஆபரணங்களாகத்தரித்த,பரமன மேலானவன, பசுவின - எண்ணிறந்தஆனமகோடிகளின், இடமாய்-இடமாகி, நிறைந்த - பூரணமாய்த்தங்கிய,இறைவன - கடவுள்,

சுடரொளியா
னென்றுமுள னன்றளவு மியானு முளனாகி
னின்றநிலை யிற்றரித்து நில்லாமற்—

(இ-ள்) சுடரொளியான் - சோமசூரியாக்கினி சொரூபமாயுள்ளவன், என்றுமுளன் - இத்தகைய முதல்வன் எக்காலத்துமுள்ளானே, அன்றளவும் - அக்காலமுதல், யானும் பசுவாகிய நானும், உளனாகி, இருப்பவனாகி, நின்றநிலையில் - ஆன்மாவினது உண்மைச்சொரூபமாயுள்ள தன்மையில், தரித்து - நிலைபெற்று, நில்லாமல் - வாழாமல்,

சென்றுசென்று
தோற்றியிடுமண்டஞ் சுவேதசங்கண் மண்ணின்மேற்
சாற்றுமுற் பீசஞ் சராயுசங்கட்—கேற்றபிறப்
பெல்லாம் பிறந்து பிறந்து மிருவினையின்
பொல்லாங்கு துய்க்கும் பொறியிலியேன்—

(இ-ள்) சென்றுசென்று - படைப்புக்டோறும் போய்ப்போய், தோற்றியிடும் - முதல்வனாலுண்டாக்கப்பட்டு, மண்ணின்மேல் - பூமியின்மீது, சாற்றும் - சொல்லும் - அண்டம் - முட்டையிற்றோன்றுவன, சுவேதசங்கள் - வியர்வையிற்றோன்றுவன, உற்பீசம் - விதையிற்றோன்றுவன, சராயசங்கட்கு - கருவிற்றோன்றுவனவாகிய இவைகட்கு ஏற்ற - சம்பந்தமாகிய, பிறப்பெல்லாம் - எழுவகைப்பட்ட எண்பத்துநான்கு நூறாயிரயோனிகடோறும், பிறந்தும் - சனித்தும், இறந்தும் மறுபடி மரித்தும், இருவினையின் - அந்தந்தச் சென்மங்கடோறுமுண்டான புண்ணியபாவங்களின் பொல்லாங்கு - தீமையை, துய்க்கும் - அனுபவிக்கும், பொறியிலியேன் - அறிவிலியேன்.

கல்லா
வுணர்வின் மிசையோ டலகாயிதனைப்
புணர்வதொரு புல்லறிவு பூண்டு—

(இ-ள்,) கல்லா-பதி நூல்களைக் கல்லாத, உணர்வின் - பாசவறிவினால், மிசையோடு - மிகுந்த திகரித்த, உலகாயிதனை - சாருவாகனை, புணர்வதோரு - கலந்ததொரு, புலவறிவு - சிற்றறிவு, பூண்டு - கொண்டு.

கண்ணிற

கொடிதெனவே சென்று குடிபழுதே செய்து
கடிய கொலைகளவு காமம்-படியின்மிசை
தேடி யுழன்று தெரிவைத் தெரியாமல்
வாடி யிடையு மனந்தனக்கு—

(இ-ள்.) கண்ணியின் - அம்பினைக் காட்டிலும், கொடிதெனவே - கொடுமையாகவே, சென்று - வேகமாகப்போய், குடிபழுதே செய்து - பிறனில்விழைந்து, கடிய - அச்சமான, கொலை - பிறவுயிரைக் கொல்லல், களவு - திருடல், காமம் - அன்னியமாதர் மேலிச்சை முதலியன, படியின்மிசை - இவ்வுலகில், தேடியுழன்று - முயன்று திரிந்து, தெரிவை - முதலவனருளை, தெரியாமல் - நாடாமல், வாடி - சோம்பி, இடையும் - சோர்தலையடையும், மனந்தனக்கு (கருவிகளிற்றலைமையாய) மனத்துக்கு.

நாடியது

போன வழியேயோடும் புந்திக்கும் புந்தியுட
னான திறலா ரகந்தைக்கும்—

(இ-ள்) நாடி - மனமானது விடயங்களைப்பற்றி, அது - அம்மனம், போனவழியோடும் - சென்றவிடத்திலே செல்லும், புந்திக்கும் - ஒன்றை நிச்சயம்பண்ணும் புத்திக்கும், புந்தியுடன் - அப்புத்தியுடன், ஆன - பொருந்திய, திறலார் - வல்லமை பொருந்திய, அகந்தைக்கும் - சித்தத்திற்கும்,

மேனி

யயர வயர வழிய வழியு
முயிரின அயர முனையேன்

(இ-ள்,) மேனி-தேகமானது, அயர அயர - நாளுக்கு நாள் தளர்தளர, அழிய அழியும் - அக்கருவிகளுடன் அம்மேனியழியும்போது. உயிரின் - ஜீவனாவின் துயரம் - அக்காலத்துண்டாகுந் துன்பத்தினை, உரைப்பேன் - இவ்வளவெனக் கூறேன்.

வயிரமே

கொண்டொரு காமனுக்குங் கோபனுக்கும் மோகனுக்கு
மண்டு மதமாச் சரியனுக்கும்—

(இ-ள்,) வயிரமே விரோதமே, கொண்டொரு, பெற்றொரு, காமனுக்கும் ஆசையென்பவனுக்கும், கோபனுக்கும் - சிறிதுஞ்சாந்தமில்லாத கோபமென்பவனுக்கும், மோகனுக்கும் நன்மைதீமை பகுத்தறியாது மயக்கஞ்செய்யும் மோகமென்பவனுக்கும், மண்டு - மிகுந்த, மதம் - செருக்கினையுடைய, மாச்சரியனுக்கும் - பொறாமையனுக்கும்,

திண்டிறல்சே

ரிந்திரியம் பத்துக்கு மீரைந்து மாத்திரைக்கு
மந்தமிலாப் பூதங்க ளைந்தினுக்கும்—

(இ-ள்,) திண்டிறல்சேர் - வல்லமையே வெற்றியாக வுடைய, இந்திரியம் பத்துக்கும் மெய் வாய் கண் மூக்கு செவியாகிய ஞானேந்திரியமைந்து வாக்கு பாதம் பாணி பாயுரு உபஸ்தமாகிய கன்மேந்திரியமைந்து ஆக பத்துக்கும், ஈரைந்து மாத்திரைக்கும் சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் வசனம் கமனம் தானம் விசர்க்கம் ஆனந்தமாகிய பத்துக்கும், அந்தமிலா - முடிவில்லாத பூதங்கள் ஐந்தினுக்கும் பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயமாகியவைந்துக்கும்,

சிந்தைக்கவர்

மூன்றுகுற்ற மூன்றுகுண மூன்றுமல மூன்றலத்தை
யென்றுமினஞ் செய்யு மிருவினைக்கும்—

(இ-ள்,) சிந்தைகலா மனத்தைக்கலக்குகின்ற, மூன்றாகுற்றம் காமம் வெகுளி மயக்கமெனு மூன்றுகுறைகள், மூன்று குணம் சாத்துவிதம் இராசதம் தாமதம் ஆகியமூன்றுகுணங்கள், மூன்று மலம் ஆணவம் கன்மம் மாயை யென்று மும்மலங்கள், மூன்றவத்தை கேவலம் சகலம் சுத்தமெனு மூன்றவத்தைகள், என்று நின்று பொருந்தி முறை பிறழாது புசிப்பிக்கின்ற, இருவினைகளும் புண்ணிய பாவமிரண்டினுக்கும்,

தோணருத

வாயுவொரு பத்துக்கு மாறாத வல்வினையே
யாயகிளைக்கு மருந்திற்கும்—

(இ-ள்,) தோணருத பிரகிருதியடசமில்லாத, வாயுவொரு பத்துக்கும் பிராணன் அபானன் உதானன் வியானன் சமானன் நாகன் கூர்மன் கிரிகரன் தேவதத்தன் தனஞ்சயன் ஆக பத்துவாயுக்களுக்கும், மாறாத விடாத வல்வினையேயாய் வலிமைபொருந்திய வினைகளேயாகிய, கிளைக்கும் உறவினுக்கும், அருந்திக்குமாகவும் வருந்தித்தேடிய செல்வத்துக்கும்,

நேயமா

இச்சை கிரியை யிவைதரித்திங் கெண்ணிலா
வச்சங் கொடுமை யவைபூண்டு—

(இ-ள்.) நேயமாம் இவைகளின் வசமாம், இச்சை கிரியை யிவைதரித்து இச்சா ஞானக்கிரியா ரூபனாய், இங்கு இப்புவியில் எண்ணிலா அளவில்லாத, அச்சம் பயம், கொடுமை தீமை, அவைபூண்டு அவைபெற்று.

கச்சாலவா

சீரணிலை நில்லாமற் றிண்டாடோ பலகருவி
வாரி யகப்பட்டு மயங்கினேன்—

(இ-ள்,) கச்சாலவன் அரையில் பாம்பினைக்கச்சையாகக்கொண்டமுதல்வன் திருவாய்மலர்ந்தருளிய, சீரணிலை சிறப்புப்பொ

ருகிய ஆகமவழியில், நில்லாமல் நடவாது, இண்டாடும் அல்கக்குழியும், கருவிவாரி தத்துவங்களாகிய சமுத்திரத்தில் அகப்பட்டு மூழ்கி மயங்கினேன் கரைதெரியாது அலைந்தேன்.

தேருங்கால்

உன்னை யொழிய வுறவில்லை யென்னுமது
தன்னை யறிவைத் தனியறிவை—

(இ-ள்) தேருங்கால் ஆராயுங்கால், உன்னை முதல்வனாகிய தேவரீரை, ஒழிய அல்லாது உறவில்லை வேறுதுணையில்லை என்னுமது தன்னை என்று சொல்லப்பட்ட முறைமையினை, அறிவை சிவவறிவை, தனியறிவை சிவவறிவை.

முன்னம்

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றையவ ரென்று—

(இ-ள்) முன்னம் பூர்வத்தில், தீரத் துறந்தார் விசாரித்து முழுதுந்துறந்தவர், தலைப்பட்டார் முத்தியையடைந்தவராவர், மற்றையவர் அப்படித் துறவாதவர், மயங்கி மருண்டு, வலைப்பட்டார் பிறப்பாகிய வலையில் அகப்பட்டவராவர் என்று என்று,

நிலைத்தமிழின்

தெய்வப் புலமைத்திருவள் ளுவருரைத்த
மெய்வைத்த சொல்லை விரும்பாமல்—

(இ-ள்) நிலைத்தமிழின் உலகத்தில் நிலைபெற்ற தமிழினுள், தெய்வப்புலமை, தெய்வத்தன்மைபொருந்திய புலமைவாய்ந்த, திருவள்ளுவர். திருவள்ளுவதேவநாயனார், மெய்வைத்தசொல்லை, உண்மையாகத் திருவாய்மலர்ந்தருளிய திருக்குறளினை, விரும்பாமல், அன்புறாமல்,

ஐவர்க்கு
மாவதுவே செய்தங் கவாவழியைத் தப்பாமற்
பாவமெனும் பௌவப் பரப்பழுந்தி

(இ-ள்) ஐவர்க்கும், பஞ்சேந்திரியங்கட்கும் ஆவதுவே, ஆனகாரியங்களினையே, செய்து முடித்து, அங்கவாவழியைத் தப்பாமல் அவைகளின் வசமடவாமல், பாவமென்னும் நாகமென்னும் பௌவப்பரப்பு பிறப்பாகிய சாகரத்தில் அழுந்தி முழுகி,

பூவையாதங்
கண்வலையிற் பட்டுக் கலவிக்கடலிற் பயின்றங்
குண்மை யறிவுணர்ச்சி யோராமல்

(இ-ள்,) பூவையென்னும் மாதர்களின், கண்வலையில் கண்களாகிய வலைகளில், பட்டு சிக்கி கலவிக்கடலில் மதனநூல் முதலியவற்றுள், பயின்று தேர்ந்து, அங்கு அவ்விடத்து, உண்மை மெய்மையாகிய அறிவு அறிவினைவிளைவிக்கும் உணர்ச்சி கலவியை ஓராமல் ஆராயாமல்,

திண்மையினு
னாவிற் கொடுமை பலபிதற்றி நாடோறுஞ்
சாவிற் பிறப்பிற் றலைப்பட்டிங்கு

(இ-ள்) திண்மையினால் வலிமையினால் நாவில் நாவினைக்கொண்டு, கொடுமைபல அனேகமான தீங்குகளை பிதற்றி விடாது பேசி நாடோறும் எந்நாளும் சாவில் இறப்பிலும், பிறப்பில் ஜனிப்பிலும், தலைப்பட்டு எதிர்த்து இங்கு இப்புவியில்.

ஆவியிலே
நிற்கும் வகைபாராய் நிலையான நெஞ்சமே
பொறுபினுடன் யானே புகலக்கேள்—

(இ-ள்) நிலையான என்னுடன் எப்போதும் நிலையாயுள்ள, நெஞ்சமே மனமே ஆவி ஆன்மாவானது நிலைநிற்கும் வந்நாளுமே

ப்படித்தாயிருக்கும், வகைபாராய் வித்தையாலோசிக்கக்கடவு
ய், பொறபினுடன அதுடன, யானே நானே, புகல்கேன் அத்
தவித்தை உனக்குச் சொல்லுவேன கேட்பாயாக.

வெறபின்மிசை

வந்திருக்க வல்லான் மதியாதா வல்லரணம
செந்தழலின மூழ்கச் சிரித்த பிரான—

(இ ள) வெறபினமிசை-வெள்ளியங்கிரியின மீது, வந்திருக்க எழுந்தருளியிருக்க, வலலான வலலவன், மதியாதார ஒருவரை யும் வணங்காதவர்களாகிய வசுரர்களின, வலலரணம வலிமை பொருந்திய வெள்ளி பொன இரும்பு முதலியவற்றாலாகிய மதி லாற சூழப்பட்ட கோட்டைகளை, செந்தழலின அக்கினியில் மூழ்க அழிந்துபோம்படி, சிரித்த புன்னகைசெய்த, பிரான கட வுள்

அந்தமிலா

வேத முடிவில் விளைவில் விளைவிலொளி
யாதி யமல னிமலனருள—

(இ ள) அந்தமிலா முடிவிலாததனேகமான, வேதம் வேதங் களின, முடிவில அந்தத்தில், விளைவில சத்தத்தின, விளைவில் பொருளாயிருக்கின்ற, ஒளி சோதியா, ஆதி சகலத்திற்கும் தலை மையான, அமலன அறிவே மனமில்லாதவன, நிமலன் நின்ம லன, அருள அருள்மயமாகிய,

போத

வுறிவி லறிவை யறியு மவர்கள்
குறியுள புகுதுங் குணவன்—

(இ ள) போதவறிவில் ஞானமயமான வறிவின் கண்ணே, அறிவை சிவத்தை, அறியும தரிசிக்கும், அவர்கள் சென்முத்தர்

கள், குறியுள் இதயத்தில், புகுதும் எழுந்தருளும், குணவன் இயல்புடையவன்.

நெறிகொள்

வெளியில் வெளியில வெளியன வெளியி
லொளியி லொளியி லொளியன—

(இ-ள்) நெறிகொள் அடைவான வெளியில் ஆகாயத்தினது வெளியில அதற்குக்காரணமான பிரகிருதியில, வெளியன அதற்காதாரமான கலா ரூபமாயுள்ளன, வெளியில அக்கலையின் ஒளியில் அக்கலைக்குமேலாகிய அசுத்தமாயையில ஒளியில அதற்கப்பாற்பட்ட சுத்தவித்தையில, ஒளியன அதைக்கடந்த வித்துவிலிருப்பவன.

ஒளியி

லளியி லளியி லளிய னளியி
லளவி லளவி லளவன—

(இ-ள்) ஒளியில் அவ்வித்துவில, அளியில அவ்வித்துவைக் கடந்த சதாசிவத்தில அளியில அச்சதாசிவத்தின் மேலானபராசத்தியில, அளியன அப்பராசத்திக்காதாரமான பரசிவன், அளியின் அத்தகைய பரசிவனெயினும், அளவில் எண்ணல் எடுத்தல் நீட்டல் குறுக்கல் என்பனவற்றினுக்கும், அளவில அவற்றினுக்கு மேற்பட்ட காட்சி கருதலுரைமுதலிய வற்றினுக்கும், அளவன அதனினுமிக்க முதனடு வீறினமையான தனியளவினன்,

அளவிறந்து

நின்றா னனைத்து நிறைந்தா னினைப்பவர்பாற்
சென்றா னறியத் தெரியாதான்—

(இ-ள்.) அளவிறந்து இவ்வளவென எல்லைப்படுத்தற் கரியனாய், நின்றான் உள்ளவன், அனைத்தும் பிரபஞ்சமுழுதும், நிறைந்தான் வியாபகமானவன், நினைப்பவர்பால் தியானிப்பவரிடத்து

சென்றுன் எழுதருளுபவன், தெரிய ஆனயபோதத்தாலறிய தெரியாதான் அறியப்படாதவன்.

குறைறு

விளக்காய நிறைந்த விரிசுடரான் விண்மேற்
றுளக்காம னின்ற பெருஞ்சோதி—

(இ-ள்,) குறைறு குறைபடாத, விளக்காய தீபமாய், நிறைந்த எங்கும வியாபியான, விரிசுடரான பரவிய சோதியான, விண்மேல ஆகாயத்தில, துளக்காமல தானே பிரகாசியாது, நின்ற சோம சூரியாக்கினியாய நின்ற, பெருஞ்சோதி பெரிய வொளிரூபமாயுள்ளவன.

உளக்கண்ணுக்

கல்லாது தோன்று வமல னகிலமெலா
நில்லாம னின்ற நிலையினன.

(இ-ள்) உளக்கணணுக்கு அறிவினுக்கு, அல்லாது அல்லாமல், தோன்று புறக்கண்களுக்குக் காணுத, அமலன பரிசுத்தமானவன அகிலமெலாம சிதபிரபஞ்சமெல்லாம, நில்லாமல வேறு பிராமல, நின்ற (கண்ணொளியானம போதமபோல உடனுய நின்ற நிலையினன பூரணனுயநிறபவன.

சொல்லாரு

மீசன் பெருமை யிருவினை யேன்றனக்குப
பேசுந் தகைமையெலாம பேணிக்கேள்—

(இ-ள்) சொல்லாரும வேதாகமங்களில் பொருந்திய, ஈசன் முதல்வனது, பெருமை மகிமைகளை, இருவினையேன புண்ணிய பாவங்களிற கட்டுப்பட்ட பெத்தனுகிய நான, உனறனக்கு மண மாகிய வுனக்கு, பேசும எடுத்துச்சொல்லும தகைமை யெலாம பெருமையெல்லாம, பேணிக்கேள் விரும்பிக்கேட்பாயாக.

பாசம்

பலவுங் கடந்து பரிந்தருள்சேர் பண்பாற்
குலவி விளங்குங் குணக்குன்றே —

(இ-ள்) பாசமலமும் ஆணவம் கன்மம் மாயையாகிய மலங்களின் காரியகாரணங்களை, கடந்து அவற்றிற் றோயாது அப்பாற் சென்று, பரிந்து விரும்பி, அருள் கிருபையினை, சேர் பொருந்திய பண்பால் குணத்தினாலே, குலவி பாராட்டி விளங்கும் அடியார் இதயந்தோறும் பிரகாசிக்கும், குணக் குன்றே, நற்குணமே சொரூபமாகிய மலையானவனே,

இலகவே

செய்ய தருமச் செழுங்கிரியின் மீதிழிந்து
வையம் பரவமகிழ்ந் தெழுந் தங்கு —

(இ-ள்) இலகவே ஒளிவிடவே, செய்ய செவ்விய, தருமம் புண்ணியமான செழுங்கிரியின் மீது அழகிய மலையின் மேல் இழிந்து இறங்கி, வையம் உலகம் பரவ வணங்க, மகிழ்ந்து சந்தோஷித்து, எழுந்து எழுந்தருளி, அங்கு அவ்விடத்து,

ஐயம்

களவுபயங் காமங் கொலைகோபங் காதி
உளவில் வினையெல்லா மழிந்திங்கு —

(இ-ள்) ஐயம் சந்தேகம், களவு திருட்டு, பயம் அச்சம், காமம் ஆசை, கொலை கொல்லல், கோபம் சினம், காதி இவைகளைக் கெடுத்து, அளவில எண்ணிறந்த, வினையெல்லாம் துன்பங்களை யெல்லாம், அழிந்து ஒழிந்து, இங்கு இவ்விடத்தில,

உளமகிழ்ந்

தோம்மெனவே யெங்கு முழங்கிச் சுருதிபல
செம்மைதரு மாகமங்கள் சேர்ந்தோத —

(இ-ள்) உளமகிழ மனமபூரிகக, தொழுமெனவே தொம்மே
னு மகாவாககிய வொலியோடு, எஙகும எவவிடததும, முழஙகி
ஆரவாரிதது நிறகும, சுருதி நானகு வேதஙகளிடததும, பயிலத
ஙகிய செமமைதரும உணமையான ஞானததைதக கொடுககினற
ஆகமஙகளை இருபததெடடாக மஙகளில சோநதோடி தஙகவியா
பிதது.

மும்மலத்தின்

காடடங்க வோபறிநதுக கல்விக கரைகடநதங
கோடுபல பூதத துணாவழிநதது—

(இ-ள்) மும்மலத்தின் மூனறுமலங்களின, காடுகாடானது
அடஙக ஒஙகாதுகுளறிவிட, வோபறிநது அடியோடலைநது, க
லவி அபரஞானமாகிய சமுததிரததின, கரை கரையினை கடந
து தாணடி, அஙகு அவவாவ விடஙகடகு, ஓடி தாவிசசெலலுகின
ற பலபூதநது பிருதிவி அபபு தேயு வாயு ஆகாயமெனனுமைம
பூதஙகளுடைய ஐநதுநானகு மூனறு இரணடு ஒனறு ஆகியஅவ
றறின் குணஙகளின, உணாவு தெளிவை, அழிநது போககி.

நீடுபுகழ்

மெய்வாய்கண மூக்குச செவியெனனப் பேர்பெற்ற
வைவாய வேடகைகை யவாவழிநதது—

(இ-ள்) நீடுபுகழ அதிகப்புகழினை வாய்நத, மெய் வாய்கண்
மூககுச செவி யென்னப் பேர்பெற்ற, மெய வாய் கண மூக்கு
செவி யெனனும பெய்ரகளை வாய்நத ஞானேநதிரியஙகளாகிய-ஐ
வாய ஐநது வாயிலகளினுலாய, வேடகை இரசிககும சததபரி
ச ரூப ரசகந்தமென்றுய, அவா ஆசைகளை, அழிநது போக்கி

நைடிமியல்

வாக்குப்பா தம்பாணி பாயுருபத் தம்பலவு
நீக்கிச் செறிந்து நிறைந்தோடி —

(இ-ள்) நைடிமகீ படுத்தும், இயல தன்மையினையாயுள்ள, வாக்கு பாதம் பாணி பாயு உபத்தமபலவும் வாக்கு பாதம் பாணிபாயு உபத்தமெனப்படும் கன்மேந்திரியங்களின் நீக்கி அவற்றின் செயலாகிய வசனம் கமனம் தானம் விசாக்கம் ஆனந்தமென்பனவற்றை ஒழிந்து, செறிந்து நெருங்கி நிறைந்தோடி நிரம்பிச்சென்று.

போக்கரிய

பந்தமெனுஞ் சோலை பறித்துப் பாந்தலைக்கு
மந்தமனம் புந்தியுட னாங்காரஞ்—சிந்தைவிழ

(இ-ள்.) போக்கரிய நீக்குதற்கரிமையாகிய பந்தமெனும் சங்கற்பவிகற்பங்களாகிய கட்டெனும் சோலை செறிவினை பறித்து-களைந்து, பாந்து சூழ்ந்து அலைக்கும் வருத்தும் அந்த,தேகத்தினிடத்துள்ள மனம் புத்தியுடனாங்காரஞ்சிந்தை அந்தக்கரணங்களாகிய மனம்புத்தி சித்தமகங்காரங்கள் விழ ஒழிய.

மோதி யலைக்கு மருணீாமை முக்குணமுங்
காதி யுரோமமெலாங் கைகலந்து—

(இ-ள்.) மோதி தாக்கி அலைக்கும் வருத்தும் மருளீரமை மயக்கவொப்புரவாயுந்த முக்குணமும் சாத்விக இராசத தாமதமாகிய முக்குணங்களையும், காதி அழித்து உரோமமெல்லாம் உடல்முழுதும் கைகலந்து நிரம்பி.

சீதப்

புளக மரும்பிப் புலன்மயக்கம் போக்கி
விளைவில் புலனமுட்ட மேவி—

(இ-ள்.) சீதம் குளிர்ச்சிபொருந்திய புளகம் மயிர்ச்சிலிர்ப்பு, அரும்பி உண்டாகி புலன் ஐம்புலன்களாலுண்டாகும், மயக்கம் குளினை போக்கி செய்த்து விளைவில் அச்சமபத்திபயில, புலனறிவானது முட்ட கிட்ட, மேவி பொருந்தி.

களபத்தன

மாதர் மயக்க மழிந்துவளா மண்டலத்தின
சோதியொரு மூன்றினையுஞ் சோதித்து—

(இ-ள்,) களபம் கலவைச்சந்தனத்தால் பொலிந்த, தனம் கொங்கைகளையுடைய, மாதா ஸ்திரீகளாலுண்டாகும், மயக்கம், அறியாமையை அழிந்து நீக்கி வளா ஓங்கிய மண்டலத்தின அக்கினிமண்டலம் ஆதித்தமண்டலம் சோமமண்டலங்களிலுள்ள சோதி பிரகாசங்களாகிய ஒருமூன்றினையும் சோமசூரியாக்கினி மூன்றினையும், சோதித்து ஆராய்ந்து,

நீதியிற

லாதார மாறினுஞ்சென் றுறியடல் வாயுக்களை
மீதாள பத்துமிகப்பாரத்து—

(இ-ள்) நீதியிறல் கிரமத்தால், ஆதாரமாறினும் மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆஞ்ஞையெனும் ஆறு ஆதாரங்களிலும் சென்று போய் ஆறிநிறைந்து அடல் வல்லமைபொருந்திய மீதான மேலான வாயுக்கள் பிராணன் அபானன் உதானன் வியானன் சமானன் நாகன் கூர்மன் கிருகரன் தேவதத்தன் தனஞ்சயனெனனும், பத்தும் தசவாயுக்களும் மிகப்பார்த்து மேற்கொண்டோடி,

காதிப்

பிருதிவியப்புத்தேயு வாயுவா காய
முறுதிநில மைந்து மோடி—

(இ-ள்.) காதி கோபிதனு, பிருதிவி யப்புத் தேயுவாயுவாகா யம் மண் புனல் தீ காற்று வெளியென்னும் உற்ற நிலைபெற்ற நிலைமைந்து ஐந்துநிலங்களிலும், ஓடித் தாவி.

மறுவிலா
நான்முகன்மா லீசன் மகேச னலஞ்சிறந்த
தானமுக மைந்தாஞ் சதாசிவமும்—

(இ-ள்.) மறுவிலா குற்றமில்லாத நான்முகன் நிவர்த்திகலைக்கதிபரான பிரமாவும் மால் பிரதிட்டா கலைக்கதிபரான நாராயணனும், ஈசன் வித்தியாகலைக்கதிபரான ருத்திரனும் மகேசன் சாந்திகலைக்கதிபரான மகேசனும் நலம் நன்மை சிறந்த சிறப்புப் பெற்ற முகமைந்தாம் ஈசானம் தற்புருடம் அகோரம் வாமம் சத்தியோசாதமென்னும் ஐந்து திருமுகங்களையுடைய சதாசிவமும் - சாந்தியாதீதகலைக்கதிபரான சதாசிவமும்,

ஆனதொரு
விந்துநா தங்கடந்த சுத்த வெறுவெளியி
லந்தமிலாப் பாழுடங்கத் தேகியபின்—

(இ-ள்.) ஆனதொரு - இவ்வகையாகிய கலைகட்கும் மூர்த்திகட்கும் காரணமானவொரு, விந்து - சுத்தமாயையின் மூர்த்தமுகமான பராசத்தியையும், நாதம் - சுத்தமாயையின் ஊர்த்துவமுகமான ஓசைவடிவாகிய பரநாதத்தையும், கடந்து - மேற்சென்று, சுத்த - நின்மலமான. வெறுவெளியில் - வெட்டவெளியில். அந்தமிலா - முடிவில்லாத. பாழுடங்க - சுத்தசூனியமுழுதும், ஏகியபின் - நிறைந்தபின்,

முந்திவரு
மவ்வறிவுக் கப்பாலுஞ் சென்ற கண்டமுள்ளாகிச்
செவ்வறிவே யாகித் திகைப்பொழிந்தகரு—

(இ-ள்.) முந்திவரு-ஞானபாதங்களின் முற்றபேசப்பட்ட, அவ்வறிவுக்கு-அப்பாற்சத்திவடிவினுக்கு, அப்பாலும்-அப்பாலும், சென்றகண்டம்-போயவிசாரித்த பராந்தத்தை, உள்ளாக்கி உள்ளடக்கி செவ்வறிவேயாகி ஒரேநிலைமையான சுத்தவறிவாகி இலைப்பொழிந்து சந்தேகமில்லாது நீங்கி அவரே அவ்விடத்து.

எவ்வறிவுந்

தானாய வீட்டருளித் தன்னிற் பிரிவில்லா
ஊனாகி யெவ்வுயிர்க்கு முட்புகுந்து—

(இ-ள்.) எவ்வறிவும் பாதாளசத்திநடங்கிப் பராந்தவியாபகம் வரையிலுள்ள சத்துக்களின் ஞானங்களும், தானாய தானேயாகி வீட்டருளி முத்தியுங்கொடுத்து தன்னில் தன்னிடத்து, பிரிவில்லா அபின்னமானவைகட்கு, ஊனாகி திருமேனியாகி, எவ்வுயிர்க்கும் மூவகைப்பட்ட விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலராகிய உயிர்கட்கு உட்புகுந்து உயிருக்கு உயிராய்நிறைந்து.

மேனியிலா

வஞ்சவத்தை யுங்கடந்த தூயபெரும் பேரொளிக்கே
நெஞ்சமெனச் சென்று தலைப்பெய்தி—

(இ-ள்.) மேனியிலா தத்துவங்களாலாய தேகத்திற்பொருந்திய அஞ்சவத்தையும் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் ஆகிய பஞ்சாவத்தைகளையும் கடந்து கடந்து, ஆய பொருந்திய, பெரும் பெரிய பேரொளிக்கே சோதிசொரூபத்தினுக்கே, நெஞ்சமென அடைக்கலமென சென்று அடைந்து தலைப்பட்டு உபாயந்தேடி.

வஞ்சமற்ற

தானந்த மில்லாத தண்ணளியா லோங்கிவரு
மானந்த மென்பதோ ராறுடையான்—

(இ-ள்.) தான் வஞ்சமற்ற வினையால் வேறுபாடு செய்வதல்லது தானயிதொருப்பக்கல சாதலின்றி அந்தமில்லாத முடிவுடைய வொருபொருளாயிராது தண்ணளியால் காருண்ணியத்தினால் ஓங்கி மேலுமேலும் வளர்ந்து வரும் வருகின்ற ஆனந்த மென்ப தோர் நித்தியானந்த சுகமென்பதொன்றுண்டு ஆறுடையான் ஆற்றினையுடையவன்,

ஆனந்தம்

பண்ணும் பயன்சுருதி யாகமங்கள் பார்த்துணர்ந்து
நண்ண வரியதொரு நாடுடையான்—

(இ-ள்.) ஆனந்த சுகரூபத்தினையே பண்ணும் செய்வதற்கு பயன் பிரயோசனமாயுள்ள சுருதி இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்னும் பொதுவான நான்குவேதங்களையும் ஆகமங்கள் அவ்வேதங்களின் பாஷியமாக விளங்கும் சிறப்பான ஆகமங்களையும் பார்த்து விசாரித்து உணர்ந்து உண்மையறிந்து நண்ண அடைதற்கு அரியது அருமையானதாம், ஒரு ஒப்பற்ற நாடுடையான் நாட்டினையுடையவன்,

எண்ணெண்

கலையா லுணர்ந்து கருத்தழிந்து காம
நிலையா தெல்லாமுன் னீத்திருக்கு—

(இ-ள்.) எண்ணெண் கலையால் அறுபத்துநான்குவகைப் பட்ட அபரஞானங்களால், உணர்ந்து அறிந்து கருத்தழிந்து உண்மையினையறியாமல் நொந்து காமநிலையா தெல்லாம் ஆசைக் கேதுவான இழுற்ற போகத்தானங்களெல்லா வற்றையும் முன் னீத்து முன்பு நீக்கி இருக்கு இயவிடத்து.

அலைவறவே

தேட்டற்ற சிந்தை சிவஞான மோனத்தா
லோட்டற்று வீற்றிருக்கு மூருடையான்

(இ-ள்) அலைவற்றவே சலிப்பற்றவே தேட்டற்ற தேர்ந்தவினாறி ஒடுங்கிய சிந்தை மனம் ஆன்மாக்களிடத்துதித்த சிவஞானம் சிவஞானமாகிய மௌனத்தால் மவுனநிலையில் ஒட்டுற்று போக்கு வரவற்று, வீற்றிருக்கும் அனுபூதிமயமாய்ப் பூரணம் பெற்றிருக்கும் ஊருடையான் ஊரினையுடையவன்.

நாட்டத்தால்

தெண்ணீரருவி விழச் சிந்தை மயக்கந் தெளிக்
துண்ணீர்மை யெய்தியுரோம் மெலாம—

(இ-ள்) நாட்டத்தால் கண்களினின்றும் தெண்ணீரருவி வீழ்ந்து, கண்ணீர் சோர, சிந்தைமயக்கம் மனமயக்கம் தெளிந்து தெளியப்பெற்று உண்ணீர்மை மனக்களிப்பு எய்தி பெற்று உரோமமெல்லாம் மயிர்க்கால்கடோறும்,

நண்ணும்

புளகம் புனைமெய்யர் பொய்யிற் கூடாம
லுளகம்பங் கொண்டுளளுருகி—

(இ-ள்.) நண்ணும் பொருந்தும் புளகம் சிலிர்ப்பு, புனை கொண்ட மெய்யர் அடியார்கள் பொய்யிற் கூடாமல் பிரபஞ்சத்திற் சாராமல் உள்கம்பங்கொண்டு மனநடுக்கம்பெற்று உள்ளுருகி நெஞ்சுருகி.

அளவிலா

மூலாயிருக்கு ம்வாஞ்சையுடன் வீற்றிருக்கும் மனத்தை வாங்கவருண்
மேலாய விளங்கலங்கள மெய்யினின—

(இ-ள்,) அளவிலா எல்லையில்லாததா மாலாயிருக்கும் வாஞ்சையுடன் வீற்றிருக்கும் அவர் ஜீவன்முத்தர்களின் மனத்தை இருதயத்தை வாங்க தன்வயப்படுத்த, அருள் அருண்மயமான மேலாய்

விளங்கு எப்பொருட்கும் மேற்பட்டு விளங்கும் அலங்கல் மெய்யினுடைய திருமேனியில் மாலையாகவுடையவன்,

தோலாத

விண்ணம் புவன மலைகட லேழ் பாதாள
முன்னைந்து பூதந் துயிருணர்ச்சி—

(இ-ள்) தோலாத பொருளாய்க் காணப்படாத வானம் ஆகாயமும் புவனம் இருநூற்றறுபத்து நான்கு புவனங்களும் மலை அட்டகுல பர்வதங்களும் கடல் ஏழுசமுத்திரங்களும் பாதாளம் சத்த பாதாளங்களும் ஊன் உடம்புண்டாவதற்குக் காரணமாகிய ஐந்துபூதத்து பஞ்சபூதங்களும் உயிர் எண்ணிறந்த ஆன்மகோடிகளிடத்தும் உணர்ச்சி அவ்வவ் பதார்த்தங்களின் அறிவுகளுக்குத்தக்க,

ஞானமா

யெல்லாமா யல்லவா யென்றுவா ரெண்ணாத்து
ணிலலாம னிறந்தநீள் வாசியான—

(இ-ள்) ஞானமாய் ஞானமாகி எல்லாமாய் கலப்பினாலுடலுயிர்போல அவ்வுயிர்களேயாய் அல்லவாய் பொருட்டன்மையால் கண்ணொருக்கள்போல அவற்றின்வேறாய் எண்ணத்தன்னில் நில்லாமல் பேதமாயிராமல் நிறைந்து அபேதமாய்க் கலந்துநிற்கும், நீள்வாசியான வேகமாய்ச்செல்லுங் குதிரையினையுடையவன்,

சொல்லாரும்

பாதாள மூடுருவிப் பாரேழும் விண்ணேழு
மாதார மாயகண்ட நிறைந்து—

(இ-ள்) சொல்லாரும் நூல்களிற் சொல்லப்பட்ட பாதாளம் ஊடுருவி அதோமுக வுலகங்களையுஞ்சென்று, பாரேழும் மத்தி

யகதமானஎழுலகங்களுக்குமவிண்ணேழுமஊர்த்துவமுசமானமே லேழுலகங்களுக்கும, ஆதாரமாகி நிலையாகநிறைபதற்காதாரமாகி அகணடநிறைநது-சுததமாயாலோகமெஙகணுநிரமபி,

ஓத

வரிதா யெளிதா யருமறையா றங்கத்
துருவா யுயிரா யுணாவாய—

(இ-ள) ஓத-சுட்டிசசொலலுதற்கு, அறிதாய் காடசியிறபட, லல், எளிதாய-ஞானவானகளருளால நிதறகெளிதாய்,அருமறை-அருமையானவேதஙகளும,ஆறஙகதது-சிடசைகறபமவியாகரண மநிருததம சோதிடம சததமெனனும ஆறஙகஙகளின, உருவாய் ரூபமாய,உயிராய கலபபினுல ஆனமகோடிகளாய, உணாவாய அவவுயிாகளில விளஙகும அறிவுமாதநிரையாய,

பொரிதாய

வெயயதுயாப பாசமற வீசியே வெமபிறவித
துயய கடலைத துகளெழுபபி—

(இ-ள) பெரிதாய சாவவியாபியாகிய,வெயய கொடுமையானா துயா துனபிணைசெயயும,பாசம கடடை,அறவீசியே முறறுமெ றிநது வெமபிறவி கொடியபிரப்பெனனும துயய நீராறசுததமாகிய கடலை புறவிககடலை துகளெழுபபி நீாவறறிததுளெழுமபும படிசசெயது,

ஐமமூறும

காமக குரோதமதமாச்சரியங் காயநதடாததுக்
சாமத தொழிலின றலைமிதிதது—

(இ-ள')ஐயமுறும கிலேசநிலைசசெப்புகினற,காமமவிருப்பம், குரோதம சினம மதம செருககும மாசசரியம பொருமையாகிய

வற்றை,காய்ந்து கோபித்து, அடர்ந்து எதிர்த்து சாமத்தொழிலி ன் பிரபஞ்சுக்குக் காரணமான புவனத்தொழிலை, மிதித்து நசுக்கி,

நாமத்தாற

கத்துஞ் சமையக் கணங்களின் விறற் கட்டழித்துத்
தத்தம பயங்கொலைக ளாங்கழித்தே—

(இ-ள்.) நாமத்தால பலபெயர்களால், கத்துமபித்தறும்சமையக்கணங்களின் அகப்புறச்சமயம் புறச்சமயம் புறப்புறச்சமயம் ஆகிய மூக்கூறுச்சமயங்களின், விறல வலியவாதத்திறம கட்டழித்து பொய்க்கட்டுப்பாட்டை யொழித்து, தத்தம தங்கள் தங்கள் பயம அச்சம் கொலைகளாம கோறலாதியாம, கழித்தே நீக்கியே

தத்திவரும்

பாசக் குழாத்தைப படவழித்துப பாவையாத
மாசைக் கருத்தை யறவீசி—

(இ-ள்) தத்திவரும ஆன்மாக்களின்மீது சூழும, பாசக்குழாத்தை பிரபஞ்சவாசனைகளை படவடித்து தலையெடா தொதுக்கி பாவையாதம மாதர்களின ஆசைக்கருத்தை அவர்வாகியவெண்ணத்தை அறவீசி முற்றுநீக்கி,

நேசத்தா

லானவே கங்கொண் டருண்மும மதத்திற
லூனையார் தத்துவங்க ளுள்புகுந்து—

(இ-ள்.) நேசத்தாலான அன்பாலாகிய வேகங்கொண்டு விரைவினைவாய்ந்து அருள் கிருபையாம முப்மதத்திறல ஆணிசக்தி, ரோதயித்திரியென்னு மூன்றுசத்திகளாலாய மதங்களால ஊனையார் உடலைக்கலந்த தத்துவங்களுள் தத்துவக் கூட்டங்களுள் புகுந்து பிரவேசித்து

தேனைப்
பருகிக் களித்துயர்ந்த பனமறைநாற் கோட்டான்
மருவித் திகழ்ஞான வானையான—

(இ-ள்) தேனை ஆனந்தத்தேனை பருகி குடித்து களித்துச்சல்லாபமடைந்து உயர்ந்த வீறிட்ட பனமறை நாற்கோட்டாலபல வேதங்களை நான்குகொம்புகளாக மருவி பொருந்தி திகழ பிரகாசிக்கின்ற, ஞானவானையான பரஞான வானையினை யுடையவன.

இருமுச்
சமையங் கடந்து தனக்கொப்பிலாத
சுமைதனை நீக்குந் துவசன—

(இ-ள்) இருமுச்சமையம் அகச்சமையங்க ளாறினுக்கும் கடந்து அப்பாற்பட்டு தனக்கொப்பிலாத சமதியாகப் பொருந்துதலிலாத சுமை பிரபஞ்சபாரமாகிய துன்பம் துயரை நீக்குமழிக்கும், துவசன கொடியினையுடையவன

கமையொன்றித்
தன்மை மறந்து தழலொளியுள் ளேயிருத்தி
யிம்மை மறுமை யிரண்டகற்றி—

(இ-ள்.) கமையொன்றி பொருமைவாய்ந்து தம்மைமறந்து ஆனமாவிறுக கன்னியமானவற்றை மறந்து தழலொளி அக்குனியை உள்ளேயிருத்தி மூலாதாரத்திலெழுப்பி இம்மை மறுமை இகபரங்களின இரண்டகற்றி இருவகைப்பட்ட வாசனைகளை அகற்றி நீக்கு.

செம்மையே
வாயுவை யோடா வகையிறுத்தி வானத்து
வாயுவையு மங்கே யுறவமைத்து—

(இ-ள்.) செம்மையே கிரமமாகவே வாயுவை இடைபிங்கலைக் கோ டாவண்ணம் வெளியில் செல்லாதவிதம் நிறுத்தி தம்பிக்கச்செ ய்தது வானத்து இவ்வாயுக்களுக்கு காரணமாய ஆகாயத்திலவுமவா யுவையும் பூதவாயுவினையும், அடிகே உள்ளே வாங்காதபடி உற பொருந்த, அமைத்து நிறுத்தி,

தேயுவா

லென்று மொருதகைமை யாயிருக்கு மின்பருளே

நின்று முழங்கு நெடுமுரசோன—

(இ-ள்,) தேயுவால் சுழுமுனை நாடியினுண்டாய் வாயுவினால் என்றும் - (மூலாதாரத்தில் சொலிக்கின்ற அக்கினியை யெழுப் பிலலாடத்தானத்துள்ள சந்திரமண்டலத்திற்றாக்கி யதினின்று சொட்டுமமிர்தத்தை யுண்டு) எக்காலத்தும் ஒருதகைமையாய்ச் சரிரை மூப்பு மரணமுதலியவின்றி வச்சிரகாயமான) ஒரே தன்மையாகவிளங்கி, இருக்கும் எழுந்தருளியிருக்கும் இன்பரு ளே அன்பான திருவருளினையே நின்று நிலைபெற்று முழங்கும் சப்திக்கும் நெடுமுரசோன பேரொளியான வாத்தியமாக வுடை யவன்,

அனறியு

மாலு மயனும வகுத்தறிந்த வையமெல்லாஞ்

சாலுமிதற கப்பாலு மெப்பாலும—

(இ-ள்,) அனறியும அல்லாமலும் அயனும பிரமாவுமமாலும் விண்டுவும, வகுத்தறிந்த முறையே சிருட்டித்தும காத்துமவரு கின்ற வையமெல்லாம பிரகிருதிக்குக் கீழ்ப்பட்ட உலகமெல்லாம சாலும மிருக்கு இதற்கப்பாலும, இப்பிரகிருதிக்கு அப்பாறப ட்ட அசுத்தமாயா புவனங்களும எப்பாலும மேலுமுண்டாய வு லகங்களும,

மேலை

யுலகு முலகா லுணரவொண்ணா தூந்
திலங்கி நடக்குமெழி லாணையான—

(இ-ள்) மேலையுலகும் சுத்தமாயா புவனங்களும் உலகாலித் தலைய உலகங்களிலுள்ள எவ்வகைப்பட்ட வாத்துமாக்களாலும் உணர அறிதற்கு ஒண்ணு எட்டாத, ஊரும் ஒ. ஊரினையும் இலங்கி இவ்வுலகமெல்லா வற்றினும் விளங்கி நடக்கும் தன்னருள் நடக்கப்பெற்ற எழில் அழகுபொருந்திய ஆணையான செங்கோ லுடையவன்.

அலகிறந்த

காட்சியான் காட்சிக்குங் காணாக் கலைஞான
வாட்சியா னாட்சிக்கு மாயினான—

(இ-ள்,) அலகிறந்த எண்ணிறந்த வான்மகோடிகட்கு காட்சியான் அவரவர்கள்கொண்ட கோட்பாட்டிற்குத் தக்கபடி அருள்புரியும் பலதன்மைகளை யுடையவன் காட்சிக்கும் தற்போதமுனைந்திட்டறியுங் காட்சியினுக்கும் காணான் அறியப்படாதவன் கலைஞானம் வேதாகமமுதலிய அபரஞானங்களால் நிச்சயிக்கப்பட்ட ஆட்சியான உரிமையினையுடையவன் ஆட்சிக்கும் அவ்வேதாகமங்களால் நிச்சயிக்கப்பட்ட வுரிமையினுக்கும் ஆயினான் நுண்மையானவன்.

சூட்சியான

பாருந் திசையும் படரொளியா லேநிறைந்தான்
றாருந் தலையுமிலாத் தோன்றலான—

(இ-ள்) சூட்சியான் நுண்ணியன் பாரும் பூமியும் திசையும் எட்டுத்திக்குகளும் படர் சஞ்சரிக்கின்ற ஒளியாலே சோமசூரியாக்கினிகளாலே நிறைந்தான அவற்றினுக்குப் பிரகாசித்திலேக

கொடுத்து நிறைவினையுற்றானை, ஈறும் ஆதியும் - தலையும் அந்தமும் இலா - இல்லாத தேசனமலான அநாதி நித்தியனானவனை,

வேராகி

வித்தாகி வித்தின் முளையாகி மேவுதனுச்
சத்தாதி பூதங்க ளாகி—

(இ-ள்,) வித்தாகி - (தாவரங்கட்குப் பொருந்து முயிர்கட்கு முதற்காரணமான) விதையாகி' வேராகி - (அவ்விதைக்கு நிலையாய) மூலமாகி, அவ்வித்தின் - அவ்விதையின், முளையாகி - (சினையடை தளிர் முதலியனவாய்க் காரியப்படுவதற்கு) அங்குரமாய், மேவும் - சங்கமங்களாய்ப் பொருந்திய வுயிர்கட்கு, தனுச்சத்தாதி தேகமுதலிய வாதாரவாதி, பூதங்கடாமாகி - (அத்தனுக்களுக்குக் காரணமான) பிருதிவியாதி பூதங்களாகி,

சுத்த

வெறுவெளியாய்ப் பாழாய் வெறும்பாழுக் கப்பா
லுறுபொருளாய் நின்ற வொருவன்—

(இ-ள்,) சுத்த - (இத்தகைய பிரகிருதிகளை யதிட்டித்துக் காரியங்களை யாக்கினானாயினும்) அபரவிந்துவாய், வெறுவெளியாய் அபரநாதமாய பாழாய் பரவிந்துவாய, வெறும்பாழுக்கு - பரநாதத்திற்கு அப்பால் - மேற்பட்டு உறு - பொருந்திய, பொருளாய் - திரிபுடியற்ற முதல்வனாய நின்ற - தானே தானாய நின்ற, ஒருவன் - ஒப்பற்றவன்,

பொறியிலியென்

வெம்பும் பிறவியிலே வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனியென் றம்பிரான்—

(இ-ள்.) பொறியிலியென் - (மெய்யாதிபொறிகள் உடைத்தானவனாயினும் அவற்றைத் திருவருள் மாட்டே செலுத்தாமை

யால் அப்பொறிகள் இளைமையைப்போன்ற வெனது, வெய்பும் துயரவழியினால்வாட்டிய, பிறவியலை - பிறவிக்கடலில், வீழாமல்- அழுந்தாமல் வீடளித்த - மோட்சத்தையருளிய, சமபந்தமாமு னி சமபந்தமாமுனியென்னு மருமைத்திரு நாமத்தைப்புனைந்த னைத்தம்பிரான் - என்சுவாமி.

அம்புவியார்

போற்றுந்திருவடியென் புன்றலைமீதேபொறித்தோ
னேற்றின் புறத்தமைந்த வெங்கோமான் —

(இ-ள்,) அம்புவியோர் இவ்வுலகிலவாழும் பெரியோர்கள் போற்றும் - ஏத்தும், திரு - அழகிய, அடி, பாதத்தை, என் - எளியேனது, புன் - அற்பமாகிய, தலைமீதே - சிரசினமீதில் பொறித்தோன் - விளங்கத்திட்சித்தவன், ஏற்றின் - (புண்ணியரூபமாகிய) நந்தியம்பெருமானது, புறத்து - முதுகினமீது, அமைந்த - எழுந்தருளிய, எம்கோமான் - நம்கடவுள்,

சாற்றுவார்

சாற்றும்பொருளான றனிமுதல்வன் றானல்லான்
வேற்றினப மில்லா விளங்கொளியான—

(இ-ள்,) சாற்றுவார் - பலசமயத்தவர்கள், சாற்றும் - எடுத்துச்சொல்லும், பொருளான - (அவரவர்கொண்ட கருத்துக் கிசைந்த பொருளாயிருப்பவன், தனிமுதல்வன் - சாமனாகித்திருப்பவன், தானல்லான் - சுட்டிறந்தவனுயுள்ளவன், வேற்றினபம - பிளவுபட்டசுகத்தினை, இல்லா - வாய்க்கப்பெறாது, விளங்கு - பிரகாசிக்கின்ற, ஒளியான - சுக சொரூபமாய்ப் பிரகாசிக்கப்பட்டவன்

போற்றும்

குருவேட மாகிக் குணங்குறியொன் றில்லாப்
பெருவேட மாய்நிறைந்த பெம்மான்

(இ-ள்.) போற்றும் எல்லாராலேயும் தோத்தரிக்கப்பட்ட குருவேடமாகி (இருவினையொப்பும் மலபரிபாகமும் சத்திநிபாதமும் அமைந்த சகலான்மாக்களைப் பிரட்சிக்கும் பொருட்டு) ஆசாரியக்கோலம் புனைந்து குணம் (அத்தகைய திருமேனிகொண்டானாயினும்) தனக்கெனவொரு குணமும் குறி தனக்கெனவொரு அடையாளமும் ஒன்றில்லா ஏதேனுமில்லாத பெருவேடமாய பெரியகோலமாய நிறைந்த வியாபகமான பெம்மான் கடவுள்,

கருவேடங்

கட்டுமுருக் கட்டறுத்தான் கற்றவர்வாழ் தில்லையா
னெட்டுமவர்க் கெட்டா வியல்பினான்

(இ-ள்.) கருவேடம் (நாலாவகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பினுக்காதாரமான) பிறவிக்கோலத்திற் கேதுவாய, கட்டு - ஆணவமுதலிய வற்றினையும், உருக்கட்டு - அவற்றால் விளைந்த தனுவாதிகளையும், அறுத்தான் - நீக்கினவன், கற்றவர் - வேதாகமங்களிற் றேர்ந்தவர்கள், வாழ் - தங்கப்பெற்ற, தில்லையான் - சிதம்பரத்தெழுந்தருளி யிருப்பவன், எட்டுமவர்க்கு - தற்போதத்தா லளவைகொண்டு விசாரிப்பவர்க்கு, எட்டா - அவரறியாவகைக் கெட்டாத, இயல்பினான் - தன்மையினன்,

மட்டவிழ்தார்

வானோனைப் பவனி வரக்கண்டு வல்வினையே
னேனோரு மேத்துதல்கண் டேத்தினேன்—

(இ-ள்.) மட்டு - தேனானது, அவிழ் - சிந்தப்பெற்ற, தார் - கொன்றைமாலையினையுடைய, வானோனை - (பெண்ணாடகத்தைத் திருப்படைவீடாகக்கொண்ட மறைஞானசம்பந்த முனியாகிய) தேவனை, பவனிவரக்கண்டு - உலாபோதலைத் தரிசித்து, ஏனோரும் - அனேகமான வுண்மையடியார்களும், ஏத்துதல்கண்

ட - தோத்திரித்தலைப்பாராது, வலவினையேன் - வலியமலசத்தி யாகிய நானும், ஏத்தினேன் - தொழுதேன்,

தானென்னைப்

பார்த்தான் பழையவினைப்பஞ்சமலக் கொத்தையெல்லாம்
நீத்தா னினைவுவே றாக்கினான்—

(இ-ள்.) தான் - அப்பெருமான், என்னை - ஏழையை, பார்த்தான் - திருநோக்கால திட்டித்தான், பழைய - அநாதிசம்பந்தமான, வினை - வினையாகிய, பஞ்சமலம் - ஆணவம் கன்மம் திரோதாயம் மாயை மாயேயம் ஆகிய ஐந்துமலங்களின், கொத்தை - கூட்டத்தினை எல்லாம் - யாவற்றினையும், நீத்தான் - சுட்டெரித்தான், நினைவு - என்னுடைய சீவவறிவை, வேறாக்கினான் - சிவவறிவிற் சேர்த்திட்டான்.

ஏத்தரிய

தொண்ணூற் றறுவாய்ப் பெருக்கிற் றுவக்கறுத்தான்
கண்ணூறு தேனமிர்தங் காட்டினான்—

(இ-ள்) ஏத்தரிய மதித்தற்கரிய, தொண்ணூற்றறுவாயில் தொண்ணூற்றாறு தத்துவங்களாலாய, தொக்கின் - உடலின் துவக்கு - துன்பமனைத்தும், அறுத்தான் - ஒழித்தான், கண்ணூறு தம்திருநேத்திரங்களிற் றதும்பிய, தேனமிர்தம் - தேனினையும் அமுதத்தினையுமொத்த திருவருளினை, காட்டினான் - தரிசிப்பித்தான்,

வெண்ணீறும்

வேடமும்பூசையுமே மெய்யென்றான் பொய்யென்றான்
மாடையும் வாழ்க்கை மனையுமே—

(இ-ள்.) வெண்ணீறும் - விபூதியும், வேடமும் - உருத்திராக்கமணி கல்லாடை முதலாயவேடமும், பூசையுமே - சிவபூசையுமே மெய்யென்றுன - மோட்சவேதுவினுக்குக் காரணமாய சத்தியபதார்த்தங்களென்றுன, மாடையும் செல்வமும் வாழ்க்கையும் - பிரபஞ்சவாழ்வும் மனையுமே, பெண்டிர்முதலியவுமே பொய்யென்றுன - நிலையில்லாத அசத்தியபதார்த்தங்களென்றுன,

நாடரிய

வஞ்செழுத்தி னுள்ளீ டறிவித்தா னஞ்செழுத்தை
னெஞ்சழுத்தி நேய மயலாக்கி—

(இ-ள்.) நாடரிய - அரிதறகரிய, அஞ்செழுத்தின் - பஞ்சாக்கரத்தின, உள்ளீடு - (பதிபசுபாசமமைந்திருக்கும்) உளரகசியத்தை, அறிவித்தான - தெரிவித்தான, அஞ்செழுத்தை - பஞ்சாக்கரத்தை, நெஞ்சழுத்தி - மனமிருத்தி, நேயமயலாக்கி - அன்பாலாசைபபெருக்கி,

அஞ்செழுத்தை

யுச்சரிக்குங் கேண்மை யுணர்த்தியதி லுச்சரிப்பு
வைச்சிருக்கு மந்த வழிகாட்டி

(இ-ள்) அஞ்செழுத்தை - பஞ்சாக்கரத்தை, உச்சரிக்கும் - (இடசிதா சிகாரமுதலாகவும் அதிட்சதா நகாரமுதலாகவும்) செபிக்கும், கேண்மை - சம்பந்தத்தினை, உணர்த்தி - அறிவித்து, அதில - அந்தமகாமந்திரத்தில, உச்சரிப்பு - (நகாரத்தில திரோதசத்தியும், மகாரத்திலமலமும், சிகாரத்தில சிவமும், வகாரத்தில் அருளும், யகாரத்தில் ஆன்மாவுமாகின்ற) உச்சரிப்பினை, வைச்சிருக்கும் - நிலைப்பித்திருக்கும், அந்தவழி - அந்தச் சோபானமார்க்கத்தை, காட்டி - வெளிப்படுத்தி,

அச்சமறச்
சென்று விளக்கையெழுத் தூண்டிச் செழுஞ்சுடரி
னொன்றி யொருவிளக்கி னுள்ளொளியாய—

(இ-ள்) அச்சமற - மனச்சஞ்சலநீங்க, சென்று - அதோமுகமாக நோக்கி, விளக்கை - அவ்விடத்து அவ்வமையத் துண்டான தீபத்தை, எழுத்தூண்டி - சிகாரவட்சரத்தைக்கொண்டு சொலிப்பித்து, செழுஞ்சுடரின் - மாட்சிமைதங்கிய சோதிரூபமாகிய அசிகாரத்தை, ஒன்றி - தாதான்மியமாகப் பொருந்தி, ஒரு விளக்கின் - ஒப்பற்ற தீபம்போன்ற வகாரமாகிய சத்தியினால், ஒளியாய - உள்ளே பிரகாசிப்பதாய,

நின்ற
பெருவிளக்கின் பேரொளியி லுள்ளே பிரச
மருவு மலர்போல மதித்தங்கு—

(இ-ள்) பெருவிளக்கின் - யகாரமான வான்மதீபத்தின்பேரொளியின் - பெரியசோதியின், உள்ளே - மத்தியிலே, பிரசம் - ஆனந்தத்தேன், மருவும் - பொருந்தும், மலர்போல் - தாமரைமலர்போல, மதித்து - ஒன்றைப்பாவித்து, அங்கு - அந்தக்கமலத்தில்.

உருவினுருக்
கொள்ளாவருளைக் கொளுத்திக் குணங்குறியொன்
றில்லா விடத்தே யிளைப்பாறி—

(இ-ள்) உருவில் - மாயையில், உருக்கொள்ளா - தோயாத அருளை - திருவருளினை, கொளுத்தி - அத்தாமரையிற் பிரவேசிப்பித்து, குணம் - பண்பும், குறி - அடையாளமும், ஒன்றில்

லா - ஒன்றுமில்லாத, இடத்தே - தானத்திலே, இளைப்பாற்றி (சென்மமரணதாபமார்கிய,) சோபத்தைநீக்கி,

விள்ளாத

வுள்ள முதலாக வுற்றதெல்லாம் வாங்கவருள்
வெள்ள மயலரித்த மேவினான—

(இ-ள்,) விள்ளாத இனிவாய்திறந்து பேசவழக்கில்லாத, உள்ளம் உயிர்முதலாக, உற்றதெல்லாம் - பொருந்திய உடல் பொருள் யாவினையும், வாங்க தனதாகக்கொண்டு வெள்ளமயல (அதற்குப்பதிலாக) கருணைப்பிரவாகத்திற் றிளைக்கும் களிப்பினை அளித்து தலைப்பிரேடாது மேவினான என்றேடிரண்டறக்கலந்தனன்.

கள்ள

மறப்பித்தான மெய்ஞ்ஞான மாக்கி மனமெல்லா
மிறப்பித்தா னென்பிறவி யீர்த்தான.

(இ-ள்,) கள்ளம் எனக்குண்டாய அஞ்ஞானத்தினை, மறப்பித்தான தலையெடாதபடி செய்தான மெய்ஞ்ஞானம் பேரறிவினா ஆக்கி எனக்குண்டாக்கி மனமெல்லாம் மனமாதிகரணங்கள் யாவும் இறப்பித்தானே கெடுத்தானே என்பிறவி (தோன்றியதும்தோன்றுவதுமான,) எனது சனமங்களை ஈர்த்தான (அவற்றிற்குக்காரணமாயிருந்த சஞ்சிதவித்தினை,) பிளந்திட்டான,

விறற்சொல்லுக்

கெட்டானை யார்க்கு மெழுதா வியற்குணக்
கொட்டானை யாற்று வெழுதறிந்ன—

(இ-ள்.) விறல் பெருமைபொருந்திய, சொல்லுக்கு வைகரியாதிவாக்கு விகற்பங்கள் பற்றிநிகழும் வேதாதிகட்கு எட்டா

னை எட்டாதவனும் யார்க்கும் எத்தன்மையினார்க்கும் எழுதாவிண ணத்தன்மை யென்றெழுதவொண்ணாமல் இயல்பான சுபாவமான குணங் களான குணங்கள் எட்டான (முடிவிலாற்றல் தன்வயத்தனாதல் இ யற்கையுணர்வு முற்றுமுணர்தல் பேரருளுடைமை வரம்பிலின்ப ம் தூயவுடம்பு பாசங்களினீக்கமென) எட்டுடையவனும் ஆறாறு (அபரஞான முழுவதினையும்) செய்யும் எழுத்தினுள்ள பிரணவ சொரூபியானவன்.

மட்டாரும்

பாடலா ராடலார் பண்பலார் நண்பலா
ராடலா ராட லகன்பதியாம்—

(இ-ள்) மட்டாரும் (பாத்தூலின்) அளவுபொருந்திய பா ட்லார் இசைப்பாவினுக்குத் தக்கபடி ஆடலார் தாண்டவத்தை ச்செய்பவர் பண்பலார் (இத்தன்மைய ராயினும்) தனக்கென வோ ரியல்பில்லாதவர் நண்பலார் தனக்கென வோர் விருப்பமில்லாத வர் ஆடலார் அவிநயர் ஆடல் நடனம் அகன்பதியாம் எங்கும்ப ரவிய விசாலமான நகரமாகும்.

கூடலார்

காணக் கிடையாதான் காண்பார்க்குக் காட்சியான்
பாணர்க் கிலகு பலகையிட்டான்—

(இ-ள்) கூடலார் - (துவாத சாந்தத்தலமாகிய) திருவால வாயுடையார் காண ஊனநேத்திரத்தாற் பார்க்கக் கிடையாதவன் கிட்டாதவன் காண்பார்க்கு அறிவால் விசாரிப்பார்க்கு காட்சி யான புலப்படுபவன் பாணர்க்கு (மேற்சொன்ன திருவாலவா யென்னும்பதியில்) பாணபத்திரர்க்கு, இலகு பிரகாசிக்கின்ற ப லகையிட்டான் பலகையொன்று கொடுத்தனுப்பினன்,

சேணிற்

சிறந்த வுருவான் றிருமாலுங் கெட்டா
னிறைந்த திருவுருவாய் நிற்போன் —

(இ-ள்.) சேணில் ஆகாயத்தில் மாலைக்காலத்திற் றோன்றும் செவ்வானத்தைக் காட்டிலும் சிறந்த மிக்க நிறத்தினைவாய்ந்த உருவான திருமேனியையுடையவன் திருமாலுக்கு (உலக முழுவதையுமளந்த நாராயணனுக்கும்) எட்டான கண்ணுக்குங் கூடாதவன் நிறைந்த சர்வ வண்டங்களிலும் வியாபகமான திருவுருவாய அழகிய சொரூபமாய் நிற்போன் எழுந்தருளியிருப்பவன்

கறங்குடனே

சூறை சுழல் வண்டு சுழல்கொள்ளி வட்டமெனு
மாறில் கருணையினான் மாற்றினான் —

(இ-ள்.) கறங்குடனே (எழுவகைப்பட்ட எண்பத்துநான்கு நூறாயிர பேதமான யோனிவகைகளிலும்) காற்றாடியுடன் சூறை சுழற்காற்று சுழல்வண்டு வட்டமிட்டுழலும்வண்டு சுழல்கொள்ளி காதத்திற் பிடித்துச் சுற்றும் கொள்ளிக்கட்டை யாகியவட்டமெனும் வகைபோல மாறிமாறிப் பிறக்கும் வேகச்சுற்றினை மாறில் யாதொரு கைம்மாறில்லாமலே கருணையினால் தனக்கு இயற்கையாயுள்ள கிருபையினால் மாற்றினான் நீக்கிச் சலிப்பற நிறுத்தினான்.

நிறைந்த

மெய்ய னமல விமலனருள் வீட்டிக்கு
மைய னறியுக்கறி வாயினான் —

(இ-ள்.) நிறைந்த விபூதிபூத்த மெய்யான் திருமேனிவாய்ந் தவன் அமலன் பரிசுத்தமானவன் விமலன் அழுக்கியே மனமில்லா

தவன் அருள் அருண்மயமாகிய சுத்தாத்துவித வீடு சிவசாயுச்சிய முத்தியினை அளிக்கும் பாலிக்கும் ஐயன் முனைஞன் அறிவுக்கு ஆன்மகோடிகளின் சிற்றறிவினுக்கு அறிவால அவற்றைப்பிரே ரேபிக்கும் பேரறிவுடையவனும் ஆயினன் விளங்கினன்.

பொய்யர்பாற்
பொய்மையாய் நின்றனபுரிந்தவாதநெஞ்சத்துள்
மெய்மையாய் நின்றுவிளங்கினன்—

(இ-ள்.) பொய்யர்பால அஞ்ஞானிகளிடத்து பொய்மையாய் சூனியமாய நின்றன மறைந்திருப்பவன, புரிந்தவாதம் வழிபட்டார்களது, நெஞ்சத்துள மனதினகணே மெய்மையாயசத்தியமாய நின்று எழுந்தருளி விளங்கினன தோன்றினன,

கைமழுவா
னத்தன்பா னீசென் றடையுமிடத் தையெல்லஞ்
சித்தஞ்சோ நெஞ்சமே செப்பக்கேள்—

(இ-ள்,) கைமழுவான (அந்தக்கையினுயிலும்) திருக்கரத்தில் மழுவாயுதத்தையுடையவன், அத்தனபால (இந்தகைய) சுவாமியினிடத்து நீசென்று நீபோய அடையும சேரும்போது இடத்தையெல்லாம (வழியில பலவிடையூறுகளை விளைவிக்கும்) இடங்களையெல்லாம சித்தஞ்சோ அந்தக்கரணங்களின பாற்பட்டநெஞ்சமே மனதே செப்பக்கேள் நான் சொல்லுவதைக் கேட்பாயாக,

நித்தலுமே
பூசிமுடித் துண்டுடுத்துப் பூங்குழலார்தங்கலவி
யாசைதனிற் படிவப வாகவிக்கு—

(இ-ள்,) நித்தலுமே நாடோறுமே பூசி சந்தனகஸ்தூரிகளைப்பம ணிந்து முடித்து பரிமள புட்பங்களைச்சூடி உடுத்து பட்டு பீதாம்

பரமதரித்து உண்டு அறுவகை சுவையுடன்கூடிய நால்வகைப் புசிப்பினைப் புசித்து பூங்குழலார்தம்-மலரணிந்த கூந்தலையுடை யமாதர்களது கலவி புணர்ச்சியாகிய ஆசைதனில் மோகத்தில் பட்டு கட்டுப்பட்டு இன்பவாரகலிக்கு இன்பசமுத்திரத்தில்

சேர்முற

நின்று திளைக்கு மிதுமுத்தி யல்லதுவே
றொன்று திளைக்கு மதுமுத்தி யன்றென்று

(இ-ள்) சேர்முற ஆசைபொருந்த நின்று நிலையாக விருந்து திளைக்கும (பிரத்தியட்சமாக) அனுபவிக்கும, இதுமுத்தி, இதுவே உண்மையான மோட்சமாம் அல்லது இதுவல்லாமல்வேறொன்று (ஆன்மா பரமான்மா வுண்டென்றும நரகமோட்ச முண்டென்றும் அனுமானவாகம வாதிகளாற்பேசும) வேறுவிதமாக வொன்றுகூறி திளைக்கும அனுபவிக்கும அதுமுத்தி அது உண்மையான மோட்சம அன்று அல்லவாம் என்று இவ்விதமாகக் கூறி,

இல்கா விருளலகை போல்கலே பேசு
முலகா யுதன்பா லுறாதே—

(இ-ள்,) இல்கா வாழ்ந்த இருள் அஞ்ஞானத்தை வாய்ந்த அலகைபோல பேயைப்போல இகலே குற்றமே பேசும பிதற்றுகின்ற உலகாயுதன் சாருவாகனிடத்தில உறாதே அவன வலையிற் படாதே,

பல்காலுங்

தாய்பிரமங் கண்டவர்போற் றம்மைக்கண் டாங்கதுவே
காண்பிரம மென்பவர்பா லண்ணுறதே—

(இ-ள்.) பலகாலும் எந்தவேளையும் தாம் ஆன்மாவாகிய தங்களையும் பிரமம பரமான்மாவாகிய பரத்தினையும், கண்டவர்போல் விசாரித்திரண்டற வனுபவிக்கும் சீவன் முத்தர்களைப்போல, தம்மைக்கண்டு - கருவிகளை நீக்கித்து ஆன்மாவாகிய தன்னைத்தரிசித்து, ஆஙஙதுவே, அஙஙனம தரிசித்தநிலையிலேயே திருத்தியடைந்து, நான்பிரமம - அகமபிரமம, எனபவர்பால் - என்றுசாதிக்குமயர் வாதியர்களிடத்தில், நண்ணாதே - அவர்மயக்கிலமயங்காதே

கொன்றிடுவதெல்லாங் கொலையல்லவென்று குறித்
தென்றுமற மேதெய்வ மென்றென்று - வென்றி

(இ-ள்.) ஊனறனக்கு - தேகத்தினை வளர்க்கும் பொருட்டாகக் கொன்றிடுவதெல்லாம் மிருகாதிகளைக்கொலை, செய்துண்ணுவதெல்லாம் கொலையல்லவென்று பாவமாகாதென குறித்திருமானித்து என்றும் எக்காலத்தும் அறமே புண்ணியமேதெய்வமென்று கடவுளெனக்கூறி என்றும் வென்றி இத்தகையபுண்ணியத்தினில் செயமடைந்து,

பொறையேயெனும்புத்தனபொல்லாத புன்சொல்
பிறையே விரும்பி விழாதே—

(இ-ள்.) பொறையே (நட்புபகையிரண்டிலும் விருப்புவெறுப்பின்றி) பொறுமையாகவிருத்தலே எனும் முத்தியெனச் சாதிக்கும், புத்தன் பௌத்தமதத்தினனது, பொல்லாத தீமையாகிய புன்சொல் அற்பசொல்லாம் பிறையே குழுத்தினையே விரும்பி நாடி விழாதே அத்தமோறறத்தி லுழையாதே,

நிறைமேவி
வாழ்பவர்போல்மன்னுடலின் மன்னுமுரோமம்பறித்துத்
தாழ்வுநினை யாதுதுகி லுணகற்றி—

(இ-ள்,) நிறைமேவி (ஒருயிர்க்குந் துன்பத்தைச்செய்யப்படாதெனும்) மாட்சிமையினையடைந்து, வாழ்பவர்போல வாழ்கின்றவர்களைப்போ னடித்து மன்னுடலில் தனக்குநிலையான தேகத்தில் மன்னும் தங்கும் உரோமம் உரோமங்களை பறித்து பிடுங்கி தாழ்வுநினையாது உயிர்களையிம்சியாது துகிலதானகற்றி ஆடையணியாது (மரவுரிதாங்கி)

ஆழிக்கு
மஞ்சு மகற்று மதுமுத்தி யென்றுரைக்கும்
வஞ்சமணன் பாழி மதியாதே—

(இ-ள்) ஆழிக்கும் பிறப்பினிலழுந்தும் அஞ்ச, (உருவம் வேதனை குறிப்புபாவனை விஞ்ஞானமெனனும்) பஞ்சகந்தங்களை அகற்றும் நீக்குவதே அதுமுத்தி அதுமோட்சமாகும் என்றுரைக்கும் என்றுகூறும் வஞ்சமணன் வஞ்சத்தினைவாய்ந்த சமணனது பாழி அவர்கோயிலை மதியாதே நினையாதே,

செஞ்சொற்புனை
யாதிமறை யோதி யதன்பயனொன் றுமறியா
வேதியர்சொல் மெய்யென்று மேவாதே—

(இ-ள்) செஞ்சொற்புனை மங்களகரமான பதங்களானிறையப்பெற்ற ஆதிமறை பழையவேதங்களை ஓதி நன்றாயாராய்ந்து அதன்பயன் அவ்வேதங்களின் உண்மையினில் ஒன்றும் சிறிதேனும் அறியா கீச்சியாத வேதியர் பாஞ்சராத்திராதியர் சொல் அவ

ர்கூறும் நூல்களை மெய்யெனறு சததியமெனறு மேவாதே அவற்றை வாசிக்கச்சாராதே.

ஆகியினமே

உற்ற திருநீறுஞ் சிவாலயமு முள்ளத்துச்
செறற புலையாபாற செலலாதே—

(இ-ள்.) ஆகியினமேல் பரமேஸவரன திருமேனியின்மீது உற்ற பொருநதிய திருநீறும விபூதியினையும சிவாலயமுமசிவபெருமானெழுநதருளியிருக்கு மாலயததினையும உளளதது மனதின் கணணே செ்றற தியானியாது விடடபுலையாபாலபஞசமாகளிடத்தில் செலலாதே சோாதே,

கறறவஞ்சேர்

வேடமுடன பூசையருண் மெயஞ்ஞான மிலலாத
மூடருடன கூடி முயஙகாதே—

(இ-ள்) கறறவருசோ அரிய தவததோடுஙகூடிய வேடமுடன விபூதிருததிராடச காஷாயமபூணட கோலததுடன பூசை சிவபூசையும அருள் திருவருளைபபொழிகினற மெயஞ்ஞானம சிவஞானமும இலலாத வாயக்சபபெறுத மூடருடன மடையாகளுடனகூடி சகதிதது முயஙகாதே தழுவாதே

வழிததுப பிறப்பு தறியா தாரைப்
பழிததுத் திரிபவரைப பாராதே—

(இ-ள்.) நீட எககாலததும அழிதது பிரமமுதல் பிபீலிகை பரியந்தமுள்ள ஆனமகோடிகளைச் சாவசங்காரகாலத்தில் ஒழித்து பிறப்பது மறுபடியும அசசங்கார காரணனுலேயே உதிப்பு

தும் அறியாது இவ்வுண்மையினை யறிந்துகொள்ளாது அரனை முதல்வனை பழித்து நிந்தித்து திரிபவரை சஞ்சரிக்கின்ற பாவிகளை பாராதே முகாவலோகனம் பண்ணாதே,

விழித்தருளைத்

தந்தெம்மை யாண்டருளுஞ் சம்பந்த மாமுனிவ
னந்தங் கடந்தபா லாயினனென—

(இ-ள்.) விழித்து கருணையமான நேத்திரங்களைத் திறந்து நிட்சித்து அருளை தனது அருட்சத்தியை தந்து என்பால் பதியவைத்து எம்மை அடியேமை ஆண்டருளும் திருவடியினிழ் இறண்டறக் கலக்கச்செய்யும் சம்பந்தமாமுனிவன் முனீந்திராய்விளங்கும் மறைஞான சம்பந்தமூர்த்தி அந்தம் வேதாந்தங்களின் முடிவினில் கடந்து அடங்காது அப்பாலாய் வேறாய் நின்றுன எழுந்தருளுபவன்,

எந்தைபிரான்

வீற்றிருக்கு மோலக்க மெய்தியடி வீழ்ந்திறைஞ்சிப்
போற்றி சயசய போற்றியென—

(இ-ள்.) எந்தை, எமது பரம பிதாவாகிய பிரான் தலைவன் வீற்றிருக்கும் எழுந்தருளியிருக்கும் ஓலக்கம் திருவோலக்கத்தினைத் தரிசித்து எய்தி (பையப்பைய) சென்று அடி அவரது திருவடியில் வீழ்ந்து (சாஷ்டாங்க அஷ்டாங்க பஞ்சாங்க திரியாங்க ஏகாங்கமாக) வணங்கி இறைஞ்சி தோத்தரித்து போற்றிசயசய போற்றியென போற்றிபோற்றி சயசய போற்றியெனவழுத்தி

ஆர்த்தகரி

பன்றுரித்தாய் நின்பவனியாதரித்தாரெல்லோரும்
வெண்மத னம்புபட வீழ்வரே—

(இ-ள்.) ஆர்த்த (தாருகாவனத்தார் அபிசார வேள்வியினின் றும்வந்து) கூச்சலிட்டகரி யானையை அன்று (கஜகாளனோடு கொண்ட) அக்காலத்தில் உரித்ததாய அதனதோலைவாங்கிப்போர் வையாகக் கொண்டாய் நின தேவரீரது பவனி (இரண்டாயிரந் தந்தங்களையுடைய யானையின்மீது வரும்) திருவுலாவினை ஆதரித்தார் ஆசையுடன் தரிசித்தவர்கள் எல்லோரும் சிவனடியார்கள் யாவரும் வெளஜி (ஆண்மாக்களைமயக்குவதில் செய்ததினை வாய்ந்த மதன மன்மதனது அம்பு (புட்பங்களாலாய) பஞ்சபாணங்கள் பட தங்கள்மீதுபட வீழ்வரோ அம்மன்மதன் மாயையில் அகப்படுவரோ?

நின்றிடத்து

நில்லாது செல்வ நிலையென் றுனைநீங்கிப

பொல்லா நரகம புகுவரோ—

(இ-ள்) நின்றிடத்து ஒரேதானத்தில் நில்லாது என்றும் நிலை பெறறிராத செல்வம பிரபஞ்சவாழ்வினை நிலையென்று சத்திய மென்வெண்ணி உனை தேவரீரை நீங்கி (திருவருட்கண்ணியமாக) பிரிந்து பொல்லா தீமையாகிய நரகம நரகத்தினில் புகுவரோ முழுகுவரோ

பல்லோருங்

கத்துஞ் சமையக கணககிற படுவரோ

சித்தம பலகாற றிகைபபரோ—

(இ-ள்) பல்லோரும முக்கூற்றுப் புறச்சமயத்தவர்கள் யாவரும் கத்தும் பிதற்றும சமையக்கணக்கில சமயக் கூட்டத்தின் படுவரோ அகப்படுவரோ சித்தம் மனதில் பலகால் பலதடவைதிகைப்பரோ சந்தேகிப்பரோ,

முத்தம்

பொருத நகைமடவார் புன்கலவி யின்பம்
மருவி மயங்கி வருவரோ—

(இ-ள்.) முத்தம் முத்துக்களை, பொருத ஒத்த, நகை பற்களையுடைய மடவார் மாதர்களது புன் அற்பமாகிய கலவியின்பம் சையோக வின்பத்தினை, மருவி பொருந்தி மயங்கி மோகத்திலமுழ்ந்தி வருவரோ வாழ்ந்துவருவரோ.

இருபொழுது

நாளிருபத் தேழு நவக்கிரக முங்கலியுங்
கோளிதுவென் றெண்ணிக் குறிப்பரோ—

(இ-ள்.) இருபொழுதும் இரவும்பகலும், நாளிருபத்தேழும் இருபத்தேழு நட்சத்திரங்களும் நவக்கிரகமும் நவக்கிரகங்களும் கலியும் இடையூறினைச் செய்யும் கோளிதுவென்று கோள்களென்று எண்ணி நினைத்து குறிப்பரோ மனதில் மதிப்பரோ.

வேளை

யெரித்தவிழி யாய்நின் னின்பக் கடற்கே
தரித்து மதிமறந்த தையல—

(இ-ள்.) வேளை மன்மதனை எரித்த சாம்பராக்கிய விழியாய் நேத்திரத்தை யுடையவனே நின் தேவரீரது இன்பக்கடற்கே சிவானந்தக் கடலினிடத்திலேயே தரித்து தங்கி மதி அறிவானது மறந்த திருவருளிலிணைந்த தையல நாயகியின்.

வருத்தமெலாந்

தீர வெனவுரைத்துச் செங்கமலப் பூந்திருத்தா
டாரா வெனப்பலகாற் றாழ்ந்திறைஞ்சி—

(இ-ள்,) நிருத்தமெல்லாம் சோகமனைத்தும் தீரவுந் தீர்த்தருளுவாய் எனவுரைத்து என் திருச்செவியிலோதி செங்கமலம் சிவந்த தாமரை யினையொத்த பூந்திருத்தாள் அழகிய திருவடிகளை தாராயெனத் தந்தருளுவாயென பலகால் அடிக்கடி தாழ்ந்து வணங்கி இறைஞ்சி தோத்தரித்து (திருவுளமிசையாரோல,)

ஏராரும்
பூங்கொன்றை வாங்கிப் புகழ்ந்துபுரி நெஞ்சமே
யீங்கொன்ற வாரா யினி—

(இ-ள்,) ஏராரும் அழகு பொருந்திய பூங்கொன்றை (சிவ ணைக்கமழும் பிரணவாகாரமான கொன்றைப் பூமாலையினை வாங்கி பெற்றுக்கொள்ள புகழ்ந்துபுரி வாழ்த்துதலைச்செய்யு நெஞ்சமே மனமே ஈங்கு இவ்விடத்து ஒன்ற வென்னிடத்துப் பொருந்த இனி இனிமேல், வாராய் வரக்கடவாய்.

வெண்பா.

வெம்பும் பிறவியலை வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனிவன் றாவாங்கி—யம்புந்தும்
வஞ்சமே வுமவிழியா வல்வினையெல் லாமகல
நெஞ்சமே வாராய் வினைந்து.

நெஞ்சுவிடு தூது
மூலமும்-உரையும்
முற்றுப்பெற்றது.
——()——

